# கிறித்துவ அறிஞர்களின்
# இலக்கணப் பணி

முனைவர் செ.வை. சண்முகம்




உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்

# கிறித்துவ அறிஞர்களின் இலக்கணப்பணி

முனைவர் செ. வை. சண்முகம்
மேனாள் பேராசிரியர், மொழியியல் உயராய்வு
மையம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES,
சி. ஐ. டி. வளாகம். தரமணி, சென்னை-600113

கிறித்துவமும் தமிழும்
அறக்கட்டளைச் சொற்பொழிவு-4
(1, 2-11-93)

Christianity and Tamil Endowment Lecture No. 4
Endowment Lecture No. 42

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | | Kiṟittuva Aṟiñaṟkaḷiṉ Ilakkaṇap paṇi |
| Author | : | Dr, S.V. Shanmugam, Prof. of Linguistics (Retd), Centre of Advanced Study in Linguistics, Annamalai University, Annamalai nagar |
| Publisher & copy right | : | International Institute of Tamil Studies, C.I.T. Campus, Taramani, Madras-600 113 |
| Publication No. | : | 176 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1—11—1993 |
| Edition | : | First |
| Paper used | : | Tamil nadu 16 kg |
| Size | : | 21 × 14 cms |
| Printing types | : | 10 point |
| No. of Copies | : | 1200 |
| No. of Pages | : | VII + 168 |
| Price | : | Rs. 30/- |
| Printers | : | Kavinkalai Achagam 2/141 Kandhasami Nagar Palavakkam, Madras-600 041 |
| Artist | : | Sathya |
| Subject | : | Grammatical works of Christian Scholars |


* அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பல்ல.

# பதிப்புரை

கிறித்துவரின் தமிழ்ப்பணியைச் சிறப்பிக்கும் 'கிறித்துவமும் தமிழும்' அறக்கட்டளையின் நான்காவது சொற்பொழிவு இந்நூல். சொற்பொழிவு அன்றே நூலும் வெளிவருவது மகிழ்ச்சிக்குரியது.

சமயப் பணியுடன் இலக்கியப் படைப்பு, மொழிபெயர்ப்பு எனப் பல துறைகளில் தமிழ்ப்பணி யாற்றியுள்ள மேனாட்டுக் கிறித்துவரின் இலக்கணப் பணியை இந்நூல் ஆய்வு செய்கிறது. குறிப்பாகச் சீகன்பால்க், வீரமாமுனிவர் ஆகியோரின் இலக்கணப் படைப்புகளை வரலாறு, ஒப்பியல், மொழியியல் எனப் பன்முகப் பார்வையில் ஆழமாக ஆராய்ந்துள்ளது. இலக்கண ஆய்வில் அரியதொரு நூலை மிகச்சிறப்பான முறையில் படைத்துள்ள நூலாசிரியர், மொழியியல் வல்லுநர், முனைவர் செ.வை. சண்முகம் அவர்களுக்கு நிறுவனம் நன்றி செலுத்துகிறது.

நிறுவனத்தில் இவ்வறக்கட்டளையைத் தோற்றுவித்த பேராயர் இரா. அருளப்பா அவர்கள், சொற்பொழிவிற்கும் நூலாக்கத்திற்கும் வழிவகுத்த நிறுவன இயக்குநர் (பொறுப்பு) முனைவர் அன்னிதாமசு அவர்கள், மெய்ப்புத் திருத்தியுதவிய திரு. சண்முக வேலாயுதம், சொல்லகராதி தயாரித்துதவிய ஆய்வு மாணாக்கர் திரு. ச. செயசீலன், சிறப்புற, குறித்த காலத்தில் அச்சிட்டுத் தந்துள்ள கவின்கலை அச்சகத்தார் அனைவருக்கும் நிறுவனத்தின் சார்பில் நன்றி.

சென்னை
15-10-93

**ச. சிவகாமி**
அறக்கட்டளைப் பொறுப்பாளர்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்



# ஆசிரியர் அறிமுகம்

செங்குந்தபுரம் வைத்திலிங்கம் சண்முகம் (1932) அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தில் தமிழில் முதுகலைப்பட்டமும் மொழியியலில் எம்.லிட்., பி.எச்.டி., பட்டமும் பெற்றார், மூன்று மாதங்கள் பாலக்காடு விக்டோரியா அரசினர் கல்லூரியில் விரிவுரையாளராகவும் பின்பு அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையில் கிட்டத்தட்ட 4 ஆண்டுகள் பயிற்றுனராகவும், அடுத்து மொழியியல் உயர்ஆய்வு மையத்தில் விரிவுரையாளர், இணைப் பேராசிரியர், பேராசிரியர், இயக்குநராகவும் பணியாற்றிவிட்டு ஜூலை 1992-ல் ஓய்வு பெற்றார். உயர் ஆய்வுக்காக (1972-73) இங்கிலாந்துநாட்டு ரெட்டிங் பல்கலைக் கழகத்திற்குச் சென்ற போது சமூகமொழியியல் பயிற்சி பெற்றதோடு இலண்டன் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் இருந்த சுவாமிநாதம் என்ற ஐந்திலக்கண நூலைப் படியெடுத்து வந்தார்.

இந்திய நடுவண் அரசு மூன்றாண்டுகாலம் (1976-78) இந்தோனேஷியாவிற்கு இந்தியக் கல்வியின் வருகைதரு பேராசிரியராக (Visiting Professor of Indian Studies) அனுப்பிவைத்தபோது எழுதிய இந்தோனேஷியா மொழிப்பண்பாட்டுக் கட்டுரைகளின் தொகுப்பை, பண்பாட்டுத் தொடர்புக்கான இந்திய குழுமம், புதுடெல்லி (Indian Council for Cultural Relations, New Delhi) நூலாக வெளியிட்டுள்ளது. அதன் பயனாகத் தமிழ் எழுத்து மொழியில் செய்யவேண்டிய வரிவடிவத் திருத்தம், எண்ணிக்கை மாற்றம், சொல்லெழுத்து (Spelling) மாற்றம் ஆகியவை பற்றி எழுதிய 'எழுத்துச்சீர்திருத்தம்' என்ற தமிழ் நூலை அனைத்து இந்திய தமிழ்மொழியியல் கழகம் வெளியிட்டது.

Naccinarkikniyar's Conception of phonology, Dravidian Noun (A Comparative Study), The language of Tamil Inscriptions : 1250-1350 A.D., ஆகிய மூன்று ஆங்கில நூல்களையும் சுவாமிநாதம் மூலமும் உரையும், சுவாமிநாதம் விருத்தியுரை (பதிப்பு) என்ற இரண்டு தமிழ் நூல்களையும் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

அனைத்திந்திய மொழியியல் கழகம், Aspects of language development in Tamil, மொழியும் எழுத்தும், எழுத்திலக்கணக் கோட்பாடு, சொல்லிலக்கணக்கோட்பாடு— I & II ஆகிய நூல்களையும், மணிவாசகர் பதிப்பகம் மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும் (சங்ககாலம்), சொல்லிலக்கணக்கோட்பாடு—III, மலையாளமொழியின் முதல் இலக்கணம் ஆகிய நூல்களையும் வெளியிட்டுள்ளன. 'மொழிவளர்ச்சியும் மொழிஉணர்வும் (சங்க காலம்)' 1989 ஆம் ஆண்டு சிறந்த மொழியியல் நூலுக்கான தமிழ்ப்பல்கலைக்கழகப்பரிசு பெற்றது.

ஆங்கிலத்திலும் தமிழிலும் 100க்கும் மேற்பட்ட கட்டுரைகள் பல்வேறு பல்கலைக்கழக இதழ்களிலும், தேசிய இதழ்களிலும், அனைத்துலக இதழ்களிலும் வெளிவந்துள்ளன. மலையாளம் பற்றிய மூன்று கட்டுரைகள் மலையாளத்தில் மொழிபெயர்த்து' கேரளப்பல்கலைக்கழகங்கள் வெளியிட்டுள்ளன.

தற்போது மொழியியல் திறனாய்வு, இலக்கணக் கோட்பாட்டு வளர்ச்சி ஆகியவற்றைப்பற்றி ஆராய்ந்து வருகிறார்,

# முன்னுரை

'கிறித்துவ அறிஞர்களின் இலக்கணப்பணி' என்ற இந்த நூல் ஐரோப்பிய-தமிழ் அறிஞர்கள் பிறமொழியிலும் தமிழிலும் எழுதிய இலக்கணநூல்களை மொழியியல் நோக்கில் விளக்குகிறது. பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பாவிலிருந்து சமயப் பணிக்காக வந்தவர்களில் இருவர் ஜெர்மானியர்—(சீகன்பால்கு, பெப்ரீஷியஸ்), ஒருவர் இத்தாலியர்—(பெஸ்கி), ஒருவர் செக் நாட்டவர்—(ப்ர்சிக்ரில்) இலக்கணநூல்கள் எழுதியதாக அறிய முடிகிறது. அவர்கள் எழுதிய நூல்கள் லத்தீன் மொழியிலும் ஆங்கிலமொழியிலும் (பெப்ரீஷியஸ் இலக்கணம்) தமிழிலும் காணப்படுகின்றன. அந்த நூல்களில் நான்குநூல்கள் (3 லத்தீன் மொழியில் எழுதியதும் 1 தமிழில் எழுதியதும்) மட்டுமே ஆராயப் படுகின்றன. பொதுவாகப் பிற மொழியில் எழுதப்பட்ட இலக்கண நூல்கள் சகஊழியர்களுக்காக எழுதப்பட்டவையாகக் கருதலாம். தமிழ்மொழியில் எழுதியது தமிழ் அறிஞர்களுக்கும் பயன்படத்தகுந்ததாகக் கொள்ளலாம். இங்கு முக்கியமாகப் பிறமொழியில் எழுதிய தமிழ் இலக்கணங்கள் தமிழ் இலக்கண ஆய்விலும், கல்வியிலும் இடம்பெறவேண்டியவை என்று சுட்டிக் காட்டத்தகுந்தது, ஏனெனில் அவை தமிழ்மொழி அமைப்பு பற்றிய பல புதிய உண்மைகளையும் இலக்கண ஆய்வு பற்றிய புதிய சிந்தனைகளையும் கொண்டவை. எனவே இங்கு எடுத்துக் கொண்ட நான்கு இலக்கணநூல்கள் காட்டும தமிழ் மொழி அமைப்புகள், தமிழ்மொழி ஆய்வுக்குக் காட்டிய புதிய ஆய்வு நோக்குகள், அந்த இலக்கணங்கள் உருவாக்கமுறை, ஆகியவை களைத் தனித்தனியாக விளக்கியதோடு, பொதுவாகக் கிறித்துவ அறிஞர்களின் பணிபற்றிய சில பொதுமைகளும் அந்த இலக்கணங் களின் பொதுப் பண்புகளும் குறிப்பிடப்பட்டுள்ளன.

என்னுடைய இலக்கண ஆய்வில் இது இலக்கண வளர்ச்சி வரலாறு (உருவாக்கமும் கோட்பாடும்) என்ற திட்டத்தின் கீழ் தற்காலத் தமிழ் இலக்கணங்களின் வளர்ச்சி வரலாறு பற்றிய முதல் தொகுதியாகக் கருதத்தகுந்தது.

இந்த நூல் உருவாக வாய்ப்பு அளித்த சென்னை உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தாருக்கும் இது தொடர்பான நூல்களைத் தந்து உதவிய பேராசிரியர்கள் வி.மி. ஞானப்பிரகாசம், க.ப. அறவாணன், சூ. இன்னாசி ஆகியவர்களுக்கும் என் நன்றி உரியது.

கட்டுரைகளைப் படியெடுத்துக் கொடுத்த திருவாளர்கள் சா. இளங்கோ M.O.L, B.Ed., பாரி M.A., B,Ed., ஆராய்ச்சி மாணவியர்களான செல்வியர்கள் அ. மணிமேகலை, சி. கலைமகள் ஆகியவர்களுக்கும் என் வாழ்த்தும் நன்றியும்.

**முனைவர் செ. வை. சண்முகம்**

# உள்ளே

# கிறித்துவ அறிஞர்களின் இலக்கணப் பணி

## 1.1. முன்னுரை

பழைய காலத்திலிருந்தே தங்கள் சமயத்தைப் பரப்புவதற்காக அந்தந்த சமயத்தைச் சார்ந்த துறவிகள் வெளிநாடுகளுக்குச் சென்று சமயப் பணியோடு மொழிப் பணியும் செய்துள்ளார்கள். இந்தியாவில் சமண - பவுத்த துறவிகளும் ஐரோப்பாவில் கிறித்தவ பாதிரிமார்களும் தங்கள் சமயத்தைப் பரப்புவதற்காகத் தாங்கள் செல்கிற நாட்டு மக்களின் மொழியைக் கற்று அந்த மொழிக்கு எழுத்தாக்கம் செய்தல், அந்த மொழியில் இலக்கணங்களும் பாட நூல்களும் சமய நூல்களும், எழுதுதல் போன்ற பல மொழிப் பணி களைச் செய்துள்ளார்கள்.

கிறித்துவ சமயம் ஆசியாவில் தோன்றிய சமயம் ஆனாலும் இந்தியாவுக்கு அது ஐரோப்பா வழியாகத்தான் வந்தது. இதற்குக் கடந்த ஐநூறு ஆண்டுகளாகவே தெளிவான வரலாற்று ஆதாரங்கள் கிடைக்கின்றன. இந்த வரலாறு பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்து துவங்குகிறது.

பதினைந்தாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ஏற்பட்ட அறிவியல் முன்னேற்றமே ஐரோப்பியர்களைப் பிற கண்டங் களுக்குப் பயணம் செய்யவும் அதன்மூலம் வர்த்தகம் செய்யவும் வாய்ப்பை ஏற்படுத்தியது. உலகம் தட்டையானது அல்ல; உருண்டையானது என்ற விஞ்ஞான பூர்வமான உணர்வு ஓரிடத்தி லிருந்து கடலில் புறப்பட்டால் அதே இடத்துக்கு வந்து சேருவோம் என்ற நம்பிக்கையைத் தந்தது. எனவே ஐரோப்பாவிலுள்ள பல நாட்டினர் கடல் வழிப் பயணம் மேற்கொண்டு புதிய நாடுகள்

இருப்பதை அறிந்து கொண்டார்கள். அதன் மூலம் வணிகத்தைப் பெருக்கினார்கள்; கிறித்துவ சமயத்தைப் பரப்பினார்கள்.

தென்னகத்தைப் பொறுத்தவரையில் போர்ச்சுகீசிய நாட்டு மன்னன் எமானுவேல் ஆதரவுடன் வாஸ்கொடொகாமா என்ற போர்ச்சுகீசியர் 1498ஆம் ஆண்டு மே மாதம் 22ஆம் நாள் கள்ளிக் கோட்டையில் வந்து இறங்கியது இந்திய நாட்டு வரலாற்றிலேயே திருப்புமுனையாக அமைந்தது. முதலில் வாணிகத் தொடர்பாக ஆரம்பித்தது சமயப் பணியாகவும் மாறியது. கி.பி. 1541இல் புனிதர் பிரான்சிஸ் சேவியர் என்ற பாதிரியார் சமயப் பிரச்சாரத் துக்குக் கேரளாவுக்கு வந்து சேர்ந்தார். இதற்குப் பிறகு வாணிகத் துக்காகப் போர்ச்சுகீசியர்களோடு டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர் கள், பிரெஞ்சுக்காரர்கள் எனப் பல நாட்டு வணிகர்களும் இந்தியாவுக்கு வந்தார்கள்; மெள்ள மெள்ள உள்நாட்டு அரசியலில் ஈடுபட்டுத் தங்களுடைய அதிகாரத்தைச் சிறுகச் சிறுக நிலை நிறுத்தி ஆட்சி செய்யவும் தலைப்பட்டு விட்டார்கள்.

இந்த நிலையிலேயே கிறித்துவ பாதிரிமார்கள் மக்களிடையே கிறித்துவ சமயத்தைப் பரப்புவதற்காகத் தாங்கள் சென்ற பகுதியில் வழங்கும் மொழியை முதலில் கற்றுக் கொண்டு சமயப்பணியோடு மொழி ஆராய்ச்சியிலும் ஈடுபட்டார்கள். அந்தச் சமயத்தில் தங்கள் நாட்டில் பழக்கப்பட்ட தொழில் நுட்பத்தையும் அறிவு நுட்பத்தையும் (அறிவியலையும்) பயன்படுத்தியதால் அவர்களின் மொழிப்பணி பாராட்டும் படியாக, அந்தந்த மொழி வரலாற்றில் ஒரு திருப்பு முனையாக அமைந்துவிட்டது. இந்திய மொழிகளில் மொழிப் புதுமையாக்கத்துக்கும் வழிவகுத்தவர்களாகக் கிறித்துவ பாதிரியார்கள் கருதப்படுகிறார்கள். மொழியை எல்லாவிதத்திலும் எளிமை படுத்தினார்கள் என்று அவர்கள் மொழிப் புதுமை யாக்கத்தைச் சுருக்கமாகக் குறிப்பிடலாம்.

மயிலை சீனி. வேங்கடசாமி (1936:15) குறிப்பிடுவதைப் போல 'கிறிஸ்தவர்களால் தமிழுக்கு ஏற்பட்ட அபிவிருத்தி எல்லாம் பாதிரிமாரைச் சேர்ந்ததே. தமிழுக்காகச் செய்யவேண்டும் என்னும் கருத்துடன் செய்யவில்லை. தங்கள் மதத்தைப் பரப்பு வதற்காக செய்த முயற்சியின் பலனே தமிழுக்குச் சில நன்மைகளை அளித்தது',

முதன் முதலில் தமிழகத்துக்கு வந்த கிறித்துவ பாதிரியார் யார் என்று இன்னமும் தெரியவில்லை. கா. மீனாட்சிசுந்தரம் (1974:17) ஜி. பெர்னாண்டெஸ் (Fernandez) 1592இல் மதுரையில்

பணிபுரிந்ததாகக் குறிப்பிடுகிறார். அண்டிறிக்கி அடிகள் (Henry Henriques) 1566இல் போர்ச்சுகீசிய மொழியில் தமிழ் இலக்கணம் எழுதியதாகத் தமிழியல் (ப. 1) கூறுகிறது. எப்படியானாலும் 16ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து கிறித்தவர்களின் தமிழ்ப்பணி நடைபெற்று வருகிறது.

## 1.2. ஆய்வு வரலாறு

கிறித்தவ அறிஞர்கள் தமிழ்ப்பணி பற்றிய பொது ஆய்வு அறுபது ஆண்டு காலப்பழமை உடையது. இதற்கும் மறைமுகமாக அடியெடுத்துக் கொடுத்த பெருமை பேரா. தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரையே சேரும். அவர் 1934இல் நடத்திய தமிழ் மாநாட்டில் கிறித்துவக் கல்லூரிப் பேராசிரியர் ச.த. சற்குணர் 'கிருத்துவமும் தமிழும்' என்ற தலைப்பில் சொற்பொழிவு ஆற்றினார் என்று வேங்கடசாமி (1936:3) குறிப்பிட்டுள்ளார். எனவே 'கிருத்தவமும் தமிழும்' என்ற தலைப்பை மீனாட்சி சுந்தரனாரே குறிப்பிட்டுச் சற்குணரைப் பேசச் சொல்லியிருக்க வேண்டும் என்று ஊகிப்பது தவறு ஆகாது. எனவேதான் மீனாட்சி சுந்தரனார் ஆய்வுக்கு அடிகோலிய பெருமைக்கு உரியவர் என்று மேலே கூறப்பட்டது.

சற்குணர் பேச்சைக் கேட்டதே வேங்கடசாமிக்கு அந்த தலைப்பில் ஆராய்ந்து நூல் எழுதத் தூண்டுகோலாக இருந்தது. அவரே 'கிருத்துவமும் தமிழும்' என்ற அவருடைய நூலின் முன்னுரையில் இதைக் குறிப்பிட்டுள்ளார் (1936:1). வேங்கடசாமி நூலே அந்தத் துறையில் முதல்நூல். இதில் அவர் கிறித்துவரால் தமிழ் மொழிக்கு உண்டான நன்மைகளைக் கூறும் நூல் என்ற உள் தலைப்பு கொடுத்து தமிழ் மொழி வளர்ச்சி பெற்ற வரலாற்றின் ஒரு பகுதியாகக் கருதி எழுதியதாக முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். அதற்கேற்ப நூலில் வரலாற்றுப் பார்வை, காலச் சூழல், மனிதர்களின் நோக்கம் ஆகியவைகளை இணைத்து வளர்ச்சிப் பாதையை நிர்ணயிக்கும் என்று விளக்கி அதை ஒட்டிப் பணியும் மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. இது சிறப்பானது. நானூறு ஆண்டுத் தமிழக வரலாறு (1500-1900) உலக வரலாற்றால் பாதிக்கப்பட்டதால் மொழிப் பயன்பாட்டில் ஏற்பட்ட பல்வேறு வளர்ச்சிப் பரிமாணங்களைச் (எழுத்தாணியும் சுவடியும் போய் அச்சும் காகிதமும் வந்தது; செய்யுளோடு உரை நடை இலக்கியத் தகுதி பெற்றது; அதுவே கிறித்துவ பரப்பல்

கருவியாக அமைந்து தமிழில் விஞ்ஞான நூல்கள், புதிய சமயம் பற்றிய நூல்கள்; உலக நடப்புகளை அறிவிக்கும் செய்தித்தாள்கள் வளர்ந்தது, புதிய சொற்கள் புகுந்தது) சுட்டிக்காட்டி தனிப்பட்ட அறிஞர்களின் வாழ்வையும் பணியையும் விளக்கி ஆங்காங்கே மதிப்பீடும் செய்துள்ளார் வேங்கடசாமி.

தனிநாயக அடிகளின் ஆய்வுகள் (1953, 1958) ஐரோப்பிய நாட்டு நூலகங்களில் முடங்கிக் கிடந்த கிறித்துவத் தமிழ் பற்றிய ஆதாரச் செய்திகளைத் தமிழகத்துக்கு அறிமுகப்படுத்தின. அதே சமயத்தில் தமிழ் ஆய்வை வெளிஉலகத்தில் பரப்புவதற்கு, தமிழாய்வை உலகளாவிய நிலையில் புத்துயிர் கொடுப்பதற்கு அவர் பாடுபட்டதும் சிறப்பாக நினைக்க வேண்டிய ஒன்றே.

கிறித்துவ தமிழ் அறிஞர்கள் செய்த இலக்கணப் பணியை மொழியியல் நோக்கில் ஆய்வு செய்து தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் வெளியிட்ட கட்டுரைகள் (மீனாட்சி சுந்தரனார், 1961இல் அவை தொகுக்கப்பட்டுள்ளன) முன் மாதிரிக் கட்டுரை களாகவும் ஆதாரக் கட்டுரைகளாகவும் கருதத்தகுந்தவை.

கா. மீனாட்சி சுந்தரத்தின் முனைவர்பட்ட ஆய்வு நூல் (1974) கிறித்துவத் தமிழ் ஆராய்ச்சியில் ஒருமைல்கல். தமிழகம் முழுமையும் களப்பணி செய்து கிறித்துவபாதிரிகளின் வாழ்வையும் ஆய்வையும் அந்த நூல் விளக்குகிறது.

வி.மி. ஞானப்பிரகாசம், சூ. இன்னாசி போன்றவர்கள் தனி ஆசிரியர்களையும் தனி நூல்களையும் ஆராய்ந்து முனைவர் பட்டம் பெற்றதோடு தொடர்ந்து உழைத்து நூல்கள் வெளியிட்டு வருகிறார்கள். இன்று பல்கலைக் கழகங்களில் கிறித்துவத் தமிழுக்காகத் தனித் துறைகள், பல ஆய்வு நிறுவனங்கள் அறக் கட்டளை நிறுவி இந்த ஆராய்ச்சியை வளர்த்து வருகின்றன. இந்த நிலையில் கிறித்துவத் தமிழ்த் துறைகள் பல நூல்களை வெளியிட்டு வருகின்றன.

சென்னைப் பல்கலைக்கழகக் கிறித்துவத் தமிழ்த் துறை கிறித்துவர் செய்த பணிகளை முறைப்படுத்திக் காட்டும் முயற்சி யில் நான்காவதாகத் 'தமிழியல்' என்ற பொது நூலை வெளி யிட்டுள்ளது (இன்னாசி & விக்டோரியா, 1990). இங்குச் சிறப்பாகச் சுட்டிக் காட்டத் தகுந்தது, கிறித்துவப் படைப்புகளுள்ளும் அனைத்தையும் (உள்ளதையே) காட்டி விட்டோம் எனத் துணி தற்கு மனம் ஒருப்பட்டிலது' என்ற அவையடக்கத்தையும்,

'அரிதின் முயன்றும், அயல்நாட்டு நூலகங்கள், பழஞ்சுவடிக் காப்பகங்கள் சிலவற்றுக்குச் சென்றும் இதுகாறும் வெளிவந்துள்ள நூற்பட்டியல்களைக் கொண்டும் இயன்றவரைக் காட்டப் பட்டுள்ளன. கிடைத்தவற்றுள்ளும் உறுதியாகக் கொள்ளத் தக்கன மட்டுமே சுட்டப்பட்டுள்ளன.' என்ற ஆய்வு முயற்சியையும் அந்த நூலின் முன்னுரையில் படிக்கும் போது ஆராய்ச்சியாளர் களுக்குச் சில எதிர்ப்பார்ப்புகள் ஏற்படுகின்றன. மேலும் நூலின் முன்பகுதியிலும், சில வெளியீடு குறித்து வாசகர்களது கருத்துரை கள் வரவேற்கப் படுகின்றன' என்ற குறிப்பும் நூலாசிரியர்களின் பரந்த மனப்பான்மையைப் புலப்படுத்துகிறது.

ஆனால் அந்த நூலை கிறித்துவத் தமிழ் நூல்களில் ஓரளவு தொடர்பு உள்ளவர்கள் புரட்டும்போது ஏமாற்றத்துக்கு ஆளாக வேண்டியிருக்கிறது. ஏனென்றால் பல வரலாற்றுச் செய்திகள் திரித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன; சில உள்நோக்கத்தோடு நூல்கள் பாகுபடுத்தப்பட்டுள்ளன; ஆராய்ச்சி நெறிமுறையும் சரியாகப் பின்பற்றப்படவில்லை. இதில் வேடிக்கை என்ன வென்றால் இந்த நூலின் மூத்த ஆசிரியரின் நூலும் அந்தப் பல்கலைக்கழகம் வெளியிட்ட நூல்களும் கூட உறுதியான ஆதாரங் களாகக் கொள்ளாமல் அலட்சியப் படுத்தப்பட்டுள்ளன. சில சான்றுகள் :

1. சதுரகராதியை இன்னாசி 1979இல் பதிப்பித்துள்ளார். அந்தப் பதிப்பில் 1824ஆம் ஆண்டு வெளிவந்த முதற்பதிப்பின் முன்னுரையும் சேர்க்கப்பட்டுள்ளது. 19ஆம் நூற்றாண்டுக்குள் மேலும் ஒன்பது பதிப்புகள் வெளிவந்துள்ளதாகவும் அந்த முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் 'சதுரகராதியை சூ. இன்னாசி 1979ஆம் ஆண்டு வீரமாமுனிவர் ஆய்வுக்கழகத்தின் வழி பதிப்பித்துள்ளார். அதுவே மீண்டும் 1989 ஆம் ஆண்டு மாதா பதிப்பகத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது' என்று மட்டுமே தமிழியல்' (ப.36) குறிப்பிடுகிறது.

2. சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட கா. மீனாட்சி சுந்தரத்தின் ஆய்வேட்டிலும் (1974 : 357) சீகன்பால்கு தமிழ் இலக்கணம் 1716ஆம் ஆண்டு வெளியிடப்பட்டதாகக் கூறுகின்றது. இதை ஞானசேகரனும் (1981 :3. 14) உறுதிப்படுத்தியுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறை நூலகத்திலும் 1716 ஆம் ஆண்டு வெளியிட்ட நூல் உள்ளது. ஆனால் தமிழியல் (ப. 14) '1985ஆம் ஆண்டு விட்டென்பெர்க் மார்டின் லூதர்

நிறுவனத்தாரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது' என்ற செய்தியை மட்டுமே தந்துள்ளது.

3. சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட கால்டுவெல் ஒப்பிலக்கணத்தில் கால்டுவெல் எழுதிய இரண்டாம் பதிப்பின் முன்னுரை பதிப்பிக்கப்பட்டுள்ளது. அதில் 1875ஆம் ஆண்டு என்ற குறிப்பும், 19 ஆண்டுகளுக்கு முன்னர் முதல் பதிப்பு வெளியிடப் பட்டது என்ற குறிப்பும் உள்ளன. அந்த நூலில் உள்ள மூன்றாம் பதிப்பு 'பதிப்பாசிரியர்கள் முன்னுரை' என்பதிலும் இந்தச் செய்திகள் உறுதி செய்யப்பட்டுள்ளன. ஆனால் கால்டுவெல் நூல் பற்றிய தமிழியல் தரும் செய்தி (ப. 33); 'இந்நூல் 1959 ஆம் ஆண்டு புலவர் கா. கோவிந்தன், திருவத்திபுரம் புலவர் தா. சிங்காரவேலு ஆகியோரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு... வெளியிடப்பட்டுள்ளது....ஆங்கிலப் பதிப்புகளாக 1956, 1961, 1976 ஆம் ஆண்டு... சென்னைப் பல்கலைக்கழகத்தில் பதிப்பிக்கப் பட்டுள்ளது'.

4 சில நூல்கள் பற்றிய பதிப்பு விவரங்கள் கொடுக்கப்பட வில்லை. உ.ம். மார்க் காலின்ஸ்; திராவிடக்கல்வி (ப.32); சாமுவேல்; திராவிட மொழிகளின் ஒப்பாய்வு (ப.33) முதலியன.

5. நூல் இலக்கணவியல், மொழியியல், அகராதியியல் மொழி பெயர்ப்பியல் என்ற நான்கு பெருந்தலைப்புகளாகவும் ஒவ் வொன்றும் பல சிறு உட்தலைப்புகளாகவும் பிரிக்கப்பட்டே நூல் விவரங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இலக்கணவியல் மூலநூல்கள், விளக்க நூல்கள், ஒப்பியல் நூல்கள் என்று மூன்று உட்பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. 'மூல நூல்கள் என்பவை மொழிக்கான இலக்கணம் கூறும் வகையில் படைக்கப்பட்டுள்ளன', என்றும், 'விளக்கநூல்கள் என்பவை தமிழ் இலக்கணங்களுக்கு உரையோ அல்லது விளக்கமோ தருவன' என்று அவர்களே விளக்கம் தந்து பாகுபடுத்தியுள்ளார்கள். ஆனால் மூல நூல்களாக அண்டிறீக்கி அடிகளின் தமிழ் இலக்கணம் தான் கிறித்துவ அறிஞர்கள் எழுதிய முதல் இலக்கண நூல்; அது கிடைக்கவில்லை என்று குறிப்பிட்டு பெஸ்கியின் மூன்று இலக்கண நூல்களே சேர்க்கப்பட்டுள்ளன. சீகன்பால்கு எழுதிய தமிழ் இலக்கணம், இராபர்ட் அந்தர்சன் எழுதிய இலக்கண நூல் (Rudiments of Tamil Grammar) ஜான் லாசரஸ் எழுதிய தமிழ் இலக்கணம் (A Tamil Grammar) போன்றவைகளை விளக்க நூல்களின் பட்டியலில் சேர்த்திருப்பது 'விளக்கநூல்' என்பதற்கு அவர்கள் கொடுத்த இலக்கணத்துக்கே

முரண் ஆகிவிடுகிறது. பெஸ்கியை முதன்மைப்படுத்திச் சீகன் பால்கு போன்று அவருக்கு முன்னோடியாக இருந்தவர்களைப் புறக்கணித்ததற்கு ஆராய்ச்சி நோக்கம் இல்லாமல் வேறு ஏதாவது உள்நோக்கம் இருக்கலாமோ என்று ஐயப்படத் தோன்றுகிறது. அப்படி இல்லாமல் வரலாற்று உணர்வும் ஆய்வு நோக்கும் கொண்டு கிடைக்கும் முழு விவரங்களையும் கொண்டு நோக்கு நூல் (Reference work) கொண்டு வரும் பணியில் கிறித்துவ தமிழ்த்துறை ஈடுபடுவது கிறித்துவ தமிழ் ஆராய்ச்சியைப் பரவலாக்கும். அவர்களின் சரியான தொண்டையும் வெளிப் படுத்தும்.

## 1.3. தமிழ்ப் பணிகள்

கிறித்துவ அறிஞர்களின் தமிழ்ப்பணி பலவகைப்பட்டது. அவைகளை இன்று நாம் வெறும் பட்டியலாகவே தெரிந்து கொண் டிருக்கிறோம். அதனால் அவர்களின் சில பணி அதற்குரிய இடத்தைப் பெறவில்லை; குறிப்பிடும் பணிகளிலும் அவரவர்கள் சொந்த விருப்பத்துக்கு ஏற்ப சிலவற்றைச் சிறந்த பணியாகவும் வேறு சிலவற்றைச் சாதாரண பணியாகவும் கருதியுள்ளார்கள். சான்றாக, ஞானப்பிரகாசர் (வேங்கடசாமி, 1936 : vi) அச்சு இயந்திரத் தொழில் நுட்பத்தை வரவழைத்துத் தனி வசன நூல்களை ஆக்கும் இயக்கம் தொடங்கியதை முதலில் குறிப் பிட்டுள்ளார். சற்குணர் (வேங்கடசாமி 1936 : xii) தமிழ்மொழி யின் சிறப்பு, தமிழ் இலக்கிய இலக்கணத்தின் சிறப்புகளைத் தமிழர்களுக்கு எடுத்துக் கூறியதை முதலிலும் எழுத்துகளை எளிமைப்படுத்தியதை அடுத்தும் குறிப்பிட்டுள்ளார். கா. மீனாட்சி சுந்தரம் (1974 : 1) முன்னுரையில் உரைநடை வளர்த்ததையும் வடமொழிப் பிடியிலிருந்து தமிழை விடுவித்ததையும் படைப் பிலக்கியத்தில் புதிய பாதை காட்டியதையும் முதலில் கூறியுள்ளார்.

இந்த வேறுபாட்டுக்குக் காரணங்கள் எவை? கால வரிசைப் படுத்திப் பார்த்து அவர்களின் பணியின் முழுப்பரிமாணம், வீச்சு ஆகியவைகளை மதிப்பிடாதது; செயலுக்கு முக்கியத்துவம் கொடுத்து அதன் பின்னணியை மறந்தது ஆகியவை முக்கிய காரணங்களாகும். வடமொழிப் பிடியிலிருந்து தமிழை விடுவித்த பெருமை கால்டுவெல்லுக்கு (1814-1891) உரியதாகக் கொள்ளலாம். அதற்கு முக்கிய காரணம் பதினெட்டாம் நூற்றாண்டின் பின் பகுதியில் ஐரோப்பாவில் வரலாற்று ஒப்பிலக்கணம் என்ற புதிய அறிவு நுட்பம் வளர்ந்ததால் அதனடிப்படையில் தென்னிந்திய

மொழிகளை ஆராய்ந்தபோது அவை வடமொழியிலிருந்து பிறந்தவை அல்ல என்ற உண்மையை உலகத்துக்கு உணர்த்தினார். எனவே அது பத்தொன்பதாம் நூற்றாண்டு வாழ்ந்த கிறித்துவ அறிஞர்களின் பணி; அப்படியே தங்கள் நாட்டில் பழக்கமான அச்சு இயந்திரத் தொழில் நுட்பத்தைத் தமிழகத்திலும் அறிமுகப் படுத்தியதன் துணையினைவே எழுத்துச் சீர்மை, அச்சில் சொல்லுக்குச் சொல் இடைவெளி விடுவது. உரைநடை வளர்ச்சி ஆகியவை. எனவே கிறித்துவ அறிஞர்களின் தமிழ்ப் பணிகளை விளக்கும் போது இரண்டு செய்திகள் மனங்கொளத் தகுந்தவை; 1) அவர்களின் தமிழ்ப்பணி நானூறு ஆண்டு காலப் பரப்பு உடையது. எனவே காலச் சூழலில் மாறுபாடு இருக்கலாம்; இருக்கிறது என்பது; அதை வேங்கடசாமி (1936 : 27) முன்னரே சுட்டிக் காட்டியுள்ளார். எனவே பணியை வரலாற்றுச் சூழலில் வைத்துப் புரிந்து கொள்ள வேண்டும். 2) சில பணிகளை முதன்மை காரணியாகவும் வேறு சிலவற்றைத் துணை காரணி யாகவும் கருதவேண்டும்.

கிறித்துவர்கள் ஏற்படுத்திய மொழியின் வளர்ச்சியிலே இரண்டு காலக் கட்டம் இருப்பதைச் சுட்டிக் காட்டி அதற்கான காரணத் தையும் வேங்கடசாமி பின்வருமாறு விளக்கியுள்ளார்.

'தமிழ் வசன நூல் முதன் முதலில் தோன்றியது 16ஆம் நூற்றாண்டு என்றாலும் அது வேரூன்றி நிலைபெற்று வளரத் தொடங்கியது 19 ஆம் நூற்றாண்டிலே தான்' என்று (ப. 27) கூறுவதால் வரலாற்று நோக்கில் கிறித்துவ அறிஞர்களின் தமிழ்ப் பணி காலத்தை இரண்டு பெரும் பிரிவாகக் கருத வேண்டும் என்பது தெளிவாகிறது.

'தமிழகத்தைக் குறுநில மன்னர்களும் பாளையக்காரர்களும் அரசாண்டனர். பிரெஞ்சு இங்கிலிஷ் கம்பெனிக்காரர் சண்டை களும் கர்நாடக நவாப்புகளின் யுத்தங்களும் பாளையக்காரர் களின் தொல்லைகளும் மராட்டியரின் படையெடுப்பும் ஐதரலி, திப்புசுல்தான் கலவரங்களும் ஆகிய அரசியற் குழப்பங்கள் ஏற்பட்டு நாட்டு மக்களைப் படாதபாடு படுத்திவிட்டன... இந்தக் குழப்ப காலத்திலும் சமயத் தொண்டாற்றி வந்த கிறித்துவ பாதிரிகளும் சைவமடாதிபதிகளுமே ஒருவாறு கல்வியிற் கருத்தைச் செலுத்த முடிந்தது, இச்சிறுபான்மையோராகிய சமய ஊழியர்களிலிலும் ஒரு சிலர் தாம் வசன நூல்கள் இயற்ற முன் வந்தனர்... (ப. 27) 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அரசியற் குழப்பங்களும்

சண்டைகளும் ஒழிந்து ஆங்கில அரசாங்கம் நிலை பெற்றது...இந் நூற்றாண்டில்தான் பாதிரிமார்களாலும் தேசமெங்கும் பாட சாலைகள் நிறுவப் பெற்றன... தமிழ் வசன நூல்கள் ஏராளமாக எழுதப்பட்டன... சென்னைக் கல்விச் சங்கம் (Madras College) என்னும் ஒரு சபை ஏற்பட்டு பாடப்புத்தகங்களையும் மற்றும் சில வசன புத்தகங்களையும் எழுதி வெளியிட்டது, சென்னை பாட சாலைப் புத்தகச் சங்கம் (The Madras School Book Society) என்னும் சங்கம் 1850இல் ஏற்பட்டு பல வசன நூல்களை எழுதி வெளியிட்டு உதவிற்று... இவையன்றியும் சென்ற நூற்றாண்டில் செய்தித்தாள்களும் (Newspaper) மாத, வார வெளியீடுகளும் தமிழ் நாட்டில் தோன்றி உலாவத் தொடங்கின' (ப. 30) என்ற அவரது வாசகத்துக்கு விளக்கம் தேவை இல்லை என்றாலும் மொழிவளர்ச்சியும் காலச் சூழலோடு தொடர்புடையது என்பது சிறப்பாக விளக்கப்பட்டிருப்பது கவனிக்கத் தகுந்தது.

அரசியல் சூழலோடு தொழில் நுட்பச் சூழலும் அறிவு நுட்பச் சூழலும் 16ஆம் நூற்றாண்டு முதல் 18ஆம் நூற்றாண்டு வரையுள்ள முதல் காலக்கட்டத்துக்கும் 19, 20 ஆம் நூற்றாண்டுகள் சேர்ந்த இரண்டாவது காலக்கட்டத்துக்கும் மாறுபட்டுள்ளன. மக்கள் தொடர்பு சாதனங்கள் இரண்டாவது காலக்கட்டத்தில் தான் தோன்றின. அறிவுத் துறையில் பலதுறை ஆய்வு ஏற்பட்டது. வரலாற்று ஆய்வு பன்முகப் படுத்தப்பட்டது. மொழி நோக்கில் வரலாற்று ஒப்பிலக்கணத்தோடு கல்வெட்டியல் (Epigraphy) வரிவடிவ இயல் (Paleography). புதைபொருள் ஆய்வு (Archeology), நாட்டுவரலாறு, இலக்கிய வரலாறு, இலக்கண வரலாறு போன்று வரலாறு புதுமுகப்பட்டது. மொழியின் பயன் பாடும் அதாவது எழுத்து மொழியின் பயன்பாடும் கூடியது. எழுத்துமொழி பயன்படுத்துவோரும் அதிகரித்தார்கள். எனவே மொழியின் எளிமையாக்கம் பற்றி எண்ணம் எழுந்து புதுமை யாக்கத்துக்கு வழிகோலப்பட்டது (அண்ணாமலை, 1978).

கிறித்துவ பாதிரிமார்கள் சமயப்பணி காரணமாக வந்து அந்த நாட்டு மொழியைக் கற்று சமயப் பிரச்சாரம் செய்வதற்காக எழுத்து மொழியையும் கையாண்டார்கள். அச்சு இயந்திரத் தொழில் நுட்ப அறிமுகமும் உரைநடை வளர்ச்சியும் சமயப்பணித் தேவையை ஒட்டியதாகக் கருதலாம். அப்படியே புதிய சமயப் பிரசாரங்களை உருவாக்கவே தமிழ் இலக்கணத்தை ஐரோப்பிய மொழிகளில் எழுதினார்கள். எனவே சமயத்தைப் பரப்புவதற்கு

இரண்டு வகையில் உழைத்தார்கள். 1) தாங்கள் வந்த நாட்டு மக்களை மதமாற்றம் செய்ய மேற்கொண்ட பணிகள் (2) சமா மாற்றம் செய்யப் பாதிரிகளை—சக ஊழியர்களைத் தயார்ப்படுத்த மேற்கொண்ட பணிகள். உண்மையில் இலக்கணப் பணி இரண்டாவது வகையைச் சார்ந்தது. முதல் வகையிலும் நேரடி சமயக்கருத்துகள் அடங்கிய உரைநடைகளோடு இலக்கிய நூல்கள் எழுதியது அவர்களின் தமிழ்ப் புலமை வெளிப்பாடாகவும் கருதத் தகுந்தது. அதே சமயத்தில் தமிழ் இலக்கியங்களைத் தங்கள் மொழியில் ஐரோப்பிய மொழியில் மொழி பெயர்த்ததும் தமிழ்ப் பண்பாடு பற்றி (தமிழ் மருத்துவம், தமிழர் சமயம். தமிழ் இலக்கிய வரலாறு) நூல்கள் எழுதியதும், சமயப்பணியாகக் கருத முடியாது அது அறிவுப்பணி என்று கூறுவதே பொருந்தும். ஒரு அறிஞர் பிற நாடுகளுக்குப் போக வாய்ப்பு கிடைக்கும் போது அந்த நாட்டு மக்களின் பண்பாடு பற்றித் தாய் நாட்டு மக்களுக்கு அறிவிக்க வேண்டும் என்ற அறிவு உந்துதலே அப்படிப்பட்ட மொழி பெயர்ப்புப் பணிகளையும் பண்பாட்டு விளக்கப் பணிகளையும் செய்யத் தூண்டியிருக்க வேண்டும். எனவே 'பாதிரிமாரும் தமிழுக் காகச் செய்ய வேண்டும் என்னும் கருத்துடன் செய்யவில்லை' என்று வேங்கடசாமி கூறியது (1936 : 15) முழுவதும் பொருந்தாது. கிறித்துவ பாதிரிமார்கள் செய்த பணிகளைப் பயன் அடைவோர் என்ற நோக்கில்—அல்லது—இலக்குக்குழு (Target group) என்ற கருத்தில் இரண்டு விதமாகவும் பாகு படுத்தலாம். பின்னதைச் சமயப்பணி, அறிவுப்பணி என்ற இரண்டு வகையாகப் பிரிக்கலாம். முன்னது கீழ்க்கண்டவாறு பிரியும்.

| நோக்கம் | பயன் படுவோர் | இலக்குக்குழு | பணி |
|---|---|---|---|
| 1. சமயம் | வந்த நாட்டு மக்கள் | சமயமாற்றத்துக் குரியவர்கள் | சமயநூல்கள் இயற்றுதல், சமய நூல்கள் மொழி பெயர்ப்பு |
| 2. ,, | தாய்நாட்டு மக்கள் | சக ஊழியர்கள் | பிறமொழியில் தமிழ் இலக்கண மும் அகராதியும் இயற்றல் |
| 3. அறிவு | வந்த நாட்டு மக்கள் | பொதுமக்கள் தமிழறிஞர்கள் | புத்திலக்கியம் தமிழில் இலக்கணம், அறிவியல் நூல் மொழிபெயர்ப்பு |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | ,, | தாய் நாட்டு மக்கள் | தாய்நாட்டு மக்கள் | தமிழ் ஐரோப்பிய மொழி, மொழி பெயர்ப்பு, தமிழ்மொழி பண்பாட்டு ஆய்வுகள் |

இங்கு எடுத்துக் கொண்ட தலைப்புக்கு முக்கியத்துவம் கொடுத்து இலக்கணப்பணியை ஓரளவு விரிவாகப் பார்ப்போம்.

## 1.4. இலக்கண வரலாறு

16ஆம் நூற்றாண்டில் பாதிரிமார்கள் தமிழ் இலக்கணம் ஐரோப்பிய மொழியில் எழுதியது பற்றிய குறிப்புகள் கிடைக் கின்றனவே தவிர நூல்கள் கிடைக்கவில்லை. இன்று கிடைக்கும் கிறித்தவ அறிஞர்களின் முதல் இலக்கணம் பிலிப்பால்டே (1632-1672) எழுதிய டச்சு தமிழ் இலக்கணமே. உண்மையில் இந்தியா வைப் பற்றி எழுதும் போது ஒரு இயலில் தமிழ்மொழி இலக் கணத்தை நூலாக்கியுள்ளார். அந்த நூலிலிருந்து அறிந்து கொள்ளக் கூடிய தமிழ் வரி வடிவ அமைப்பு, தமிழ் வரிவடிவங் களின் ஒலிமதிப்பு, பெயர், வினைச் சொற்களின் இலக்கணங்கள் ஆகியவைகளைத் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் (1961) இரண்டு கட்டுரையில் விளக்கியுள்ளார்.

18 ஆம் நூற்றாண்டில் நான்கு ஐரோப்பியர்கள் (இரண்டு ஜெர்மானியர்; 1 இத்தாலியர் --1 செக்நாட்டவர்) எழுதியதாக அறிய முடிகிறது. சீகன்பால்கு (1683-1719) —ஜெர்மானியர் பெஸ்கி (1680-1742) - இத்தாலியர், ப்ர்சிக்ரில் (Przirkyl) செக் நாட்டவர், பெப்ரீஷியஸ் (1711-91) ஜெர்மானியர், ஆகியவர்களே அவர்கள். ப்ர்சிக்ரில் தான்எழுதிய Principia linguae Brahmanicae என்ற நூலில் ஏழுபக்கங்களில் (29-34,45) தமிழ்மொழி, அமைப்பை ஓரளவு விளக்கியுள்ளார். இது முழுமையான இலக்கணம் அல்ல என்றும் அதுபற்றிய சில குறிப்புகளைச் சுவலபில் (Zvelebil. 1955) விளக்கியுள்ளார். இது 1755-62 இடைப்பட்ட காலத்தில் லத்தீனில் எழுதப்பட்டது என்றும் சுவலபில் குறிப்பிட்டுள்ளார். பெப்ரீஷியஸ் ஆங்கிலத்தில் 1778 இல் A Grammar for learning the Principles of the Malabar language என்ற இலக்கண நூலை எழுதியுள்ள தாக மீனாட்சிசுந்தரம் (1974-351) குறிப்பிட்டுள்ளார். அது எனக்குக் கிடைக்கவில்லை. பெஸ்கி க்ளாவிஸ் (Clavis) என்ற தமிழ் மொழியின் இலக்கியத்திறவுகோலும் இங்கு ஆராயப்பட வில்லை. எனவே நான்கு நூல்களே இங்கு ஆராயப்படுகின்றன. அவையாவன. சீகன்பால்கு எழுதிய கிராமட்டிக்கா தமுலிக்கா

(Grammatica Damulica தமிழ் இலக்கணம்), பெஸ்கி எழுதிய கொடுந்தமிழ் இலக்கணம், செந்தமிழ் இலக்கணம், தொன்னூல் விளக்கம், தொன்னூல் விளக்கம் தமிழிலும், மீதி மூன்று இலக்கணங்கள் லத்தீன் மொழியிலும் எழுதப்பட்டவை. பெஸ்கி லத்தீன் மொழியில் எழுதிய இரண்டு இலக்கணமும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

19 ஆம் நூற்றாண்டு இலக்கணங்கள்

| ஆசிரியர் | நூல் தலைப்பு | மொழி | ஆண்டு |
|---|---|---|---|
| ஆண்டர்சன் ராபர்ட் | Rudiments in Tamil Grammar, | ஆங்கிலம் | 1821 |
| | A Progressive Grammar of Common Tamil | ,, | 1891 |
| கால்டுவெல் | A Comparative Grammar of the Dravidian Languages | ,, | 1806 |
| க்ரால், கார்ல் | Outline of Tamil Grammar | ஆங்கிலம் | 1855 |
| மஹோான், G.W. | A Grammar of the Common Dialect of Tamil Language | ,, | 1848 |
| போப். G.U. | A Hand book of the Ordinary dialect of the Tamil Language | ,, | |
| ரேனியஸ் C.T.E. | A Grammar of the Tamil Language | ,, | 1853 |
| வின்ஸன். J. | Manvel de language Tamoul | பிரெஞ்சு | 1930 |
| லாசரஸ். J. | A Tamil Grammar | ஆங்கிலம் | 1878 |

(இவை, கா. மீனாட்சி சுந்தரம் நூலிலிருந்தும் தமிழியலிருந்தும் திரட்டப்பட்டவை.)

**1 5. இலக்கணக் கல்வியின்பயன்**

பிறமொழியில் எழுதப்பட்ட இலக்கணங்கள் எல்லாம் பிற மொழியினர் தமிழ் மொழியைக் கற்றுக் கொள்வதற்கு உதவியாக எழுதப்பட்டவை. எனவே, அவைகளை மொழிப் பயிற்சி (Pedagogical) இலக்கணம் என்று பொதுமைப்படுத்தலாம். தமிழ் அறிஞர்கள் எழுதிய இலக்கணங்கள் தமிழ் அறிந்தவர்களுக்கு மொழி அமைப்பை உணர்த்தும் இலக்கணங்கள் என்று பொதுமைப் படுத்தலாம்.

பிறமொழியினர் பிறமொழிகளில் எழுதிய தமிழ் இலக்கணங்களும் தமிழ் இலக்கண வரலாற்றின் பகுதியாகக் கருதப்பட வேண்டும். இதுவரை வெளிவந்த இரண்டு இலக்கண வரலாறுகளும் (இளவரசு, 1965 ; இளங்குமரன், 1988) இந்த இலக்கணங்களை இலக்கண வரலாற்றில் குறிப்பிடவில்லை. பொதுவாக இலக்கணங்கள் ஒரு மொழியின் அமைப்பிலும் இலக்கணக் கோட்பாட்டிலும் என்னென்ன புதுமை செய்துள்ளன, இலக்கணம் எழுதிய நோக்கம் என்ன? அவைகளின் குறை நிறை என்ன ஆகியவைகளை விளக்குவதுதான் இலக்கண வரலாற்றின் நோக்கம் என்றால் இந்த இலக்கணங்களும் தமிழ் இலக்கண வரலாற்றில் சேர்க்கப் படவேண்டும்.

பிறமொழியினர் பிற மொழியில் எழுதிய இரண்டு இலக்கணங்களை மொழியியல் நோக்கில் ஆராய்ந்த தெ.பொ. மீனாட்சி சுந்தரம் (1961) இந்த இலக்கணங்களால் ஏற்படும் மூன்று பெரிய நன்மைகளைக் குறிப்பிட்டுள்ளார். அவையாவன: (1) தமிழ் மக்கள் கிறித்தவ பாதிரிமார்கள் வாழ்ந்த காலத்தில் பேசிய முறையை — பேச்சுத்தமிழைத் தெரிந்து கொள்ள உதவுவது, சான்றாக டகரம் சொல்லுக்கு நடுவில் இரண்டு உயிர்களுக்கு இடையே வரும்போது ரகரமாக [r] உச்சரிப்பது பற்றியும் எல்லாம் என்ற சொல் வேற்றுமை உருபு ஏற்க (அ)த்து பெறுவது பற்றியும் சீகன் பால்கு குறிப்பிட்டுள்ளார், இவை இரண்டும் இன்றைய பேச்சு மொழியிலும் காணப்படுகின்றன. எனவே இன்றைய பேச்சு மொழிக்கூறு இரண்டரை நூற்றாண்டு காலம் பழமை உடையது என்று அதன் வரலாறு புலனாகிறது. எனவே இந்த இலக்கணங்கள் அவர்கள் காலப்பேச்சு மொழியை அறிந்து கொள்ள உதவும் மூலாதாரங்களாக அமைகின்றன. கடந்த நான்கு நூற்றாண்டுப் பேச்சு மொழியை அறிய வேறு மூலாதாரங்கள் இல்லை என்னும் போது அந்த இலக்கணங்களின் கல்வியின் முக்கியத்துவம் புலனாகும்.

(2) அந்த இலக்கணங்கள் எழுத்து மொழியையும் கற்றுக் கொள்வதற்கு உதவும் வகையிலேயே எழுதப்பட்டுள்ளன. எனவே எழுத்துகளின் ஒலி மதிப்பு; அந்த எழுத்துக்களுக்கு உள்ள மாற்றொலி உச்சரிப்பு ஒலியியலுக்கு அவை பெரிதும் உதவுகின்றன. இன்று பரவலாகக் கால்டுவெல் பெயரால் அறியப்படும் வல்லொலி — மெல்லொலி மாற்றம் (Convertability of surds into sonants) உண்மையில் குரல் இலா ஒலி - குரல் ஒலி (Voiceless - Voiced) மாற்றம் பிறமொழி இலக்கண ஆசிரியர்களே

நமக்குத் தெரிவித்த உண்மையாகும். எனவே தமிழ் ஒலியியலை அறிய அந்த இலக்கணங்கள் துணை நிற்கின்றன.

3. தமிழ் வரிவடிவங்களை விளக்கும் போது, உயிர்மெய்க்குரிய உயிர்த்துணை வடிவங்களில் உள்ள ஒற்றுமை—வேற்றுமையையும் எடுத்துக்காட்டித் தமிழ் வரிவடிவங்களைக் கட்டமைப்பு நோக்கில் ஆராயும் ஆராய்ச்சியைத் துவக்கி வைத்த பெருமை பெஸ்கியைச் சாரும். இன்னும் பலர் அப்படிப்பட்ட ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார்கள் (உ.ம். முத்துக் கண்ணப்பர்) மேலும் வரிவடிவ அமைப்பில் இருந்த ஒற்றுமை—வேற்றுமைகளை உணர்ந்ததாலும் அவைகளின் தொழில் நுட்பத்திறன் (Technical efficiency) உணர்ந்ததாலும் தான் பெஸ்கியால் எழுத்துச் சீர்திருத்தத்தை முன் மொழிய முடிந்தது. எனவே எழுத்துச் சீர்திருத்த வரலாறு அறிய இந்த இலக்கணங்கள் உதவுகின்றன,

4. மேலும், சில பயன்களும் சுட்டிக்காட்டத் தகுந்தவை, மொழி அமைப்பு பற்றிய புதிய கட்டமைப்பு உண்மைகளைக் கண்டுபிடித்துக் கூறியிருப்பது. சான்றாக அ) பெஸ்கி செந்தமிழ் இலக்கணத்தில் (1730 : 21) தமிழில் இடையினமும் மெல்லினமும் உடனிலை மயக்கமாக வரும்போது குற்றெழுத்துகள் முன்னெழுத்தாக மட்டுமே அமையும்; நெட்டெழுத்துகள் அமையாது. அதாவது அண்ணி, கொல்லி போன்று வருமே தவிர ஆண்ணி, கோள்ளி போன்று வராது. இது எல்லாக் காலத் தமிழுக்கும் பொருந்தும் ஆ) அப்படியே ஆக்கப் பெயர்(Verbel derivative), தொழிற் பெயர் (verbal noun) என்று வினைச் சொற்களிலிருந்து உண்டாகும் பெயர்களைக் கால்டுவெல் (1856 : 542) பாகுபடுத்தி அவைகளுக்கு இடையே உள்ள அமைப்பு வேறுபாட்டையும் சுட்டிக் காட்டியது எல்லாக் காலத் தமிழுக்கும் பொருந்தும். இ) பதிலீட்டுப் பெயர்களை மற்ற பெயர்களிலிருந்து தனி வகையாக உட்பிரிவாகக் கருத வேண்டும் என்று ஐரோப்பிய மொழியில் எழுதிய இலக்கணங்களே சுட்டிக் காட்டுகின்றன (சீகன் பால்கு, 1716). தமிழ் இலக்கணங்களில் தொல்காப்பியம் தன்மைப் பெயர்களை உயர்திணைப் பெயர்களோடும் பிற பதிலீட்டுப் பெயர்களை விரவுத்திணைப் பெயர்களோடும் பிற இலக்கணங்கள் விரவுத் திணைகளோடும் கூறியுள்ளனவே தவிர, பதிலீட்டுப் பெயர்களைத் தனி உட்பிரிவாகக் கூறவில்லை. அமைப்பியல் நோக்கில் அவைகளைத் தனி உட்பிரிவாகக் கருதவேண்டும். இது எல்லாக் காலத்துக்கும் பொருந்தும்.

5. மொழி அமைப்பை எளிதாக விளக்குவதற்குச் சொற்களைப் பாகுபடுத்துவது வருணனை உத்திப் பாகுபாடு. தமிழ் இலக்கணங்கள் விரவுத்திணை அமைத்தது ஒரு வருணனை உத்திப்பாகுபாடே. அதுபோல ஐரோப்பிய மொழி இலக்கணங்கள் வினைச் சொற்களில் இறந்தகால விகுதிகளையும் செயவென் எச்ச விகுதிகளையும் வருணிக்க வல்வினை (Strong verb). மெல்வினை (Weak verb) என்ற பாகுபாடும் அதை ஒட்டிய பாகுபாடும் ஐரோப்பிய மொழி இலக்கணங்கள் செய்த பாகுபாட்டை ஒட்டியது. இதை முதன் முதலில் செய்த பெருமை சீகன் பால்குக்கு உரியது.

6. கால்டுவெல் திராவிட மொழி ஒப்பிலக்கணத்தின் வரலாற்று ஒப்பிலக்கணம் என்ற புதிய அறிவுத்துறையை அறிமுகப் படுத்தினார். அதுவும் இலக்கணக் கல்வியையும் இலக்கண வரலாற்றையும் பாதித்துள்ளது. கால்டுவெல் நூல் வெளிவந்த இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு சாமுவேல் பிள்ளை என்ற தமிழ் நாட்டுக் கிறித்துவர் 'தொல்காப்பியம் நன்னூல்' (1858) வெளியிட்டதன் மூலம் வரலாற்று இலக்கணவியல் (Historical study of Grammars) என்ற புதிய துறை உருவாக அடித்தளம் இட்டுச் சென்றுள்ளார். இலக்கண வரலாற்றின் ஒரு பகுதியாக இலக்கண வளர்ச்சி பற்றித் தெரிந்து கொள்ளவும் வரலாற்று இலக்கண இயல் உதவும். எனவே தமிழ் அமைப்பு ஆய்விலும் தமிழ்மொழி அமைப்பு வளர்ச்சியிலும் மரபு வழித் தமிழ் இலக்கணங்கள் புதுமைகளை ஓரளவு வெளிப்படுத்துவது போலவே கிறித்துவ அறிஞர்கள் பிறமொழியிலும் எழுதிய இலக்கணங்கள் புதுமைகளைக் கொண்டிருப்பதால் அவைகளும் தமிழ் இலக்கண வரலாற்றில் இடம் பெறவேண்டும். எனவே அவை தமிழ்க் கல்வியிலும் சேர்க்கப்பட வேண்டும்.

# கிராமட்டிக்கா தமுலிக்கா (தமிழ் இலக்கணம்)

## 2.1. முன்னுரை

பார்த்தொலொமியுஸ் சீகன்பால்கு (Bertho lomeo Zeigenbalg 1683-1719) ஜெர்மன் நாட்டில் புல்ஸ்நித்ஸ் என்ற நகரில் பிறந்தவர். அவர் டென்மார்க் தேசத்து நாலாம் பிடெரிக் என்ற அரசன் விருப்பத்தை அறிந்து அவன் மூலமே மதப்பணி செய்ய 1706ஆம் ஆண்டு தரங்கம்பாடி வந்தார். (முழுவிவரத்துக்கு வேங்கடசாமி, 1936 மீனாட்சி சுந்தரம், 1974 பார்க்கவும்) மரபு வழியிலே தமிழ்க்கல்வியைத் தொடங்கினார். அவருடைய தமிழ்ப்பணிகளாகக் கருதத்தக்கவை ஐந்து : 1) 1708 இல் தான் படித்த தமிழ் நூல்களின் அட்டவணை (Bibliotheca Malabarica) ஒன்று தயாரித்து தாய்நாட்டுக்கு அனுப்பியது. இதில் 161 நூல் களின் பெயர்களும் அவைகளின் உள்ளடக்கமும் நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக்கொடுக்கப்பட்டுள்ளது. இது தமிழ் இலக்கிய வரலாறு எழுத உதவும் நூல் என்பார் லெஹ்மன் (Lehman, 1965 : 111). தமிழ் நூல் தொகுதி தயாரிக்கும் பணியின் முதல் கட்டமாகவும் இதைக்கொள்ளலாம். 2) 1713இல் மூன்று நூல் தயாரித்தது. அவைகளில் ஜெர்மன் மொழிச் சமயப் பாடல்களின் மொழிபெயர்ப்பு மட்டுமே தரங்கம்பாடியில் இருந்து வெளிவந்தது. அவருடைய முயற்சியால் 1713இல் தரங்கம்பாடிக்கு அச்சு இயந்திரமும் தமிழ் எழுத்துக்களும் வரவழைக்கப்பட்டதும், அச்சிட்ட நூல்களைப் பொது மக்களுக்குக் குறைந்தவிலையில் வழங்கியதும் அதனால் வேங்கடசாமி (1936, 103) 'தமிழ் நாட்டில் பொது ஜனங்களுக்கு முதன்முதல் அச்சுப்புத்தகம் வழங்கிய பெரியார் ஸீகன் பால்கு ஐயரே ஆவர்' என்று பாராட்டியுள்ளதும்

இங்குச் சுட்டிக்காட்டவேண்டிய செய்திகள் ஆகும். தமிழ்த் தெய்வங்களின் குடி வழிப்பட்டியல் (Geneologieder Malabaraschem Gotten) என்ற நூல் 1867 இல் சென்னையிலும், தமிழர் களின் சமயம் (Das Malabarische Heidenthum) என்ற நூல் 1926 இல் ஆம்ஸ்டர்டாமிலும் அச்சேறின. 3) 1714 இல் பைபிள் தமிழ் மொழிபெயர்ப்பைத் தரங்கம்பாடியிலிருந்து அச்சிட்டு வெளிப்படுத்தினார். 4) 1716 இல்தான் கிராமட்டிக்கா தமுலிக்கா என்ற தமிழ் இலக்கண நூல் ஜெர்மன் நாட்டு ஹல்லேயிலிருந்து வெளிவந்தது. 5) சிறுநூல்கள் (Kleinere Schriften Smallar Writing) என்ற தலைப்பில் 1930 இல் ஆம்ஸ்டர்டாமிலிருந்து ஒருநூல் வெளி வந்துள்ளது. அதில் நீதிவெண்பா, கொன்றை வேந்தன், உலகநீதிகள் ஆகிய மூன்றும் ஜெர்மன் மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இதுவே தமிழ் மொழியிலிருந்து ஐரோப்பிய மொழியில் குறிப்பாக ஜெர்மன் மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட முதல் மொழிபெயர்ப்பு என்பார் லெஹ்மன் (1965 : 113). 6) தமிழ்—ஜெர்மன் அகராதிப்பணியிலும் உழைத்து 40,000 தமிழ்ச் சொற்களையும் இலக்கியத் தமிழ் அகராதிக்காக 17,000 சொற்களையும் சேர்த்து வைத்திருந்தார், இவை தனியே அச்சிடப்படவில்லை.

இவருடைய பணிகள் பயன்பாட்டு நோக்கில் மூன்று விதப் பாகுபாட்டில் அடங்குகின்றன.

1. தமிழ்நாட்டுச் சக சமயத்தவர்களுக்கு
   அ) பைபிள் தமிழ் மொழிபெயர்ப்பு (பிறமொழி - தமிழ்)
   ஆ) பக்திப்பாடல் மொழிபெயர்ப்பு (ஜெர்மன்-தமிழ்)
2. சகஊழியர்களுக்கு—தமிழ் இலக்கணம்
3. தாய்நாட்டு மக்களுக்கு
   அ) தமிழர் சமயம்பற்றிய ஜெர்மன் நூல்கள்
   ஆ) தமிழ்—ஜெர்மன் மொழிபெயர்ப்பு

கிறித்துவசமயத்தைப் பரப்பவே சீகன்பால்கு தமிழகம் வந்தாலும் அவருடைய மூன்றாவது பணியைச் சமய நோக்கம் உடையது என்று கூறமுடியாது. ஒரு அறிஞர் இன்னொரு நாட்டில் தங்கி வாழ வாய்ப்பு கிடைக்கும் போது அந்த நாட்டுமக்களைப் பற்றித் தான் அறிந்ததைத் தாய் நாட்டுமக்களுக்கும் உணர்த்த வேண்டும் என்ற அறிவு உந்துதல் காரணமாகவே மூன்றாவது

வகைநூல்கள்—(ஜெர்மன் மொழிநூல்கள்) அமைந்தன. மேலும் அந்தக்காலத்தில் ஐரோப்பியர்களுக்கு இந்தியர்களைப்பற்றியோ அல்லது தமிழர்களைப் பற்றியோ நல்ல எண்ணம் இல்லை என்பதை அவரே குறிப்பிட்டுள்ளார். அவரும் அந்தத் தவறான எண்ணத்துடனேயே தமிழகம் வந்தும் அவர் தமிழர்களோடு பழகிப்பார்த்து, தமிழ் நூல்களைப் படித்துப்பார்த்தபோது தான் அந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டதோடு தன்னுடைய நாட்டு மக்களின் எண்ணத்தையும் மாற்றவேண்டும் என்று முயற்சித்தது சீகன்பால்கு நல்ல பண்புடைய அறிஞர் என்பதைப் புலப்படுத்து கிறது. இந்தச் செய்தி அவர் தன்நாட்டுக்கு எழுதிய கடிதங்கள் மூலம் வெளிப்படுகிறது. அந்தக்கடிதத்தின் ஒருபகுதி :

'ஐரோப்பாவிலுள்ள பெரும்பாலான கிறிஸ்துவர்கள் தவறான ஒரு கருத்தைக் கொண்டுள்ளனர். தமிழர்கள் காட்டுமிராண்டிகள் என்ற கருத்தே அது. இங்கு வந்து சென்ற கப்பல்மாலுமிகள் இவர் களின் மொழியை அறியாத மாலுமிகள், மற்றும் ஐரோப்பிய வணிகர்கள் இந்தத் தமிழர்களின் இலக்கியங்களைப் படிக்காமல் இவர்களைப்பற்றி இப்படி ஒரு தவறான கருத்தை ஐரோப்பாவில் பரப்பியிருக்கக் கூடும். நானும் முதலில் அதே எண்ணத்தில்தான் இங்கு வந்தேன்...இங்கு வந்து மொழியைக் கற்று அவர்களோடு பேசிப்பழகிய பின்பு ஐரோப்பியர்கள் இவர்களைப்பற்றிக் கொண் டிருந்த கருத்து முற்றிலும் தவறானது என்பதை என்னால் நிரூபிக்க முடியும். சிறிது காலப்பழக்கத்திலேயே தமிழர்கள் ஒரு சிறந்த மொழி மற்றும் கலாச்சாரத்துக்குச் சொந்தக்காரர்கள் என்று உணர்கிறேன். அவர்களின் புத்தகங்களைப் படித்தபின்பு (உலகநீதி, கொன்றை வேந்தன், ஆத்திசூடி) இந்தத் தமிழர்களும் ஐரோப்பியர்களைப் போன்று தத்துவங்களையும் உயர்வான நாகரிகத்தையும் கொண்டவர்கள் என்பதை மிகுந்த பிரமிப்போடும் ஆச்சரியத்தோடும் நான் உணர்கிறேன்' (மோகனவேலு 1992 ஆனந்தவிகடன், புதையல் 2. ப.32) என்பதே அவருடைய கடித வாசகம். தான் உணர்ந்த உண்மையைப் பிறருக்கும் உணர்த்த வேண்டும் என்ற அறிஞனின் துடிப்பை இங்கு நாம் பார்க்கிறோம்.

சீகன்பால்கு தமிழ்ப்பணி பன்முகப்பட்டது. அவர் பலவகை களில் முன்னோடியாகக் கருதத் தகுந்தவர் அவரின் இலக்கணம் இதுவரை மொழியியல் ஆய்வுக்கு உட்படுத்தப்படவில்லை. ஆகையால் அவருடைய இலக்கணப்பணி அறியப்படாததால் அவருக்குக் கிடைக்கவேண்டிய பெருமை இலக்கண உலகில்

கிடைக்கவில்லை. எனவே தமிழ்மொழி உலகில் வழங்கிவரும் இரண்டு செய்திகள் திருத்தத்துக்கு உரியன என்பது இங்குச் சுட்டிக்காட்டத்தகுந்தது. மீனாட்சி சுந்தரம் (1961:220) தனியே தொடரியலைத் தனிப்பகுதியாக ஆராய்ந்த பெருமையும்; அகத்திய லிங்கம் (1982:81) வினைச்சொற்களைக் கால விகுதி அடிப்படையில் பாகுபடுத்தும் முயற்சியில் ஈடுபட்ட பெருமையும் பெஸ்கியையே சாரும் என்று கூறியது சீகன்பால்கு இலக்கணம் கிடைக்காத காரணத்தினால் கூறப்பட்டவை ஆகும். இந்த இரண்டு பெருமையும் மட்டும் அல்லாமல் பதிலீட்டுப்பெயர்களைப் பெயர்ச்சொற்களின் தனிவகையாகக் கருதியதும் பெயரடையைத் தனிச் சொல்வகையாகக் கருதியதும் அமைப்பியல் பாகுபாடு (Structural Class) செய்ததும் ஆகிய பெருமைகளும் சீகன்பால்குக்கு உரியன என்பதை அவருடைய இலக்கணம் புலப்படுத்துகிறது.

## 2.2. தமிழ் இலக்கணம்

கிராமட்டிக்கா தமுலிக்கா (Grammatica Damulica) லத்தீன் மொழியில் 1716 ஆம் ஆண்டு ஜெர்மனியில் அச்சடிக்கப்பட்டது. இதன் முதல் பக்கத்தில் தமிழ் இலக்கணம்: பல எடுத்துக்காட்டுகள், விதிகள், சொல் அடுக்கு வரிசை கொண்டது; தமிழ் என்ற மலபாரி மொழியைச் சுலபமாகக் கற்கும் வழி. இம்மொழி கிழக்கிந்தியரிடையே பேசப்படுவது. இதுவரை ஐரோப்பாவில் அறியப் படாதது' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. (ஞானசேகரன், 1981:2) மொழியியல் நோக்கில் இவருடைய இலக்கண அடுக்கு வரிசை (Paradigmatic) இலக்கணம் என்று கருதத்தகுந்தது. ஏனென்றால் எழுத்துமொழியை விளக்கும்போது ஒவ்வொரு எழுத்துகளின் ஒலிமதிப்புகளைக் குறிப்பிட்டு அவை வருமிடம் பகிர்வையும் அவைகளில் காணப்படும் பொதுமைகளையும் விளக்கவில்லை. சொல்லியல்களில் பெயர், வினை, பெயரடை ஆகியவைகளின் அடுக்குவரிசை கொடுத்துவிட்டு வேறு விளக்கம் தரவில்லை. மாறாகப் பெஸ்கியின் கொடுந்தமிழ் இலக்கணம் கட்டமைப்பியல் (Structural) இலக்கணத்தின் பண்புகளைக் கொண்டிருப்பது அடுத்த இயலில் விளக்கப்படும்.

சீகன்பால்குக்குத் தமிழ் இலக்கணம் எதுவும் அறிமுகம் இல்லை. அதனாலேயே அவர் குறைவான இலக்கணக்கலைச் சொற்களை அறிமுகப்படுத்தியிருந்தாலும் அவையெல்லாம் வடமொழிக் கலைச்சொற்களாக உள்ளன. தனிவசனம் (ஒருமை), வெகுவசனம் (பன்மை), புலிங்கம் (ஆண்பால்), இஸ்த்திரிலிங்கம்

(பெண்பால்), நபுஞ்சலிங்கம் (ஒன்றன்பால்) ஆகிய கலைச் சொற்களே நூலில் காணப்படுகின்றன.

நூல் எட்டு இயல்களைக் கொண்டிருக்கின்றது. அவையாவன 1. எழுத்துகள் 2. உச்சரிப்பு 3. பெயர் 4. பெயரடை 5. பதிலீட்டுப்பெயர் 6. வினை 7. ஒருநிலைச் சொற்கள் (Particles) 8. தொடரியல்.

இங்கு எழுத்துவடிவங்கள், ஒலிமதிப்புகள், சொல்லெழுத்து மாற்றங்கள், சொல்வகைப்பாடு, சொல்வகைகள், இலக்கணக் கூறுகள், பெயர்ச்சொல், வினைச்சொல் ஆகிய தலைப்புகளில் அவர் இலக்கணத்தில் காணப்படும் மொழியியல் கோட்பாடுகளும் தமிழ் மொழி அமைப்பும் விளக்கப்படும்.

## 2.3. வரிவடிவம்

தமிழ் எழுத்துகள் பழைய காலத்தில் கல்லிலும் செம்பிலும் பனையோலைகளிலும் எழுதப்பட்டதால் முன்மாதிரியான எழுத்துவடிவங்கள் என்று ஒன்று அமையவழியில்லாமல் போய் விட்டது. இன்று அச்செழுத்துவந்ததும் எழுத்து வடிவங்கள் ஓரளவு நிலைபேறு அடைந்து வருகின்றன. அச்செழுத்து எல்லோரும் முன் மாதிரியாகக் கொள்ளும்படி அமைந்துள்ளது. என்வே விஞ்ஞான ரீதியாக வடிவங்களை ஆராய்ந்து அவைகளின் தொழில்நுட்பத்திறன், கல்வியல்திறன், மொழியியல்திறன் ஆகியவைகளின் அடிப்படையில் திருத்தி அமைக்கவும் நிலைபேறு உடையதாக ஆக்கவும் அறிஞர்கள் அறிவுபூர்வமாக எடுக்கும் முயற்சிகள் தமிழகத்தில் வெற்றி பெறவில்லை. அதனால் அச்செழுத்து வந்தும் தமிழ் எழுத்துகளின் வரிவடிவங்கள் நிலைபேறு அடையவில்லை.

பதினெட்டாம் நூற்றாண்டு கிறித்துவ அறிஞர்களின் தமிழ் இலக்கணங்கள் அவர் காலக் கையெழுத்து வடிவம் பற்றியும் அச்சுவடிவம் பற்றியும் அறிந்துகொள்ள உதவியாக இருக்கின்றன.

பால்டே இலக்கணத்தில் காணப்படும் வரிவடிவம் பற்றி தெ.பொ. மீனாட்சிசுந்தரம் ஆராய்ந்திருப்பது முன்னரே குறிப்பிடப்பட்டது. சீகன்பால்கு இலக்கணத்திலும் அச்சு எழுத்தின் ஆரம்பநிலையே காணமுடிகிறது.

1. ஊகாரத்தில் நெடிலுக்குத்துணை எழுத்து குறில் வடிவத் தோடு சேர்த்து அமைக்கப்படுவதால் ளை கார உயிர்மெய்

வடிவத்தோடு ஒற்றுமையாக உள்ளது. ஆனால் ஔகாரத்தில் துணையெழுத்து ஒகரத்துக்குப்பிறகு தனியே எழுதப்பட்டிருக்கிறது.

2. ஞ கர மெய்வடிவம் எகரவடிவத்தோடு வலது நேர்க் கோட்டின் கீழ் ஒரு சிறுபிறை சேர்த்து அமைக்கப்பட்டுள்ளது.

3. நகர மெய்யின் வடிவமும் ஆகார உயிர்மெய்க்குரிய வடிவமும் ஒன்றாகவே உள்ளன.

4. தனிமெய்யெழுத்து புள்ளி பெறவில்லை.

5. எகர, ஒகர உயிர்களிலும் உயிர்மெய்களிலும் குறில் நெடில் வடிவ வேறுபாடு இல்லை.

6. ஆய்தம் ககர ஊ கார உயிர் மெய் வடிவம் பெற்றுள்ளது.

## 2.4. ஒலிபெயர்ப்பும் ஒலிமதிப்பும்

பிறமொழியில் எழுதப்பட்ட இலக்கணம்—அதுவும் மொழிப் பயிற்சி இலக்கணம் எடுத்துக்கொண்ட மொழியின் எழுத்து களையும் அதன் ஒலி மதிப்புகளையும் விளக்கும். அந்த முறையில் சீகன்பால்கும் முதலில் தமிழ் எழுத்துகளையும் அதன் ஒலிமதிப்பு களையும் கொடுத்து கிட்டதட்ட நூறு சொற்களின் ஒலிமதிப்பை யும் வருணித்துள்ளார். எனவே தனி எழுத்துகளின் ஒலி மதிப்பையும், அந்த எழுத்துகள் சொற்களில் முதலிலும் இடை யிலும் கடையிலும் வரும்போது உள்ள ஒலிமதிப்பையும் நாம் அறிந்து கொள்ள முடிகிறது. முதலில் சீகன்பால்கு கொடுத்துள்ள சொற்களின் பண்புகள் பற்றியும் அவைகளின் ஒலிமதிப்பு பற்றியும் காணப்படும் சில பொதுமை எடுத்துக்காட்டத் தகுந்தவை. ஏனென்றால் பொதுவாகப் பிறமொழியாளர்கள் பிற மொழியில் கொடுக்கும் ஒலிபெயர்ப்புகள் அந்தமொழியிலுள்ள மாற்றொலி கள் பற்றியும் அந்த மொழியில் ஏற்பட்ட ஒலிமாற்றம்பற்றியும் அறிந்துகொள்ள உதவும் அரிய மூலாதாரமாக வரலாற்று மொழி ஆசிரியர்களால் கருதப்படுகின்றன (Peuzl, 1957, மீனாட்சிசுந்தரம், 1961; 1965 :6) அதே சமயத்தில் அவைகளைப் பயன்படுத்துவதில் கவனமாக இருக்கவேண்டும் என்று அவர்கள் எச்சரித்துள்ளதும் அறியத் தகுந்தது, எனவே சீகன்பால்கு ஒலிபெயர்ப்பில் காணப் படும் பொதுமைகளை முதலில் பார்ப்போம்.

சீகன்பால்கு ஒலி பெயர்த்துள்ள நூறு சொற்களில் சில தமிழ் வடிவங்கள் பேச்சு மொழியையும் (நன்னாக<நன்றாக; செலை <சிலை) சில தமிழ் வடிவங்கள் இலக்கிய வழக்கையும் அவைகளின் ஒலிபெயர்ப்பு பேச்சு வழக்கையும் (பெண் pön); வீடு [wudu] சில

தமிழ் வடிவங்கள் பேச்சு மொழியையும் அவைகளின் ஒலிபெயர்ப்பு இலக்கிய வழக்கையும் (பிடவை budawei] கேழ்வி [kelwi] பிரதிபலிக்கின்றன. அதாவது

| தமிழ் வடிவம் | ஒலிபெயர்ப்பு வடிவம் |
|---|---|
| பேச்சு மொழி | பேச்சு மொழி |
| இலக்கிய மொழி | பேச்சு மொழி |
| பேச்சு மொழி | இலக்கிய மொழி |

என்று மூன்று வகையாகப் பாகுபடுத்தலாம், இருந்தாலும் பெரும்பாலான ஒலி பெயர்ப்புகள் பேச்சுமொழியைப் பிரதி பலிப்பதாகவே அமைந்துள்ளன. இங்கும் ஓரிரண்டு பிழைகள் (அச்சுப் பிழையோ, ஒலிபெயர்ப்பு பிழையோ) இருப்பதையும் சுட்டிக் காட்டவேண்டும். அவைகளைச் சிறுபான்மை ஒலி பெயர்ப்பு என்ற முறையிலே இனம் கண்டு புறக்கணிக்கவேண்டும். சான்றாக மூக்கொலிக்குப் பிறகும் வல்லெழுத்துகளை எங்கள் குரல் வல்லொலியாக ஒலி பெயர்த்திருக்க ஓரிடத்தில் மட்டும் குரல்இலா வல்லொலியாக ஒலி பெயர்த்திருப்பது (யெங்கும் [yenkum]) பிழையாகவே கருதவேண்டும். எனவே சீகன்பால்கு ஒலிபெயர்ப்புகளை அப்படியே தமிழ் உச்சரிப்பைப் பிரதிபலிப்ப தாகக் கொள்ளாமல் விமர்சன நோக்கோடே புரிந்துகொள்ள வேண்டும்.

சீகன்பால்கு பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். அவருக்குச் சமகாலத்தில் வாழ்ந்த பெஸ்கியின் ஒலிபெயர்ப்புகள் அவருக்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்னால் வாழ்ந்த பால்டேயின் ஒலிபெயர்ப்புகள் அவருக்கு ஒரு நூற்றாண்டுக்குப் பின்னால் வாழ்ந்த கால்டுவெல் கருத்துகள் ஆகியவைகளை ஒப்புநோக்கும் போது பதினெட்டாம் நூற்றாண்டுபற்றிய திட்டவட்டமான உச்சரிப்புகளை வரையறுக்க முடியும். தமிழில் அவர்கள் காலத்து இருந்த கிளைமொழிகள் உச்சரிப்பு பற்றியும்கூட அறிந்துகொள்ள இவர்களின் ஒலிபெயர்ப்பு வழிகாட்டுகிறது என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தது.

### 2.4.1. உயிரெழுத்துக்கள்

உயிரெழுத்துக்களில் குறில் ஒலிகளே பெரும்பான்மையும் மாற்று உச்சரிப்புகளைப் பெற்றுள்ளன. எனவே அவை தனியே முதலில் விளக்கப்படுகின்றன.

### 2.4.1.1. குறில்

அகரத்தை [a] என்று ஒலிபெயர்த்துள்ளதால் அது இதழ்குவி கீழ்நடு உயிர் (unrounded low mid vowel) என்பதைக் காட்டும். இதற்கு மொத்தம் மூன்று மாற்றொலிகள் காணப்படுகின்றன.

<அ> [a] சொல்லின் ஈற்றசையாக நுனிநா நுனி அண்ண (alveolar) ஒலிகளுக்கு முன்னும், முதலசையாக இகரத்துக்கு முன்னும் வரும்.

| | |
|---|---|
| பகல் [bagel] | மனுஷன் [manusen] |
| மகன் [magen] | ஆண்டவர் [andawer] |
| அவன் [awen] | தயவு [deiawu] |

[ö]. ஈற்றசையாக இதழ் ஒலி அல்லாத ஒலிகளுக்கும் நாமடி ஒலியான ளகர ஒலிக்கும் இடையில் வரும்.

| | |
|---|---|
| மகள் [magöj] | உங்கள் [ungöl] |
| நீங்கள் [nihngöl] | எங்கள் [engöl] |
| | ஆகாதவர்கள் [agadawergöl] |

அவள் என்ற சொல்லை [awal] என்று ஒலிபெயர்த்திருப்ப தாலேயே 'இதழ்ஒலி அல்லாத ஒலிகள்' என்ற நியதியைச் சேர்க்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

[u] ஈற்றசையாக இடைநாஇடை அண்ண ஒலியில்லாத ஒலி களுக்கும் ஈரிதழ் ஒலியான மகரத்துக்கும் இடையில் வரும்.

| | |
|---|---|
| தாகம் [tagum] | பக்கம் [bakkum] |
| பாவம் [pawum] | லோகம் [logum] |
| நாமம் [namum] | அப்பம் [abbum] முதலியன. |

சத்தியம் என்ற சொல்லை [tsuchaddiam] என்று ஒலி பெயர்த்திருப்பதால் 'இடைநா இடை அண்ண ஒலிகளுக்குப் பின்னால்' என்ற நியதியைச் சேர்க்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

[a]. ஏனைய இடங்களில் [அதாவது சொல்லுக்கு முதலில் சொல்லின் இடையில் மேலே குறிப்பிட்ட சூழல்கள் நீங்க] வரும்.

| | |
|---|---|
| மகன் [magen[ | மனசு [manaschu] |
| அவன் [aven] | உதவி [udawi] |
| அவள் [awal] | காரியம் [kariam] |
| கனி [kani] | பசி [baschi] |
| திரும்ப [dirumba] | போற [pora] முதலியன. |

[e] என்பது முன்னுயிர் என்பதையும் [ö] என்பது பின்னுயிர் என்பதையும் [u] என்பது பின் உயிர் இதழ் குவி உயிர் என்பதையும் குறிப்பதாகக் கொள்ளலாம்.

பால்டே இலக்கணத்தில் மாற்றொலி பற்றிய குறிப்புகள் இல்லை. அ>எ மாற்றம் நுனிநா நுனி அண்ண ஒலிகளுக்கு முன்னால் மட்டும் இல்லாமல் ள, ழ, ண, ஆகிய நாமடி ஒலிகளுக்கு முன்னரும் நடைபெறும் என்று பெஸ்கி (1728 ; 18.8) குறிப்பிட்டுள்ளார். கால்டுவெல்லும் இந்த மாற்றம் பற்றிப் பொதுவாகவே குறிப்பிட்டுள்ளார். அ>ஒ மாற்றத்தைப் பெஸ்கி நேரடியாகக் குறிப்பிடாவிட்டாலும் செய்யுங்கள் என்பதைச் செய்யுங்கொள் என்று (பக்கம் 86 பாரா. 69) தமிழில் எழுதியிருப்பதால் அந்த மாற்றத்தை உணர்ந்திருந்தார் என்று நாம் ஊகிக்கலாம். அ>உ மாற்றம் இன்றைய பேச்சுமொழியில் காணப்படவில்லை. என்றாலும் இன்றைய பேச்சு மொழியில்— அம் ஈற்றுச்சொற்கள் [õ] என்று பின்னுயிராக உச்சரிக்கப்படுவதால் இதனுடைய சாயலாகக் கொள்ளலாமா என்று யோசிக்கத் தோன்றுகிறது,

<இ> [u]—சொல்லுக்கு இடையில் இதழொலிக்கும் நாமடி ஒலிகளுக்கும் நடுவில் வரும்.

பிள்ளை [bullei] விழு [wuru]
பீடை [purei] விடு [wudu] முதலியன.

[o]—சொல்லுக்கு இடையில் இதழொலிக்குப் பின்னும் அகர உயிர் அடுத்த அசையில் இருக்கும்போதும் வரும்.

பிறசாதம் [borasadum] பிரகாசம் [boragaschum]

[i]—ஏனைய இடங்களில் வரும்.

பிற்பாடு [bidpadu] பில்லி [billi]
பசி [baschi] இப்படி [ibbari]

முதலியன.

[u] பின் உயிர் உயிர் என்பதையும் [o] பின் நடு உயிர் என்பதையும் உணர்த்தும் இந்த மாற்றங்களில் இ>உ மாற்றத்தை ழகர டகர ஒலிகளுக்கு முன்னால் மட்டும் நடைபெறும் என்று பெஸ்கி (19.10) குறிப்பிட்டுள்ளார். தமிழ் [tamul], பிழவை [pulavei], பீழை [pu:lei] வீடு [wu:du] பீடம் [pu·dam]) இ>ஒ என்ற மாற்றம் என்பது இ>உ உ>ஓ/-அ என்ற இரண்டு

மாற்றங்களின் விளைவாகும். (சீகன்பால்கு விறகு என்பது வெறகு என்று தமிழில் எழுதியிருப்பதால் இ>எ ஒலிமாற்றத்தை அறிவார் என்று கருதலாம்). பிறசாதம்>* புறசாதம்>பொற சாதம். ஆனால் சீகன்பால்கோ, பெஸ்கியோ உ>ஒ மாற்றங் களைக் குறிப்பிடவில்லை. கால்டுவெல் (ப. 136) இ>எ 2>ஒ மாற்றங்களைப் பொதுநிலையில் சுட்டியுள்ளார். பிணம் என்ற சொல் பேச்சுமொழியில் பொணம் என்று உச்சரிக்கப்பட்டாலும் இங்கும் இ>உ, உ>ஒ என்ற இரண்டு மாற்றங்கள் நடைபெற்ற தாகவே மொழியியல் நோக்கில் கருத வேண்டும்.

<உ> [u[—எங்கும் வரும். இது இதழ் குவியின் உயர் உயிர் இதற்கு மாற்றொலி இல்லை.

| | |
|---|---|
| உதவி [udawi] | அறிவு [ariwu] |
| உங்கள் [ungöl] | திரும்ப [dirumba] |
| முடி [muri] | காத்து [kaddu] |
| குடு [kudu] | புகை [bugei] முதலியன. |

இங்கு இரண்டாவது அசையில் அகரம் அல்லது ஐகாரம் வரும்போது ஒகரமாக உச்சரிப்பதை ஏன் சீகன்பால்கு குறிப்பிட வில்லை என்று தெரியவில்லை. பெஸ்கியும் இந்த மாற்றத்தைச் சுட்டவில்லை. இதனால் அன்றைய பேச்சு மொழியில் அப்படி உச்சரிக்கப்படவில்லை என்று தீர்மானிக்க முடியாது. பிற மூலாதாரம் இ, ஒ மாற்றத்தைப் புலப்படுத்தியுள்ளது. <எ> o]—சொல்லுக்கு இடையில் இதழ் ஒலிக்கும் நாமடி ஒலிக்கும் நடுவில் வரும்.

| | |
|---|---|
| பெண் [pon], | பெட்டண [pottana] |

இங்கு இரண்டாவது சொல்லின் இலக்கிய வடிவம் பட்டணம் என்பதே. எனவே அதன் தமிழ் வடிவமும் இராமன் ஒலி பெயர்ப்பும் சந்தேகத்துக்கு உரியதாக உள்ளன.

[e] ஏனைய இடங்களில்

| | |
|---|---|
| எங்கள் [engöl] | செலை [tschelei] |
| எப்படி [ebbari] | தீற்கத்தெரிசி [dirkaderischi |

செலை என்பதன் இலக்கிய வடிவம் சிலை என்பதும் தீற்கத் தெரிசி என்பதன் இலக்கிய வடிவம் தீர்க்கதரிசி என்பதும் சுட்டிக் காட்டத் தகுந்தது.

எகரத்தை முதலாக உடைய சொற்களின் சில தமிழ் வடிவங் களே யெகரமாக எழுதப்பட்டு [e] ஆக ஒலி பெயர்க்கப்பட்டும் சில

தமிழ் வடிவங்களை எகரமாக எழுதப்பட்டு [ye] ஆக ஒலி பெயர்க்கப்பட்டும் உள்ளன.

[எங்கும்] யெங்கும் [enkum]
ஏசு [yesu]

பொதுவாகத் தமிழில் சொல்லுக்கு முதலில் வரும் முன்னுயிர்கள் யகர உடம்படுமெய்யோடும் (onglide) பின்னுயிர்கள் வகர உடம்படுமெய்யோடும் உச்சரிக்கப்படுவதாகவே ஒலியியலார்கள் கருதுகிறார்கள்.

<ஒ> [o] எங்கும் வரும். இது இதழ்குவி பின் நடு உயிர்.

போறா [pora] போதிவி [podiwi]

2.4.1.2. நெடில்

நெடுங்கணக்கில் உயிர் எழுத்துக்களில் குறில் எழுத்துக்களைக் குறிக்க ரோமன் எழுத்தோடு பிறைக் குறியும் (-உம் ǐ, ǔ) நெடிலைக் குறிக்க வளைவுக் குறியும் (உ.ம். ĩ, ũ) சேர்க்கப்பட்டுள்ளன. உயிர்மெய் எழுத்துக்களில் எந்தக்குறியும் சேர்க்காமல் குறில், நெடில் என்ற வாசகங்கள் இணைக்கப்பட்டுள்ளன. சொற்களை ஒலிபெயர்க்கும் போது சில இடங்களில் நெடிலைக் குறிக்க ['] என்ற குறி சேர்க்கப்பட்டுள்ளது.

ஆ [a'] ராசா [ra'scha] பிசாசு [bischa'schu]
சாதி [scha'di] பிறபாடு [bidpa'du]
வாய் [wa'i] முதலியன.

ஈ [i'] நீதி [ni'di]
[u'] வீடு [w'udu]

ஊ [u'] பூமி [pu'mi] பூசை [pu'schei]
சூனியம் [tschu'niam]

ஏ [e'] கேழ்வி [kəlwi] தேவ [de'wa]
சருவேசுரன் [saruwe'suren]

ஓ [o'] லோகம் [logum] போற [po'ra]

ஏகாரமும் ஓகாரமும் முறையே [ih], [o'h] என்றும் வேறு சில சொற்களில் ஆ, ஏ, ஓ ஆகிய மூன்று நெடில்களும் எந்தவிதத் துணைக்குறி இல்லாமலும் ஒலிபெயர்க்கப்பட்டுள்ளன.

ஈ [ih] நீங்கள் [nihngöl]

| | | | | |
|---|---|---|---|---|
| ஓ [o'h] | போனோம் | [pono'hm] | | |
| | இருக்கிறோம் | [irukkiro'hm] | | |

எந்தவிதத்துணைக் குறியும் இல்லாமல் இருப்பவை.

| | | | | |
|---|---|---|---|---|
| ஆ [a] | ஆனை | [anei] | ஆராதனை | [ara'danei] |
| | ஆணை | [anei] | ஆசை | [achei] |
| | ஆகாதவர் | [aga'dawer] | மாதா | [mata'] |
| | ஆதி | [adi] | | |
| ஈ [i] | சிவன் | [tschiwen] | | |
| ஓ [o] | அழிஞ்சு போறது | [poradu] | | |

இங்குச் சொல்லுக்கு முதலில் வரும் நெடில்களே அப்படி ஒலி பெயர்க்கப்பட்டுள்ளன. ஐரோப்பிய மொழிக்காரர்களுக்குக் குறில் நெடில்களை வேறுபடுத்துவது கடினமானது என்று பெஸ்கி குறிப்பிட்டிருப்பதால் (14,5) நெடில் ஒலி பெயர்ப்புகளில் தடு மாற்றத்துக்குரிய காரணத்தை நாம் புரிந்து கொள்ளலாம்.

சொல்லுக்கு இறுதியில் வரும் ஆகாரம் [á] என்று ஒலி பெயர்க்கப்பட்டுள்ளது.

மாதா [madá] பிதா [bidá]

இங்கும் சொல்லுக்கு முதலில் நெடில் சரியாக ஒலி பெயர்க்கப் படவில்லை என்பது கவனிக்கத் தகுந்தது.

ஐகாரம் எங்கும் ē என்றே ஒலி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

| | | | |
|---|---|---|---|
| மகிமை | [magimei] | புகை | bugei] |
| தலை | [dalai] | விலை | [wilei] |

பால்டே இலக்கணத்தில் ஐகாரம் எழுத்துவரிசையில் [ai] என்று ஒலி பெயர்க்கப்பட்டிருந்தாலும். சொல்லில் வரும்போது [ei] என்றே ஒலி பெயர்க்கப்பட்டுள்ளது. பெஸ்கியும் கால்டு வெல்லும் [ei] என்றே எங்கும் ஒலிபெயர்த்துள்ளார்கள். எனவே ஐகாரம் முன் உயிராக உச்சரிக்கப்படுகிறது என்று பொருள்.

ஔ என்பதை [au] என்று ஒலிபெயர்த்துள்ளார். கவ்வை என்று காணப்படும் சொல் கௌவை என்று இலக்கிய வழக்கில் வழங்குவதுதான். இது, kawwei என்று ஒலி பெயர்க்கப் பட்டிருக்கிறது. எனவே ஔ என்பது [aw] என்று ஒலிபெயர்க்கப் படுவதாகக் கொள்ளலாம். [w] என்று ஒலி பெயர்த்திருப்பது தான் [aw] என்று ஒலி பெயர்க்கக் காரணம்.

### 2.4.2. மெய்யெழுத்துக்கள்

வல்லெழுத்துகளில் இன்று கால்டுவெல் பெயரால் பரக்கப் பேசப்படும் வல்லொலி மெல்லொலி மாற்றத்தைக் குரல் இலா ஒலி, குரல் ஒலி மாற்றமாகச் சீகன்பால்கே முதன்முதலில் தன்னுடைய ஒலிபெயர்ப்புகள் மூலம் சுட்டிக்காட்டியுள்ளார். அதை ஒட்டிப் பெஸ்கி ஒவ்வொரு எழுத்துகளின் மாற்றமாகப் பொதுமைப்படுத்தி விளக்கியதைப் பின்பற்றியே (11.4), கால்டுவெல் எல்லா வல்லெழுத்துக்கும் பொதுவான ஒரு ஒலி விதியாகக் குறிப்பிட்டுள்ளார் (1856 : 137).

#### 2.4.2.1. வல்லெழுத்துகள்

சீகன்பால்கு இங்கு இரண்டு வித உச்சரிப்புகளைப் புலப் படுத்தியுள்ளார். அவைகளில் ஒன்றுதான் குரல்இலா ஒலி குரல் ஒலி மாற்றம். இன்னொன்று எங்கும் குரல் ஒலியாக உச்சரிப்பது. வல்லெழுத்துக்களைப் பொறுத்தவரையில் க, ட, த, ப ஆகிய நான்கும் குரல் இலா ஒலி குரல் ஒலியாக மாறும் மாற்றத்தைப் பெறும். இங்கும் சீகன்பால்கு த, ப ஆகிய இரண்டு வல்லொலிகள் மட்டுமே எங்கும் குரல் ஒலியாக உச்சரிக்கப்படுவதைப் புலப்படுத்தி யுள்ளார். எனவே அவைகளைத் தனித்தனியாகப் பார்ப்போம்.

நெடுங்கணக்கு வரிசையில் ககரத்துக்கு ஒரு ஒலி மதிப்பும் (K-மட்டும் குரல் இலா ஒலி), ட, த, ப ஆகிய மூன்று வல்லெழுத்து களுக்கும் இரண்டு ஒலிமதிப்புகளும் (குரல் இலா ஒலி, குரல் ஒலி) சகரத்துக்கு அடைப்புரசொலி, உரசொலி என்ற இரண்டு ஒலி மதிப்புகளும் கொடுத்துள்ளார். ரோமன் எழுத்தில் ட, த என்ற இரண்டு ஒலிகளுக்கும் வேறு வேறு குறியீடு இல்லாததால் அவை ஒரே விதமாக ஒலிபெயர்க்கப்பட்டுள்ளன. ககரம் சொல்லுக்கு முதலிலும், இடையில் ட, ழ ஆகிய மெய்யெழுத்துக்குப் பிறகும், உடனிலை மயக்கமாக வரும் போதும் குரல்இலா ஒலிகளாக ஒலி பெயர்க்கப்பட்டுள்ளன.

{ ட், ற், ழ் } — உடனிலை மெய்மயக்கம்

| | | | |
|---|---|---|---|
| கடை | [Kadei] | கேழ்கிறது | [Kelkiradu] |
| கனி | [Kani] | தீற்கத்தெரிசி | [tirkaderischi] |
| கிறுபை | [Kirubei] | குடுக்கிற | [Kurukkira] |
| குறு | [Kuru] | லோகத்துக்கு | [logaddukku] |
| குறை | [Kurei] | இருக்கிறோம் | [irukkirohm] |

காத்து [Kaddu] நமக்கு [namakku]
கேழ்வி [Kelwi]

டகரம் சொல்லுக்கு முதலில் வராது. இடையில் இரட்டித்து மட்டும் வருவதால் அங்குக் குரல் இலா ஒலியாக உச்சரிக்கப் பட்டிருக்கிறது.

சில சொற்களில் குறிப்பாகத் தொடராக வரும்போது தமிழ் வரிவடிவில் இரட்டை வல்லினம் காணப்பட்டாலும் ஒலி பெயர்ப்பில் குரல் இலா வல்லினமாக ஒன்று மட்டுமே காணப் படுகிறது.

நன்னாக்கேழ் [nannagakel]
நமக்குக்குடு [namakkukutu]
ஆகாதவர்களாய் போ [agadawergölai po]

இரட்டைக் குரல்இலா வல்லினமே ஒலிநிலையில் குரல்இலா ஒரு வல்லினமாகக் கருதலாம் என்ற கருத்தும் உண்டு. அல்லது எழுத்துமொழியில் அந்தச்சொற்கள் ஒருசொல் நீர்மைத்தாய் உச்சரிக்கப்பட்டதையும் ஒலிபெயர்ப்பில் இரண்டு வேறு சொற் களாய் உச்சரிக்கப்பட்டதையும் காட்டுவதாகக் கொள்ளலாம். இன்னும் சில சொற்களில் பேச்சுமொழியிலும் எழுத்துமொழி யிலும் தொடராகவோ அல்லது தொகையாகவோ இருக்கும்போது குரல்இலா ஒரு வல்லினமே காணப்படுகின்றது.

மனபீடை [manapidei] அழிஞ்சுபோ [alinscbupo]

மூக்கொலி, தட்டொலி (ரகரம்) ஆகியவற்றிற்குப் பிறகும் இரண்டு உயிர்களுக்கு இடையேயும் வல்லினம் வரும்போது க, த, ட, ப ஆகிய நான்கு வல்லினமும் குரல் ஒலியாக எழுதப் பட்டிருப்பது குரல் ஒலியாக உச்சரிக்கப்பட்டதன் பிரதிபலிப்பே ஆகும்.

க [g] புகை [bugei] உங்கள் [uṅgöl]
ஆகாதவர்கள் [agadawergal]

த [d] ஆதி [adi] உதவி [udawi] மந்திரம் [mandirum]

ட [d] உடைய [udaiya] வீடு [wudu] ஆண்டவர் [andawer]

ப [b] சபை [sabei] திரும்ப [dirumba]

இங்கும் இரண்டு மாறுபாடுகள் காணப்படுகின்றன. ஒன்று மூக்கொலிக்குப்பிறகும் குரல்இலா ஒலி வல்லொலியாக ஒலி

பெயர்க்கப்பட்டிருப்பது. உ.ம் யெங்கும் [eṅkum] இது அச்சுப் பிழையாகவோ அல்லது ஒலிபெயர்ப்பு பிழையாகவோ கருதப்பட வேண்டும். இன்னொன்று டகரம் இரண்டு உயிருக்கு இடையில் [r] ஆக ஒலிபெயர்க்கப்பட்டிருப்பது.

முடி (muri), இப்படி (ibbari), எப்படி (ebbari), படைப்பி (pareippi), குரு (Kuru). [r] என்பது நுனிநா நுனிஅண்ண தட்டொலி. [d] என்பது நாமடி குரல் வல்லொலி. டகரத்தை பால்பே [r] ஆக ஒலிபெயர்க்க, பெஸ்கி [d] ஆக ஒலிபெயர்த்து அது [d], [r] [r] ஆகிய இரண்டு ஒலிகளுக்கும் இடைபட்ட ஒலியாக உச்சரிக்கப்படுகிறது (13.4) என்று குறிப்பிட்டுள்ளார்.

உண்மையில் டகரத்தின் குரல் வல்லொலி [d] என்பதே. அது உரசொலியாக மாறிய தன்மையையே [r] என்பது குறிக்கிறது. இன்று இரண்டு உயிர்களுக்கு இடையே வல்லினம் உரசொலியாக உச்சரிக்கிறோம். (சண்முகம் 1978) மேலும் 19 ஆம் நூற்றாண்டில் இரண்டு உயிருக்கு இடையே வரும் ககரம் ஹகரமாகப்போய் ஒலி பெயர்த்திருப்பதும் (சண்முகம் 1971) அறியத்தகுந்தது. எனவே சீகன்பால்கு இரண்டு உயிர்களுக்கு இடையே [d] ஆகவும் [r] ஆகவும் ஒலிபெயர்த்திருப்பது இரண்டு கிளைமொழிகளின் உச்சரிப்பைச் சுட்டுவதாகக் கொள்ளலாம்.

தகரமும் பகரமும் சொல்லுக்கு முதலிலும் இரட்டித்து வரும் போதும் கூட முன்னரே குறிப்பிட்ட குரல் ஒலியாக ஒலிபெயர்க்கப் பட்டிருக்கின்றன.

த [d] தலை [dalai] தயவு [deiawu] திரும்ப [dirumba]
திருசபை [dirusabei] தேவ [dewa]
ப [b] பசி [baschi] பிதா [bita] பிள்ளை [bullai]
புகை [bugei] புண்ணிய [bunnia] பிடவை [pidawei]
பக்கம் [bakhum) பிற்பாடு [bidpadu] பல்லி [billi]
பிறசாதம் [borasadum] படைப்பு [bareibbidda]
பகல் [bagel]
பெண் [bön] பெட்டணம் [pattana] போற [para]
போதிவி [bodiwi] பாவம் [powam] பாய்க்கியம் [paikkiam]
பூசை [buschei] பூமி [pumi]

இங்கு உயிர்மெய் எழுத்துகளை ஒலிபெயர்த்தது போலக் குறிலோடு வரும்போது குரல் ஒலியாகவும் நெடிலோடு வரும்போது குரல்இலா ஒலியாகவும் ஒலிக்கப்பட்டதன் காரணம் என்ன என்று

பார்க்கவேண்டும். அடுத்து சில இடங்களில் தகரத்தைப் பொறுத்த வரையில் நெடிலோடு வரும்போது குரல் ஒலியாகவும் ஒருசொல் காணப்படுவதற்குக் காரணம் அறிய முயலவேண்டும். நெடிலுக்குப் பிறகு குரல்ஒலியாக ஒலிபெயர்க்கப்பட்ட 'தேவ' என்பது வடமொழிச் சொல். அது வட மொழியில் குரல் ஒலியாக உச்சரிக்கப்படுகிறது. எனவே மூலமொழி உச்சரிப்பு சில கிளைமொழி களில் காணப்படுகிறது என்பதை ஒலி பெயர்ப்பு காட்டுவதாகக் கொள்ளலாம். ஆனால் நெடில் ஒலி உடைய இரண்டு சொற்களும் கூட மூலமொழியில் குரல் ஒலியாக இருக்க, இங்குக் குரல்இலா ஒலியாக ஒலிபெயர்க்கப் பட்டதற்குக் காரணம் புரியவில்லை.

பகரத்தைப் பொறுத்தவரையில் குறிலோடு வரும்போது மட்டுமே இரண்டுவித ஒலிபெயர்ப்பு காணப்படுகிறது. அந்த இரண்டு சொற்களும் எகரத்தோடு வருவது தற்செயலானதா என்று தெரியவில்லை. இரண்டும் தமிழ்ச் சொற்கள்தான். ஆனாலும் புகை, பசி, பிள்ளை போன்ற தமிழ்ச் சொற்கள் குரல் ஒலியாக ஒலிபெயர்க்கப்பட்டுள்ளதைக் கவனிக்கும்போது பெண், பெட்டண என்ற இரண்டு குறிலோடு வந்த சொற்களைக் குரல் ஒலியாக ஒலிபெயர்த்திருப்பதற்குக் காரணம் தெரியவில்லை.

பொதுவாகத் தொல்திராவிடத்திலே குரல்வல்லொலி இருக்க வேண்டும் என்று கருதப்பட்டாலும் (Emeneau, 1962) அதற்குச் சரியான இனச்சொற்கள் (cognates) கண்டுபிடிக்கவில்லை. இருந்தாலும் தமிழிலிருந்து கடனாண்ட சில சொற்கள் குரல் வல்லொலியுடனும் இருப்பது (Chatterji 1956), இன்றைய தமிழிலும் சில சொற்கள் குரல் வல்லொலியாக உச்சரிக்கப்படுவதாலும் (சண்முகம், 1978 : 84) சீகன்பால்கு ஒலிபெயர்ப்பை முழுவதும் அலட்சியப்படுத்த முடியாது. ஆனாலும் இது பற்றிய உண்மை அறிய கிளைமொழி ஆராய்ச்சியாளர் அதிகக் கவனம் செலுத்த வேண்டும்.

இரட்டை வல் எழுத்துகளும் இரட்டை குரல் வல்லொலி யாகவும் ஒலிபெயர்க்கப்பட்டுள்ளன.

காத்து [ka'ddu] கத்தன [kadden] கத்தி [kaddi]
சத்தியம் [tscaddiam] லோகத்தின் [logaddin]
படைப்பித்த [bareibidda] நரகத்துக்கு [naragadukku]
மோஷ்சத்துக்கு [mottschaddukku]
இப்படி [ibbari] அப்படி [abbadi] எப்படி [ebbari]
படைப்பித்த [bareibbidda] அப்பம் [abbum]

இங்கு இரட்டித்துவரும் எல்லாச் சொற்களும் இரட்டைக் குரல் வல்லொலியாகவே ஒலிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. ஆனாலும் சில தொகைச் சொற்களிலும் குரல் இலா வல்லொலியாக ஒலிபெயர்த்ததைப் போலவே ஒற்றைக் குரல் ஒலியாகவும் சில ஒலிபெயர்க்கப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| த்த் | [d] | தீற்கத்தெரிசி | [tirkaderischi] |
| | | எங்களுக்குத் தயவு | [engolukkudeiawu] |
| ப்ப் | [b] | தேவப்பிரசாதம் | [dewa borasadum] |
| | | லோகத்துக்குப் பிரகாசம் | [logadduhhaboragaschum] |
| | | நம்மைப் படைப்பித்த | [nammei bareibidda] |

தமிழ் வடிவம் ஒருசொல் நீர்மைத்தான உச்சரிப்பைக் காட்டுவதாகவும் ரோமன் ஒலிபெயர்ப்பு (தொகையாகவும் தொடராகவும் இருந்தாலும்) தனித்தனிச் சொற்களாக ஒலி இடைவெளியின் உச்சரிப்பைச் சுட்டுவதாகவும் கொள்ளலாமா? என்ற ஐயம் வருகிறது.

இரண்டு உயிர்களுக்கு இடையே வரும் தகரம் இரண்டு சொற்களில் குரல் இலா ஒலியாக ஒலிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

மாதா [mata] பிதா [bita]

இரண்டும் வடசொற்களாக இருப்பதாலும் வடமொழி மூலத்தில் குரல் இலா வல்லொலியாக இருப்பதாலும் அவை எப்படி ஒலிபெயர்க்கப்பட்டிருக்கின்றன என்று கருதத் தோன்று கிறது. அப்படியானால் பிதா என்ற சொல்லில் முதல் வரும் பகரமும் குரல் இலா வல்லொலியாக வடமொழி மூலத்தில் இருந்த சில, இங்குக் குரல் வல்லொலியாக ஒலிபெயர்க்கப்பட்டிருப்பது மூலமொழியின் செல்வாக்கு என்று கொள்ள முடியாதே என்று சிந்திக்கத் தோன்றுகிறது.

பிற்பாடு [bidpadu] என்று றகரத்துக்குப்பின் வரும்போது பகரம் குரல் இலா ஒலியாக ஒலி பெயர்த்திருப்பது மேலே குறிப்பிட்ட ஒழுங்கான உச்சரிப்பின் பிரதிபலிப்பாகும்.

மெய்யெழுத்து வரிசையில் சகரம் [tsch], [sch] என்ற இரண்டு விதமாகவும் உயிர்மெய் எழுத்து வரிசையில் [tsch] என்று ஒருவிதமாகவும் ஒலிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. ஆனால் சொற்களை ஒலிபெயர்க்கும் போது [tsch], [sch], [s] என்ற மூன்று ஒலிபெயர்ப்புகள் காணப்படுகின்றன. இந்த மூன்று ஒலி

பெயர்ப்புகளை ஒலியியல் நோக்கில் முறையே இடைநா இடை அண்ண அடைப்பு உரசொலியாகவும் (Affricate [Č] இடைநா இடை அண்ண குழி உரசொலியாகவும் (groove sibilant,[Š] ஆகவும் நுனிநா நுனி அண்ண ஒலியாகவும் (S)கொள்ளலாம். இவை மூன்றும் மூன்று கிளைமொழி வழக்குகளைப் பிரதிபலிப்பதாகக் கொள்ளலாம். பழங்காலச் சமூக அமைப்புப்படி [tsch] என்பது சமூக நிலையில் தாழ்த்தப்பட்டவர்களின் வழக்காகவும், வட்டார நிலையில் தென்பாண்டி (கன்னியாகுமரி மாவட்டம்) வழக்காகவும்; [sch] என்பது உயர்ந்தவர்கள் (பிராமணர்கள்) பேச்சுவழக்காகவும் [ś] என்பது பிற சமூக, வட்டார வழக்காகவும் கொள்ளலாம்.

| ச [tsch] | | [sch] | |
|---|---|---|---|
| சத்தியம் | [tschaddiam] | சாதி | [schadi] |
| சுதன் | [tschuden] | | |
| சூரியன் | [tschurien] | [S] | |
| சீவன் | [tschiwen] | சறுவேசுரன் | [saruwesuren] |
| செய்கிற | [tschgira] | சபை | [sabei] |
| செலை | [tschelai] | | |

சொல்லுக்கு இடையே இரண்டு உயிர்களுக்கு நடுவில் மூக் கொலிக்குப் பிறகும் [sch] என்றே ஒலிபெயர்க்கப்பட்டுள்ளது.

| [-sch-] | | | |
|---|---|---|---|
| ராசா | [rascha] | பிசாசு | [bischacu] |
| மனசு | [manaschu] | ஆசை | [aschei] |

இங்கு மூக்கொலிக்குப்பிறகு இடைநா இடை அண்ண குரல் அடைப்பு உரசொலியாக [j] வரும். ஆனால் அதை [sch] என்று ஒலிபெயர்த்திருப்பதற்கான காரணம் தெரியவில்லை. சொல்லுக்கு இடையில் வரும் இரட்டைச் சகரம் [tsch] ஆக ஒலிபெயர்க்கப் பட்டிருக்கிறது. திருச்சபை (dirutschabei) இங்கு, சபை என்ற சொல் தனியே வரும்போது (sabei) என்று ஒலிபெயர்த்திருப்பதை நோக்கினால் இன்றைய பேச்சுமொழியை ஒட்டி அதாவது சொல் லுக்கு முதலில் நுனிநா நுனி அண்ண உரசொலியாகவும் அது நடுவில் இரட்டித்து வரும்போது இடைநா இடை அண்ண அடைப்பு உரசொலியாகவும் உச்சரிக்கப்படுவதை ஒட்டி ஒலிபெயர்ப்பு அமைந்துள்ளதைக் கொள்ளலாம். அதே சமயத்தில் சாதி என்ற சொல் தனியே வரும்போது [schádi] என்றும் தொகையாக வரும்

போதும் (பெண்சாதி) [ponschadi] [sch] என்று ஒலிபெயர்த்திருப்பது இரண்டு கிளைமொழிவழக்குகளைக் காட்டுகிறதா? ஒருகால் பெண்சாதி என்பது தொகையாக இருந்தாலும் தனித்தனி சொல்லாக உச்சரிக்கப்பட்டது என்பதை ஒலிபெயர்ப்பு காட்டுகிறதா? என்று தெரியவில்லை.

ஷகரத்தை அடுத்து வந்த சகரம் [tsch] ஆக ஒலிபெயர்க்கப்பட்டுள்ளது.

மோஷ்சத்துக்கு [mottschaddukku]
ரெஷ்சித்த [rettschidda]

இங்கு இரண்டு செய்திகள் அறியத்தகுந்தவை. தமிழில் [ஷ்] ஆக எழுதப்பட்டாலும் இலக்கிய வழக்கில் [ட] ஆக எழுதும் வழக்கம் உண்டு. அதனால் [ஷ] என்பது [t] ஆக ஒலி பெயர்க்கப்பட்டிருக்கலாம். இன்னொன்று : எழுத்துமொழியை வாசிக்கும் போது இடைநா, இடைநா குரல் இலா அடைப்புரசொலி Č-[tsch] ஆக உச்சரிக்கப்படுகிறது. இங்கு இன்னொரு செய்தியும் சுட்டிக் காட்டத் தகுந்தது. தமிழ் நெடுங்கணக்கில் கொடுக்காத [ஷ] என்று கூடுதலான எழுத்து சொற்களஞ்சியத்தில் காணப்படுகிறது. அதுவும் [sch] என்றே ஒலிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

மனுஷன் [manuschen] மேலே குறிப்பிட்டபடி சகரத்துக்கு முன்னால் வரும் [t] ஆக ஒலிபெயர்த்திருப்பதால் டகர உச்சரிப்பைக் காட்டுவதாகக் கொள்ளவேண்டுமே தவிர ஷகர உச்சரிப்பைக் காட்டுவதாகக் கொள்ளக் கூடாது.

நெடுங்கணக்கில் றகரம் [r] ஆக ஒலிபெயர்க்கப்பட்டுள்ளது. றகரம் சொல்லுக்கு முதலிலும் இறுதியிலும் வராது. சொல்லுக்கு இடையில் இரண்டு உயிர்கள் வரும்போது [r] ஆக ஒலிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

அறிவு [ariwu] குறை [kurei] போற [pora]

இன்னொரு வல்லினத்துக்கு முன்னால் வரும்போது, ககரத்தின் முன்னால் [r] ஆகவும், பகரத்தின் முன்னால் [d] ஆகவும் றகரம் ஒலிபெயர்க்கப்பட்டுள்ளது.

தீற்கத்தெரிசி [tirkaderischi]
பிற்பாடு [bidpadu]

முதல்சொல் எழுத்துமொழியில் தீர்க்கதெரிசி என்று எழுதப் படும், எனவே றகரமாக எழுதப்பட்டாலும் ரகரமாக உச்சரிக்கப்

பட்டது என்பதையே ஒலிபெயர்ப்பு காட்டுகிறது. றகரம் சங்கத் தமிழில் நுனிநா நுனிஅண்ண குரல்இலா வல்லொலி (Alveolar stop) உச்சரிக்கப்பட்டதாலேயே வல்லெழுத்துகளில் சேர்க்கப் பட்டது. இடைக்காலத்தில் நுனிநா நுனி அண்ண ஆடொலியாக உச்சரிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று தமிழ் மொழி வரலாற்றில் (மீனாட்சி சுந்தரம், 1965; 133) அறிகிறோம். எனவே [d] என்பது நுனிநா நுனி அண்ண குரல்வல்லொலியாக உச்சரிக்கப்பட்டதைக் காட்டுவதாகக் கொள்ளவேண்டும். ஆனால் பேச்சுமொழியில் இப்படிப்பட்ட உச்சரிப்பு வழங்கப்பட்டதா என்று ஐயமாக இருக்கிறது.

பால்டேயும் பெஸ்கியும் [rr]ஆக ஒலிபெயர்த்துள்ளார்கள். இது ஆடொலியைக் குறிக்கும். சீகன்பால்கு ஒலிபெயர்ப்பான [r] என்பது தட்டொலியைக் குறிக்கும். இவை இரண்டும் வேறுபட்ட கிளைமொழிகளைக் குறிப்பதாகக் கொள்ளலாம். முன்னது இன்றும் நாஞ்சில் நாட்டிலும் பின்னது ஏனைய பகுதியிலும் வழங்கப்படுகிறது.

மெல்லெழுத்துக்குப் பிறகு மிக மிருதுவான (d) (very soft 'd') ஒலிக்கும் என்று பெஸ்கி (12,4) குறிப்பிட்டுள்ளார். சில கிளை மொழிகளில் இது காணப்படுகிறது.

காற்று என்ற சொல்லைச் சீகன்பால்கு காத்து என்று தமிழிலும் (kaddu) என்று ரோமன் எழுத்திலும் குறிப்பிட் டுள்ளார். இது பேச்சுமொழியில் <ற்ற்> என்பது <த்த்> என்று மாறிவிட்டதைக் காட்டும். த்த் வருகிற பிறசொற்களையும் [dd] என்று ஒலிபெயர்த்திருப்பதால் காத்து <காற்று என்பதை [dd] என்று ஒலிபெயர்த்திருப்பதில் புதுமை எதுவும் இல்லை.

றகரம் இரட்டித்து வரும்போது இரட்டை [tt]க்குச் சமம் என்று பெஸ்கி குறிப்பிடுவதும் பேச்சுமொழி உச்சரிப்பை ஒட்டியதே ஆகும்.

### 2.4.2.2, மெல்லெழுத்துகள்

மகரம் எங்கும் [m] ஒலிபெயர்த்திருக்கப்பட்டிருப்பது அது ஈரிதழ்மூக்கொலி என்பதைக் காட்டுகிறது. ஆனாலும் நம்மை என்பது (ப. 13) [nanmei] என்று ஓரிடத்தில் மகரத்தை [n] ஆக ஒலிபெயர்த்திருப்பது அச்சுப்பிழையாக இருக்கலாமோ என்று கருதத்தோன்றுகிறது.

னகரமும் நகரமும் எங்கும் [n] ஆக ஒலிபெயர்க்கப்பட்டிருப்பது ரோமன் எழுத்தில் இரண்டுக்கும் வேறுபாடு இல்லை என்பதையும் இரண்டுக்கும் உச்சரிப்பில் வேறுபாடு இல்லை என்பதையும் காட்டுவதாகக் கொள்ளலாம். எழுத்துமொழியில் சொல்லுக்கு முதலிலும் இடையிலும் தகரத்துக்கு முன்னரும் நகரமாகவும் ஏனைய இடங்களில் னகரமாகவும் எழுதப்பட்டாலும் எங்கும் [n] ஆக ஒலிபெயர்க்கப்பட்டிருக்கிறது. ஆனால் தகரத்துக்குமுன்னால் வரும்போது நகரம் பல்லொலி (Dental) ஆகவே உச்சரிக்கப் படுகிறது. ரோமன் எழுத்தில் இரண்டுக்கும் வேறுபாடு இல்லாத தால் வேறுபடுத்தாமல் விட்டிருக்கலாம்,

| | | | |
|---|---|---|---|
| நீதி | [nidi] | ஆணை | [anei] |
| நீங்கள் | [ningöl] | ஞானம் | [gnanam] |
| மந்திரம் | [mandirum] | கனி | [kani] |
| | | மகன் | [magen] |
| | | கன்னம் | [kannum] |

ங கரமும் ணகரமும் எங்கும் [n] ஆக ஒலி பெயர்க்கப்பட்டிருப் பதை ரோமன் எழுத்தில் தனி எழுத்தோ குறியீடோ இல்லாதது தான் காரணமாகக் கொள்ளவேண்டும், அதே சமயத்தில் கண் என்பதை [kan] என்றும் மகன் [magen] என்றும் மூக்கொலிக்கு முன் வரும் ஒரே உயிரெழுத்தை—அகரத்தை இரண்டுவிதமாக ஒலி பெயர்த்திருப்பதால் இரண்டுக்கும் உச்சரிப்பில் வேறுபாட்டைச் சீகன்பால்கு உணர்ந்திருக்கவேண்டும் என்பதைப்புலப்படுத்துகிறது,

ஞ கரத்தை மெய்யெழுத்து வரிசையில் [gn], [n] என்றும் உயிர்மெய் வரிசையில் [n] என்றும் ஒலிபெயர்த்துள்ளார். ஆனால் சொல்லுக்கு முதலில் [gn] ஆகவும் சகரத்துக்கு முன் [n] ஆகவும் ஒலிபெயர்த்துள்ளார்.

ஞானம் [gnanum]
அழிஞ்சு [arinschu]

பால்டே [n] என்றும் பெஸ்கி [gn] என்றும் ஞகரத்தை ஒலி பெயர்த்துள்ளார்கள். முன்னது போர்ச்சுகீசிய மரபு என்றும் பின்னது பிரெஞ்சுமரபு என்றும் பெஸ்கியே சுட்டிக்காட்டியுள்ளார் (12.4).

### 2.4.2.3. இடையெழுத்துகள்

ரகரத்தையும் லகரத்தையும் முறையே [r], [l] என்று எல்லோரும்.ஒலிபெயர்த்துள்ளார்கள். இவை இரண்டும் முறையே

நுனிநா நுனி அண்ண தட்டொலி நுனிநா நுனிஅண்ண மருங்கொலி என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. ள கரத்தையும் [l] என்று ஒலிப் பெயர்த்திருப்பதற்கு ஐரோப்பிய மொழியில் தனி எழுத்து இல்லாததுதான் காரணம். இருந்தாலும் சீகன்பால்கு பகல் என்பதை [bagel] என்றும் மகள் என்பதை (magöl) என்றும் ஒலி பெயர்த்திருப்பதன் மூலம் இரண்டுக்கும் உச்சரிப்பில் வித்தியாசம் இருப்பதை உணர்ந்து அந்த வேறுபாடு பக்கத்து உயிரொலியையும் மாற்றும் செல்வாக்கு உடையது என்பதைப் புலப்படுத்திவிட்டார்.

யகரத்தை நெடுங்கணக்கில் மெய்யெழுத்து வரிசையில் அல்லது [y] என்றும் உயிர்மெய் எழுத்து வரிசையில் [i] என்றும் சொற்களில் வரும்போது [i] அல்லது [ϕ] என்றும் ஒலிபெயர்த்துள்ளார்.

[i]- சொல்லுக்கு இறுதியிலும் நடுவில் அகரத்துக்கு முன்னும் இரட்டை வல்லினத்துக்கு முன்னும் வரும்.

வாய் [wai] ஆகாதவர்களாய் [agadewergölai]

தயவு [deiavu] பாய்க்கியம் [baikkiam]

[ϕ] சொல்லுக்கு நடுவில் இகரத்துக்குப்பிறகும் ககரத்துக்கு முன்னும் தொடரில் சொல்லுக்கு இறுதியில் இகரத்தை முதலாக உடைய இன்னொரு சொல்லுக்கு முன்னும் வரும்,

காரியம் [kariam] புண்ணிய [bunnia] வழியும் [valium]
பாய்க்கியம் [baikkiam] செய்கிறது [schegiradu]
வல்லவராய் இரு [wallawarairu]
பாவிகளாய்இரு [pawigölairu]

தொடரில் வரும்போது யகரம் கெடுவது பேச்சுமொழியின் செல்வாக்கைக் காட்டும். செய்கிறது என்ற தனிச்சொல்லில் யகரம் கெட்டதும் பேச்சு மொழிச் செல்வாக்காக இருக்கலாம். யகரத்தைப் பெஸ்கி [y] என்று ஒலிபெயர்த்துள்ளார்.

வகரம் எங்கும் [w] என்றே ஒலிபெயர்க்கப்பட்டுள்ளது. லத்தீன் மொழியும் [v], [w] என்ற குறியீடும் உண்டு. தமிழ் வகரம் இதழ்பல் ஒலி [labiodental], [w] என்பது ஈரிதழ் ஒலி. சீகன்பால்கு ஏன் [w] என்ற குறியைத் தேர்ந்தெடுத்தார் என்று தெரியவில்லை. பால்டேயும் பெஸ்கியும் [v] என்றே ஒலிபெயர்த்துள்ளார்கள்.

ழகரம் [sch], [r], [l], என்று மெய்யெழுத்து வரிசையிலும் [sch] என்று உயிர்மெய் வரிசையிலும் ஒலிபெயர்க்கப்பட்டுள்ளது.

சொற்களை ஒலிபெயர்க்கும்போது இன்னொருமெய்யெழுத்துக்கு முன்னால் [l] ஆகவும் இரண்டு உயிர்களுக்கு இடையே [r] என்றும் ழகரம் ஒலிபெயர்க்கப்பட்டுள்ளது.

[l] கேழ்வி [kelwi] கேழ்கிறது [kelkiradu]

[r] வழி [wari] அழிஞ்சு [arinschu] விழு [wuru]

கேழ்வி, கேழ்கிறது என்ற இரண்டு சொற்களும் கேள் என்ற வினையடியாகத் தோன்றியவை; எழுத்துமொழியில் முறையே கேள்வி, கேட்கிறது என்று எழுதப்படுபவை. எனவே ள>ழ மாற்றம் மிகை திருத்தமாக (hyper Correction) ஆகக் கொள்ள வேண்டும். [r] என்பது ரகர உச்சரிப்பைக் குறிக்கும். இதுவரையில் தமிழ்க்கிளை மொழி ஆய்வில் ரகர உச்சரிப்பு இருப்பதாகச் சுட்டிக் காட்டப்படவில்லை. பிறதிராவிடமொழிகளில் ரகர உச்சரிப்பு உண்டு' (P.S. Subrahmaniyam 1984:424) இதை ஒரு கிளைமொழி உச்சரிப்பாகக் கருத வேண்டும்.

ழ கரத்தைப் பால்டே [z] என்றும் பெஸ்கி [l] ஆகவும் ஒலி பெயர்த்தாலும் இதன் உச்சரிப்பின் முறையைப் பெஸ்கி விளக்கி யிருப்பதால் அவர் ழகர உச்சரிப்பை நன்கு அறிவார் என்று கொள்ளலாம்.

தமிழ் எழுத்துகளையும் சொற்களையும் ஒலிபெயர்த்துள்ளதன் மூலம் தமிழ் எழுத்துகளின் ஒலிமதிப்புகளையும், தமிழில் ஏற்பட்ட ஒலிமாற்றங்களையும் அறிந்துகொள்ள முடிவதை இதுவரை பார்த்தோம். உண்மையில் மொழிமாற்றம் காரணமாக ஒரு எழுத்துக்கு ஒன்றுக்கு மேற்பட்ட ஒலிகள் இருப்பதும் ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துகள் ஒரே ஒலி உடையதாக இருப்பதையும் ஒலி பெயர்ப்புகளே உணர்த்துகின்றன. இதுவே எழுத்துமொழியும் பேச்சுமொழியும் சிக்கலான உறவு உடையன என்ற உண்மையை யும் புலப்படுத்துகிறது. இந்த உண்மை பலமொழிகளுக்கும் பொருந்தும்.

## 2.5. சொல்லெழுத்து மாற்றங்கள்

கிறித்துவ அறிஞர்களின் இலக்கணம் இன்னொரு வகையாக வும் மொழியில் நடந்த ஒலிமாற்றங்களைப் புலப்படுத்துகிறது. அவர்கள் பல சமயங்களில் பேச்சுமொழியின் வடிவங்களைத் தமிழில் எழுதியுள்ளார்கள். அவர்கள் எழுதியுள்ள தமிழ் சொற் களின் வடிவம் சொற்களின் சொல்லெழுத்து வரலாற்று மாற்றங் களைப் புலப்படுத்துகிறது. சான்றாக ஒன்று என்பதை

ஒண்ணு, மூன்று என்பது மூணு என்று சீகன்பால்கு எழுதியுள்ளதன் மூலம் ன்ற் என்பது குறிலுக்கு முன்னால் ண்ண் என்றும் நெடிலுக்கு முன்னால் ண் ஆகவும் மாறிவிட்டதைப் புலப்படுத்து கிறது. பொதுவாக எல்லாச் சொல்லெழுத்து மாற்றங்களும் ஒலி மாற்றத்தை மட்டும் பிரதிபலிப்பதில்லை. சில மாற்றங்கள் எழுத்துப்பிழையாகவோ அல்லது அச்சுப்பிழையாகவோ கருதப்பட வேண்டும். சான்றாகச் சுதந்திரம் என்பது சுகந்திரம் என்று அச்சில் காணப்பட்டால் த>க முதலில் பேச்சு மொழியில் எங்காவது காணப்படுகிறதா இல்லையா என்று பார்த்து பேச்சுமொழியில் காணப்படாவிட்டால் அச்சுப்பிழையாகக் கருதவேண்டும். ஒவ்வொருத்தன், ஒவ்வொருத்தி என்ற சொற்கள் ஒவ்வொருதன், ஒவ்வொருதி என்று முறையே எழுதியிருப்பது எழுத்துப் பிழையாகக் கருதலாமே தவிர அச்சுப்பிழையாகக் கருதவேண்டியதில்லை. அப்படியே விளையாடு என்பது விலையாடு (ப. 102) என்றும் தின்னு என்பது தின்று (ப. 105) என்றும் அச்சில் காணப்படுவது பிழையே தவிர மொழி மாற்றத்தைப் புலப்படுத்தவில்லை.

ஒப்புமையாக்கம், இடமாற்றம் (metothesis) ஓரினமாதல்—வேறினமாதல் போன்ற காரணங்களோடு இலக்கண நிலையிலும் சொல்லெழுத்து மாற்றம் நடைபெற்றிருக்க வேண்டும். எல்லாம்—எல்லாத்தையும் எல்லாத்துக்கும் என்ற வேற்றுமை வடிவங்கள் ஒப்புமையாக்கத்தால் அற்றுச் சாரியை அத்துச் சாரியையாக மாறியதால் ஏற்பட்டதாகும். நான்கு என்பது நாலு என்று மாறியது பெயரடை வடிவம் பெயராக மாறியதன் விளைவு. எனவே எல்லாமாற்றங்களையும் வெறும் ஒலிமாற்றமாகக் கருதக் கூடாது.

2.5.1. அ>இ

கற்பனை>கற்பினை வேதனை>வேதினை

பராமரிப்பு>பிராமரிப்பு

ஐகார அசைக்கு முன்னும் பகர, ரகர மெய்களுக்கு இடையும் அகரம் இகரமாக மாறியுள்ளது.

2.5.2. அ>ஒ

விசுவாசியுங்கள் > விசுவாசியுங்கொ (ள்) ளகர ஈற்றுக்கு முன்னால் அ>ஒ வாக மாறும். இந்த மாற்றம் இன்றும் பிராமணர் தமிழில் காணப்படுகிறது.

2.5.3. எ>இ

எலுமிச்சை > இலுமிச்சை எலும்பு > இலும்பு

உயிர் உயிரான (Highvowel) உகரத்துக்கு முன்னால் எகரமாகிய நடுஉயிர் இகரமாகிய உயர் (High) உயிராக மாறிவிட்டது.

2.5.4. இ>எ

சிலை>செலை விறகு>வெறகு

இரண்டாம் அசையில் அகரம் வரும்போது இந்த மாற்றம் ஏற்படும், இது பேச்சுமொழியில் நடைபெறும் ஒரு ஒழுங்கான மாற்றங்களில் ஒன்று,

2.5.5 இ>உ

தமிழ்>தமுழ் பீழை>பூழை மிறு>மூறு

இதழ் மெய்க்குக்குப்பின் இகரம் உகரமாகும். இது இதழ் அண்ணமயமாதல் என்று கூறலாம்,

2.5.6. உ>இ

புழு>பிழு புறா>பிறா சுமக்கு>சிமக்கு

பகர மெய்க்கும் நுனிநா நுனி அண்ண மெய்க்கும் நடுவில் வரும் உகரம் இகரமாக மாறும். சகர மெய்க்குப்பின்னர் வரும் போது ஒரு சொல்லில் மாறியுள்ளது.

2.5.7. ஈ>இ

தண்ணீர் > தண்ணி

ஈற்றில் வரும் ஈற்றுமெய் கெட்டபிறகு நெடில் குறிலாக மாறும். தண்ணீர்>* தண்ணீ>தண்ணி

2.5.8. எ > அ

வெண்ணெய்>வெண்ணை எண்ணெய்>எண்ணை

யகரத்துக்கு முன்னால் ஈற்றசையில் வரும் எகரம் அகரமாக மாறி அய் என்று ஆனது ஐ என்று எழுதப்படுகிறது.

வெண்ணெய்>* வெண்ணய்>வெண்ணை.

2.5.9. ஐ>அ

நினைவு>நினவு ஐம்பது>அம்பது

இதழ் ஒலிக்கு முன்னால் வரும் ஐ காரம் அகரமாகும். ம்ப்>ன்ப் என்பது வேற்றினமாதல் மாற்றமாகும். ஐம்பது> அம்பது>அன்பது.

2.5.10. ஐ>இ

சொல்லுக்கு இறுதியாக மூன்று அசைக்கு ஏற்பட்ட சொல்லில் இந்த மாற்றம் வரும்.

தலையணை>தலையணி

2.5.11. ஒ>உ

உகரம் இரண்டாவது அசையாக இருக்கும்போது ஒகரம் உகரமாகும்,

கொடு>குடு.

2.5.12

த்த்→ச்ச்

ந்த் → ஞ்ச

இந்த இரண்டுமாற்றமே இகர உயிருக்கு முன்னால் ஏற்படும். இவைகளுக்கு இடை அண்ணமாதல் என்று பெயர்.

குறித்து>குறிச்சு அழிந்து>அழிஞ்சு
படிப்பித்து>படிப்புச்சு தெரிந்து>தெரிஞ்சு
விசுவாதித்து>விசுவாசிச்சு திரிந்தேன்>திரிஞ்சேன்

2.5.13. ட்>ஷ்

மோட்சம்>மோஷ்சம் பட்சம்>பஷ்சம்
நட்சத்திரம்>நஷ்சத்திரம்

சகரத்துக்கு முன்னால் வரும் டகரமே ஷ கரமாகும். இது உரசொலியாக்கம் (fricativization) ஆகும்.

2.5.14. ட்>ழ்

கேட்கிறது>கேழ்கிறது

இது ஷகர ழகர மாற்றமாகவோ (கேட்கிறது* கேஷ்கிறது கேழ்கிறது) அல்லது ளகர ழகர மாற்றமாகவோ (கேட்கிறது>* கேள்க்கிறது>கேழ்கிறது) கருதலாம்.

2.5.15. ற்ற்>த்த்

காற்று>காத்து

இது பேச்சுமொழியில் நடக்கும் ஒரு ஒழுங்கான மாற்றம் ஆகும்.

2.5.16. ற்>ர்

பாற்க>பார்க்க பாற்கிறது>பார்க்கிறது
தீற்கிறது>தீர்க்கிறது

ர்>ற்

கிருபை>கிறுபை தீர்க்கத்தரிசி>தீற்கதரிசி
இஸ்த்திரி>இஷ்திறி அர்த்தம்>அற்தம்

ற்>ரி என்ற மாற்றத்தின் பிரதிபலிப்பாக இந்த இரண்டு சொல்லெழுத்து மாற்றத்தையும் (ற்>ர், ர்>ற்) கொள்ளலாம்.

2.5.17. ர θ

உடனிலை மெய் மயக்கமான வல்லெழுத்துக்கு வரும்போது ரகரம் கெடும்.

பார்த்து>பாத்து கர்த்தன்>கத்தன் தர்க்கம்>தக்கம்

இதுவும் பேச்சுமொழியில் ஒரு ஒழுங்கான மாற்றம் ஆகும்.

2.5.18. ன் ற் (ண்) ண்

நெட்டெழுத்துக்குப் பின்னால் வரும்போது ஒற்றை ணகரமாகவும் குற்றெழுத்துக்குப் பின்னால் வரும்போது இரட்டை ணகரமாகவும் மாறும். இதுவும் பேச்சு மொழியில் நடைபெற்ற ஒரு ஒழுங்கான மாற்றம் ஆகும்.

ஒன்று>ஒண்ணு மூன்று>மூணு கன்று>கண்ணு

2.5.19. ள > θ

ஒரு அசைக்கு மேற்பட்ட சொற்களில் வரும் ஈற்று ளகரம் கெடும்

விசுவாசியுங்கள் > விசுவாசியுங்கோ.

2.5.20. ழ் > ஷ்

மகிழ்ச்சி > மகிஷ்சி புகழ்ச்சி > புகஷ்சி

இரட்டை சகரமெய்க்கு முன்னால் வரும் ழகரமே ஷ கரமாக மாறும். இங்கு < ச் > என்று எழுதினாலும் இடைநா இடை அண்ண அடைப்பு உரசொலியாகவே உச்சரிக்கப்படும்.

2.5.21. ஸ் > ஷ்

இஸ்திரி > இஷ்த்திரி

இஸ்தோத்திரம் > இஷ்த்தோத்திரம்

இது ஒரு கிளைமொழி மாற்றமாக இருக்கலாம்.

2.5.22. ய் > θ.

சொல்லுக்கு முதலில் வரும் யகர மெய் கெடும்.

யுகம் > உகம் யார் > ஆர்

2.5.23. ய் > ச்

வியாதி > விசாதி

இரண்டு உயிர்களுக்கு இடையே வரும் யகரம் சகரமாகும். இது ஒருமிகை திருத்தம் ஆகும். இது கல்லாதவர்கள் பேச்சு மொழியில் காணப்படுகிறது.

2.5.24. தனிச்சொற்களில்

θ > ம சீமை — சீர்மை

கோதுமை — கோதும்பை

மாமிசை — மாங்கிஷம்.

θ > ய பாக்கியம் — பாய்க்கியம்

θ > இ அய்வரியம் — அயிசூரியம்.

ய > க தலையணை — தலைகாணி

ச > க கிரிசை — கிரிகை.

2.6. சொல்வகைப்பாடு.

முன்னரே குறிப்பிட்டபடி சீகன்பால்கு பெயர், பெயரடை, பதிலீட்டுப்பெயர், வினை, ஒரு நிலைச் சொற்கள் (Particles) என்று சொற்களை ஐந்துவகையாகப் பிரித்துள்ளார். பெயர், வினை ஆகிய இரண்டு பற்றியும் கருத்துவேறுபாடு இல்லாததால் மீதியுள்ள மூன்று சொல் வகைகளைப் பற்றிப் பார்ப்போம்.

மரபுத் தமிழ் இலக்கணங்களில் பதிலீட்டுப் பெயர் பெயர் களோடு சேர்த்து தனி உட்பிரிவாகக் கூடக் கருதாமல் விளக்கப் பட்டிருக்கிறது (சண்முகம், 1984; 157 சு.கு. 13); பெஸ்கி பெயர்ச் சொற்களில் தனி உட்பிரிவாக விளக்கியுள்ளார். இரண்டும் வேற்றுமை உருபுகள் ஏற்பதில் பெயர் என்று பெரும் பிரிவுக்கு உரியவையானாலும் வேற்றுமை ஏற்கும் வடிவம் மாறுபட்டு வருவதாலும், சிலதொடரியல் பண்புகளில் வித்தியாசப்படுவ தாலும் பெயர்ச் சொற்களுக்குள் ஒருதனி உட்பிரிவாகப் பதிலீட்டுப் பெயர்களாகக் கருத வேண்டும் என்ற கருத்து இன்று ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஆனால் சீகன்பால்கு லத்தீன் மொழிச் செல்வாக்காலேயே தனிஇயலாக விளக்கியிருக்கவேண்டும்.

பெயரடை என்பதில் பெயர்ச் சொற்கள் பெயரடையாக வரும் வடிவங்களும் பெயரெச்சவடிவங்களும் சில பண்படிச் சொற்கள் பெயரடையாக வருவதும் விளக்கப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | மகரம் கெடுதல் | — | பாவம் — பெயர் |
| | | | பாவ — பெயரடை |
| 2. | உள்ள என்பதைச் சேர்த்தல் | — | மரியாதை |
| | | — | மரியாதையுள்ள |
| 3, | ஆன என்பதைச் சேர்த்தல் | — | ஞாயம் |
| | | — | ஞாயமான |
| 4. | உடைத்தான ” | — | நன்மை உடைத்தான |

5. இல்லாத " — புத்தியில்லாத
6. ஆகாத " — பாத்திரமாகாத
7. பெயரெச்சம். இதையும் வினைமுற்று வடிவத்தோடு கொடுத்துள்ளதால் வினைமுற்று வடிவத்திலிருந்து உண்டான வடிவம்.

| | |
|---|---|
| சொல்லுகிறான் | சொல்லுகிற |
| சொன்னான் | சொன்ன |
| செல்லார் | செல்லாத |

8. பெயரடை அடிச்சொற்கள்
குளிர் — குளிர் தண்ணீர் பச்சை — பச்சைக்காய்
சிகப்பு — சிகப்பு நூல்

பெயரடையையும் பெஸ்கி (1728), பெயரின் உள்பிரிவாகக் கொண்டு உரிச்சொல், என்ற இலக்கணக் கலைச்சொல்லையும் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ் இலக்கண உலகில் நல்ல, பெரிய போன்ற பெயரடைகள் குறிப்பு பெயரெச்சமாகக் கருதப்படுவதாலும் உரிச்சொற்களில் உறு, தவ, நனி போன்றவை அடைகளாகக் கருதப்படுவதாலும் பெயரடையைப் பொதுவாகத் தனிவகையாகக் கருதப்படும் மரபு இல்லை. இப்பொழுது இடைச்சொற்களில் சில அடையாக வரும் என்ற கருத்தும் வலுப்பெற்று வருகிறது (சண்முகம், 1992), எனவே குறிப்புப்பெயரெச்சம் உரி, இடை ஆகிய மூன்று மரபு இலக்கண வகைகளுக்குப் பதிலாக அடை என்ற சொல்வகைப்பாடு அமைப்பது சிறப்பு என்ற கருத்தும் உருப்பெற்று வருகிறது. அந்த முறையில் சீகன்பால்கு கொடுத்த பெயரடைச் சான்றுகளில் சில தனிச்சொல்வகையாகக் கருதுவதற்குரியவையாக உள்ளன என்பது சுட்டிக் காட்டத் தகுந்தது.

அற்பம், மோசம், ரசம் (சுவையான) போன்றன பெயராகக் கருதமுடியாதவை. ஏன் என்றால் அவை வேற்றுமை உருபுகளை ஏற்காது. அதே சமயத்தில் அவைகளின் பகிர்வு மாறுபாடு காணப்படுகிறது.

அற்ப சந்தோஷம்
ஆயுசு
விஷயம்

அற்பன்
அற்பமான விஷயம்

மோசடி (மோச(ம்) அடி)
மோசம்போ, மோசம்செய்
மோசமான ஆள் | அது மோசம்
மோசமாக இருக்கிறது | அவன் ரொம்ப மோசம்
ரசமான விஷயம்
ரசமாகப் பேசு
ரசனை

அற்பன் என்ற இன்னொரு சொல் இருப்பதால் அற்ப-என்பது பெயரடையாகக் கொண்டு - ம் என்பது பண்புப் பெயராகக் கொள்ளலாம். அப்படியே மோச-, ரச- என்பதைக் கட்டுண்ட பெயரடையாகக் கருதி -ம் என்பதைப் பண்புப் பெயராகக் கொள்ளலாம். அதுமோசம், அவன் ரொம்ப மோசம் என்ற தொடர்களில் புறநிலையில் பயனிலையாகப் பயன்பட்டாலும் பண்பாகு பெயராகக்கொண்டு (மோசமான செய்தி, ரொம்ப மோசமான ஆள்) என்றே விளக்கவேண்டும்.

இன்றும் கடினம் (கடினவேலை, கடினமானவேலை, கடினமாக இருக்கிறது, அது கடினம்) சிரமம் (சிரமதசை, சிரம சாத்தியம், சிரமமான காரியம், சிரமமாக இருக்கும், அது சிரமம்) போன்றவை இந்த வகையில் சேர்ந்தவையே. இவை பண்புப் பெயர்கள் என்று கூறினாலும் வேற்றுமை ஏற்காமலே பெயர்களாய் - ஆன/ஆக என்று பெயரடையாகவும் வினையடையாகவும் செயல்படும் என்று கொள்ளவேண்டும்.

சிகப்பு, பச்சை போன்ற சொற்களும் பண்புப்பெயர்களாகக் கொள்ளலாம். வல்லமை, வெறுமை நன்மை போன்று சீகன் பால்கு கொடுத்த சொற்களும் இந்த வகையில் அடங்குபவையே. சீகன்பால்கு பெயரடை என்ற பட்டியலில் கொடுத்த சொற்களில் பாவம், ஞானம் போன்ற பெயர்ச் சொற்களும் அடங்கியுள்ளன. சீகன்பால்குக்கு மொழி அமைப்பு நுட்பத்தை விளக்குவது நோக்கம் இல்லை. ஆதலால் அவர் மேலே குறிப்பிட்டபடிப் பெயரடையாகப் பயன்படக்கூடிய எல்லாச் சொற்களையும் கொடுத்திருக்கலாம்.

ஒருநிலைச் சொற்களில் வேற்றுமை உருபு சில வினை விகுதிகள் இணைப்பான்கள் (அங்கே, முன், முன்னாக, ஆனால்) இடைச்சொற்கள் (உம், ஓ, போன்றவை) வியப்பிடைச் சொற்கள் (அய்யோ) ஆகியவை அடங்கியுள்ளன. இது ஒரு கதம்பமான சொல்தொகையாக உள்ளது. இங்குத் தெளிவான இலக்கணக் கோட்பாடு காணமுடியவில்லை. ஆனாலும் அவருடைய

இலக்கணம் தமிழின் சொல்லியல் அமைப்பை ஓரளவு சரியாக விளக்குவதாகக் கொள்ளலாம்.

## 2.7. சொல்வகைகள்

சொல்வகைப்பாடு அடிச்சொற்களை ஒட்டியது, ஒட்டுகளை இலக்கணக் கூறுகள் (Grammatical Category) திணை-பால்-இடம், வேற்றுமை, காலம், இலக்கண வகைகள் (தொழிற் பெயர், வினை யாலணையும் பெயர்) என்று பாகுபடுத்தலாம். ஒருசொல் வகைப்பாட்டைச் சேர்ந்த இலக்கணக்கூறு அடிப்படையில் பாகுபாடு செய்வது ஒருவகை. சான்று : உயர்திணைப்பெயர், ஆண்பாற்பெயர். அப்படியில்லாமல் ஒரு இலக்கணக் கூறின் மாற்றுருபுகள் அடிப்படையில் ஒரு சொல்வகைப்பாட்டைச் சேர்ந்த சொற்களை உள்பிரிவு (Subclasification) செய்தது ஒருவகை. அப்படி பல இலக்கண வகைகளின் மாற்றுருபுகளின் அடிப்படையில் பாகுபடுத்துவது அமைப்பியல் பாகுபாடு (Structural Class) ஆகும். வேற்றுமை உருபுகளின் மாற்று வடிவங்களின் அடிப்படையில் பெயர்ச் சொற்களையும் கால விகுதிகளின் மாற்றுருபுகளின் அடிப்படையில் வினைச்சொற் களையும் பாகுபடுத்துவது அமைப்பியல் பாகுபாடே ஆகும்.

தமிழ் இலக்கணங்களில் பெயர்ச்சொற்கள் வேற்றுமை உருபுகள் ஏற்கும்போது வரும் சாரியைகளின் அடிப்படையில் பாகுபடுத்த முடியும். ஆனால் தமிழ் இலக்கணங்கள் அவைகளை அகச்சந்தி--உருப்புணர்ச்சி மாற்றமாக விளக்கியதால் பெயர்ச் சொற்களை அமைப்பியல் பாகுபாடு செய்யவில்லை. வினை களைப் பொறுத்தவரையில் தொல்காப்பியர் கால விகுதிகளைத் தனியே விளக்காததால் வினைச்சொல் அமைப்பியல் பாகுபாடு பற்றி அவர் கவலைப்படவில்லை. நன்னூலார் கால விகுதி களையும் அவைகளுக்கு உரிய மாற்றுருபுகளையும் விளக்கினாலும் அவைகளின் அடிப்படையில் வினைச்சொற்களின் பாகுபாடுகளை விளக்கும் முயற்சியில் இறங்கவில்லை; ஏன் என்றால் கால மாற்றுருபுகளின் பகிர்வை அவர் விளக்கவில்லை. எனவே தமிழ் மரபு இலக்கணங்களின் அமைப்பியல் பாகுபாடு மேற்கொள்ளப் படவில்லை,

பால்டே இலக்கணம் மிகச்சுருக்கமான இலக்கணம். எனவே முழுமையான இலக்கணம் என்ற முறையில் சீகன்பால்கு தமிழ் இலக்கணமே அமைந்துள்ளது. அவர் இலக்கண வகைகளில்

மாற்றுருபுகளை விளக்குவதற்காக அமைப்பியல் பாகுபாடுகளைச் செய்துள்ளார். பெயர்ச்சொற்களைப் பொறுத்தவரையில் வேற்றுமை உருபுகளின் அடிப்படையில் உண்மையில் வேற்றுமை உருபுகள் நூலியல் கட்டுப்பாட்டுடைய மாற்றுருபுகள் இல்லாத தால் சாரியைகளின் மாற்று வடிவங்கள் அடிப்படையில் நான்கு வகைகளைக் குறிப்பிட்டுள்ளார். இது பின்னால் விளக்கப் படுகிறது.

வினைச் சொற்களைப் பொறுத்தவரையில் ஒவ்வொரு காலத்துக்கும் சீகன்பால்கு ஒவ்வொரு சான்று கொடுத்துவிட்டு, மாற்று உருபுகளை விளக்குவதற்கு நிகழ்கால வினை முற்றுகளை அடிப்படையாகக் கொண்டு இறந்தகால மாற்றுருபுகளை விளக்க எட்டு வகையாகவும் செயவென் எச்ச விகுதிகளின் மாற்றுருபுகளை விளக்க ஆறுவகையாகவும் எதிர்கால வினைமுற்றுகளை விளக்க இரண்டுவகையாகவும் பாகுபடுத்தியுள்ளார். இதுவே வினைக்குரிய அமைப்பியல் பாகுபாடு, இன்று மொழியியல் வளர்ச்சியால் இறந்தகால விகுதிகளை மூன்றாகவும் ('த்' வகுப்பு, 'ந்த்' வகுப்பு, 'இன்' வகுப்பு) வினைகளை இரண்டாகவும் [வல்வினை (இரு, இருக்க), மெல்வினை (உழு, உழ)] பிரிக்கிறார்கள். இந்தப்பாகு பாடு இலக்கண வருணனையை எளிமைப் படுத்துகிறது. எனவே இலக்கண அமைப்பியல் பாகுபாட்டைத் தமிழ் இலக்கண ஆராய்ச்சியில் அறிமுகப்படுத்திய பெருமை சீகன்பால்குக்கு உரியது.

## 2·8. இலக்கணக் கூறுகள்

பெயர்ச்சொற்களில் எண் (ஒருமை, சிறப்பு ஒருமை, பன்மை) வேற்றுமை என்ற இரண்டு இலக்கணக்கூறுகளும் வினைச் சொற்களில் காலம், இடம், திணை, பால் என்ற இலக்கணக் கூறுகளுமே உள்ளன. அவைகளைச் சீகன்பால்கு சரியாகவே அங்கீகரித்துள்ளார். பால்பாகுபாட்டைத் தொடரியலிலேயே குறிப்பிட்டுள்ளார்.

புலிங்கம் (ஆண்பால்), இஷத்திரிலிங்கம் (பெண்பால்), நபுஞ்சலிங்கம் (அஃறிணைபால் ஒன்றன்பால்) என மூன்று பால் களைக் குறிப்பிட்டு பால்—இயைபு உடைய தொடர்களைச் சான்று காட்டியுள்ளார். இவைகளிலிருந்து அவர்கால வழக்கில் இருந்த பால் இயைபு உண்மைகளை நாம் தெரிந்துகொள்ள முடிகிறது.

1. சறுவேசுரன் ... இருக்கிறார்.
2. தம்பி ... அழைக்கிறான்
3. மனசு ... சொல்லிச்சு
4. சம்மனசான் ... சொன்னார்
5. பிள்ளை ... சொல்லிச்சு
6. தேவரீர் ... சொல்கிறது

போன்று பல சான்றுகளைக் கொடுத்துள்ளார். இவைகளிலிருந்து அறியப்படும் உண்மைகள்: 1. ஆண்பால் 2. பெண்பால், 7. ஒன்றன்பால் (8. 9) இயைபு பெயர்ச்சொற்களிலும் வினைச் சொற்களிலும் ஒத்துக் காணப்படுகிறது. உயர்திணை ஆண்பால் பெயர்களில் இரண்டுவிதமாகச் சிறப்பு ஒருமை காணப்படுகிறது. அ) பலர்பால் வினை முற்று கொண்டு முடிவது, (1) ஆ) ஒன்றன்பால் வினைமுற்றைக் கொண்டு முடிவது (6); முன்னது தமிழ் இலக்கணங்களில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது பின்னது பேச்சுவழக்கில் உள்ளது. முன்னதைவிட பின்னது அதிக மரியாதை உடையதாகக் கருதப்படுகிறது. அதே சமயத்தில் ‹பிள்ளை என்ற உயர்திணைப் பெயர் (5) ஒன்றன்பால் வினை முற்று கொண்டு முடிவது உலகவழக்கில் காணப்படுவது; அது உரிமை பற்றியது. பலவின்பால் பெயர் (10) ஒன்றன்பால் வினை முற்றுகொண்டு முடிந்திருப்பது சீகன்பால்கு இலக்கணத்தில் காணப்படும் ஒரு பொதுப் பண்பு. அது அவர்காலப் பேச்சு வழக்கின் பிரதிபலிப்பு. அந்தமரபு இன்றும் பேச்சிலும் எழுத்திலும் தொடர்ந்து வருகிறது. எனவே 'பால்பகா அஃறிணைப் பெயர்' என்பது போலப் பால்பகா அஃறிணைவினை' என்று புதிய இலக்கணம் ஏற்றுக்கொள்ளும் நிலை வந்துவிட்டது (சண்முகம், 1993).

## 2.9. பெயர்ச் சொற்கள்

பெயர்ச் சொற்களில் வரும் எண், பால் பற்றி மேலே விளக்கப் பட்டது. சொல்லியல் நிலையில் பன்மை விகுதிகள், சாரியை' வேற்றுமை ஆகியவைகளே வருணிக்கப்பட்டுள்ளன.

### 2.9.1. பன்மை

சில விகுதிகள் பலர்பாலுக்கும் பலவின் பாலுக்கும் ஒன்றாக இருந்தாலும் சில புதிய மாற்றுருபு வருதல், (மனுஷன் → மனுஷர்) மார்விகுதி ஏற்றல் (தம்பி—தம்பிமார்) ஆகிய இரண்டு சிறப்புத் தன்மையால் பலர்பால் வேறுபடுகிறது. கள் விகுதி ஏற்பதில் இரண்டும் ஒற்றுமைப்படுகின்றன.

பன்மை விகுதிகளை விளக்கச் சீகன்பால்கு பெயர்களை ஆறு வகையாகப் பிரித்துப் பலர்பால், பலவின்பால் என்று வேறு படுத்தாமலேயே விளக்கியுள்ளார்.

1. ஆகார ஈற்றுப் பெயர்கள் —க்கள் விகுதி ஏற்கும்.

பிதா — பிதாக்கள்
ராசா — ராசாக்கள் } பலர்பால்

பிறா — பிறாக்கள் — பலவின்பால்

2) இகர ஈற்றுப் பெயர் — கள் விகுதி ஏற்கும்

அடி — அடிகள் (சிறப்பு ஒருமை)
பாவி — பாவிகள் — பலர்பால்

வழி — வழிகள்
சோதி — சோதிகள் } பலவின்பால்

3) உகர ஈற்றுப் பெயர்கள் — கள் விகுதி ஏற்கும்

பிழு — பிழுகள் ஆடு — ஆடுகள்
மாடு — மாடுகள் வீடு — வீடுகள் } பலவின் பால்

ஆறு — ஆறுகள்

சில பெயர்கள் — க்கள் ஏற்கும்

குரு — குருக்கள்
சத்துரு — சத்துருக்கள் } பலர்பால்

கல்லு — கல்லுக்கள் பலவின்பால்

இப்பொழுது பிழு — பிழுக்கள் கல்லு — கல்லுகள் என்று தான் வழங்குகின்றன. எனவே இவை தரவுத்தவறாகக் கருத வேண்டும். வெறும் உகரம் என்று பொதுமைப்படுத்தியதாலேயே-கள்/-க்கள் என்ற இரண்டு விகுதி ஏற்பதற்குரிய சரியான கட்டுப்பாடு இல்லாமல் போய்விட்டது. முதல் பிரிவில் பிழு தவிர ஏனைய சொற்கள் நெடில் தொடர் குற்றியலுகரச் சொற்கள், பிழுவை இரண்டாவது பிரிவில் சேர்த்துக் கொண்டு நெடில் தொடர் குற்றியலுகரம் - கள் விகுதியும் குறிலிணையில் முடியும் முற்றுகரச் சொற்கள் - க்கள் விகுதியும் ஏற்கும் என்று பொதுமைப் படுத்தினால் இரண்டு விகுதிகள் வருவதையும் ஒரு ஒழுங்கு முறைக்குள் கொண்டுவர முடியும்.

4) எல்லா ஓரசைச் சொற்களும் - ககரம் இரட்டித்து வந்து பன்மையாகும்.

ஈ — ஈக்கள் பூ — பூக்கள்

மேலே - க்கள் என்பதை மாற்றுருபாகக் கூறி இங்குப் புணர்ச்சி மாற்றமாக (ககரம் இரட்டித்து வரும்) என்று விளக்கியது கவனிக்கத்தகுந்தது. அசை அமைப்பும் மாற்றுருபை விளக்கப் பயன்படுகிறது என்பதைச் சீகன்பால்கு அறிந்திருந்தாலும் கோட்பாட்டுநிலையில் உணராததால் வேறுசில இடங்களில் அதைப் பயன்படுத்தவில்லை.

5. மெய் ஈற்றுப் பெயர்கள் - கள் விகுதி ஏற்கும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செயம் | — | செயங்கள் | பாவம் | — | பாவங்கள் |
| தேன் | — | தேன்கள் | கால் | — | கால்கள் |
| நூல் | — | நூல்கள் | கண் | — | கண்கள் |

அ. ளகர, லகரத்தில் முடியும் பெயர்கள் ககரம் இரட்டித்து வந்து பன்மைகள் ஆகும்.

ஆள் — ஆள்க்கள் விரல் — விரல்க்கள்

ஆ. அகரத்தைத் தொடர்ந்து னகர ஈற்றில் முடியும் ஆண் பால் பெயர்கள் ரகரத்தை ஏற்கும்.

மனுஷன் — மனுஷர் புருஷன் — புருஷர்
கூலிக்காரன் — கூலிக்காரர்

இவை—கள் விகுதியையும் ஏற்று வரும்.

மனுஷர்கள்; கூலிக்காரர்கள்
அவன் — அவர்கள்

மெய் ஈறு என்று ஒலி நிலையில் பொதுமைப்படுத்தினாலும் னகர ஈற்று ஆண்பால் பெயர்கள் என்று தனியே பிரித்துப் பன்மை விகுதிகளை ஒலி நிலையில் மட்டும் விளக்கமுடியாது என்பதைச் சீகன்பால்கு உணர்ந்திருந்தார் என்பதைக் காட்டுகிறது.

ஆள்—ஆள்க்கள் என வருவதைப் பெஸ்கியும் (1728; 48.41) குறிப்பிட்டுள்ளார். இன்று பேச்சுத் தமிழிலும் எழுத்து மொழியிலும் (ஆட்கள்) காணப்படுகிறது. விரல்—விரல்ககள் என்பது பரவலாகக் காணப்படவில்லை. கிளைமொழி வழக்காகப் பயிலுகின்றதா என்று தெரியவில்லை.

6. கை, தை, மை, ளை, லை, றை, னா, சை ஈற்றுப்பெயர்கள் விகுதி ஏற்கும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கிறிகை | — | கிறிகைகள் | கதை | — | கதைகள் |
| சீர்மை | — | சீர்மைகள் | பிள்ளை | — | பிள்ளைகள் |

தலை — தலைகள் சிறை — சிறைகள்
வினா — வினாகள் இச்சை — இச்சைகள்

சில சொற்கள்—மார் விகுதி ஏற்கும்.

தம்பி — தம்பிமார் தகப்பன் — தகப்பன்மார்

பன்மை எண்ணுப் பெயர்களைச் சேர்த்தும் பன்மை உண்டாக்கலாம்.

அனேகம் பேர் மூனு விரல்
அஞ்சு விசை

தரவுகளைப் பொறுத்த வரையில் வினா - என்ற பெயர் வினாக்கள் என்றே பன்மை வடிவம் இன்று பெறுகிறது. பொதுவாகக் குறிலும் நெடிலும் சேர்ந்த சொற்கள் (CVCV) எப்போதும் க்கள் விகுதி பெறும் (புறாக்கள், கிடாக்கள்). எனவே வினாகள் என்பது கிளைமொழி வழக்கைக் குறிக்கிறதா என்று தெரியவில்லை. அல்லது தரவுத் தவறாகக் கருதவேண்டும். ஏனைய சொற்கள் ஐகார ஈற்றுச் சொல் என்று பொதுமைப்படுத்தியிருக்கலாம். அப்படியே உயர்திணைப் பெயர் - மார் என்று பொதுமைப்படுத்தித் தனிப் பிரிவாகக் கூறியிருக்கலாம்.

பன்மை எண்ணுப்பெயர் சேர்த்து பன்மை உண்டாக்குவது தொடரியல் சேர்ந்தது. பன்மை என்ற இலக்கணக்கூறு சொல்லியல் நிலையைச் சார்ந்தது.

தமிழ்மொழி அமைப்பில் சில நுணுக்கங்களை உணர்ந்திருந்தாலும் கோட்பாட்டு நிலையில் மொழியின் கட்டமைப்பை விளக்கும் முறை அவர் காலத்தில் வளராததால் நாம் எதிர்பார்க்கிற முறையில் இலக்கண வருணனை அமையவில்லை. எனவே அது காலத்தின் குறையே ஆகும்.

## 2,9.2. வேற்றுமை

வேற்றுமையைப் பொறுத்தவரையில் ஐந்து வேற்றுமைகளைக் குறிப்பிட்டுள்ளார். அவர் கருத்துப்படி ஐந்தாம் வேற்றுமையில் இடம், கருவி, உடனிகழ்ச்சி என்று மூன்று பிரிவுகளும் அடங்கும். ஒன்று, ஆறு, நான்கு, இரண்டு, எட்டு ஐந்து என்ற முறையில் வேற்றுமையை வரிசைப்படுத்தியுள்ளார். பால்டே (1672) இலக்கணத்தில் இதே வரிசை காணப்படுகிறது. ஆனால் அவர் ஐந்தாம் வேற்றுமையில் 'ஒப்பு' என்பதைச் சேர்த்து நான்கு வகையாகக் குறிப்பிட அதைச் சீகன்பால்கு நீக்கிவிட்டார்,

சீகன்பால்கு கொடுத்த வேற்றுமை உருபுகள்.

ஆறு உடைய
நான்கு உக்கு
இரண்டு ஐ
எட்டு ஏ
ஐந்து
இடம் : இல் ~ இடத்திலேயே ~ இடத்தில் ~ 2க்குள்ள.
கருவி : ஆலே ~ ஆல்
உடனிகழ்ச்சி : ஒடே ~ உடனே ~ ஐப்பாத்து ~ ஐக்குறிச்சு ~ உக்கால ~ ஐக்கொண்டு.

இடவேற்றுமையில் இடத்திலே ~ இடத்தில் என்பவை உயர் திணைப் பெயர்களோடும் இலே ~ இல் என்பவை அஃறிணைப் பெயர்களோடும் சேர்க்கப்பட்டுள்ளன. இங்கு—ஏகார இடைச் சொல் சேர்த்து வருவது பேச்சுமொழியின் செல்வாக்கைக் காட்டும். உடனிகழ்ச்சி உருபுகளாக -ஐக்குறித்து—ஐக்கொண்டு —உக்காக ஆகிய மூன்றையும் சேர்த்தது பொருந்தாது என்று பெஸ்கி (40.35) சுட்டிக்காட்டியுள்ளார். அது சரியானது.

வேற்றுமை உருபுகளில் மாற்றுவடிவம் இல்லாததால் வேற்றுமை உருபுகளின் மாற்று வடிவங்களுக்குப் பதிலாகச் சாரியையின் மாற்று வடிவங்கள் அடிப்படையிலே பெயர்கள் நான்கு வகையாகப் பகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பகுப்புக்கும் வேற்றுமை ஏற்கும் வடிவங்களும் (ஒருமை, பன்மை வடிவங் கள்) அந்தப்பாகுபாட்டில் அடங்கும் சொற்களின் பட்டியலும் கொடுக்கப்பட்டுள்ளன.

1. சான்றுச் சொல்: மனுஷன்; ஒருமை என்ற முறையில் அதன் வேற்றுமை வடிவங்கள்; மனுஷர் என்பது அதன் பன்மை. வடிவம் என்ற முறையில் அதனுடைய வேற்றுமை வடிவங்கள்; இப்படி ஒவ்வொரு பகுப்புக்கும் ஒருமை, பன்மை வடிவங்களின் வேற்றுமை ஏற்ற வடிவங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்தப் பாகுபாட்டில் அடங்கும் சொற்களில் னகர ஈற்று ஆண் பால் பெயர்கள் பலவும் (கத்தன், குமாரன், மரித்தவன், முதலியன) னகர ஈற்று அஃறிணைப் பெயர்களும் (சூரியன் பலன்) ளகர ஈற்றுப் பெண்பால் பெயர்களும் (ஆத்தாள், பாவம் செய்கிறவள்) ரகர ஈற்று உயர்திணைப் பெயர்களும் (வாத்தியார்) ரகர ஈற்று அஃறிணைப் பெயர்களும் (மயிர்), லகர ஈற்று அஃறிணைப் பெயர் களும் (பகல், வாசல்) உள்ளன. இங்கு இடவேற்றுமை உருபுகளாக-

இலே~ இடத்திலே என்ற இரண்டு உருபுகளைக் கொடுத்துவிட்டு அஃறிணைப் பெயர்களையும் இங்குச் சேர்த்திருப்பது பொருந்தாது.

2. சான்றுச் சொல், பாவம்; இங்குக் கொடுக்கப்பட்டுள்ள எல்லாச் சொற்களும் மகர ஈற்று அஃறிணைச் சொற்களே.

3. சான்றுச்சொல் : கட்டு, இங்குக் கொடுக்கப்பட்ட சொற்களில்—லுகர ஈற்றுச்சொற்கள் (கல்லு, பல்லு) இரண்டு தவிர ஏனையவை வன்றொடர் குற்றியலுகர ஈற்றுச்சொற்கள்.

4. சான்றுச்சொல்: கிறிகை. இங்குக் கொடுக்கப்பட்ட சொற்களில்—ஐகார ஈற்று அஃறிணைச் சொற்கள் ('ஆண் பிள்ளை' சேர்த்துள்ளது) இகர ஈற்று அஃறிணைப் பெயர்கள் ('சுவாமி' என்ற ஒரு ஆண்பால் பெயரும்) அடங்கியுள்ளன.

மேலே குறிப்பிட்டபடி வேற்றுமையின் உருபுகளின் மாற்று வடிவங்கள் இல்லாததால் சாரியையின் மாற்று வடிவங்களே இந்தப் பாகுபாட்டுக்குக் காரணமாகக் கொள்ளலாம். இரண்டாவது வகை அத்துச் சாரியை கட்டாயமாக்கப் பெற்றுள்ளது. மூன்றாவது வகையும் நான்காவது வகையும்-இன் சாரியை மட்டும் ஆறாம் வேற்றுமை உருபோடு வந்துள்ளது, எனவே இரண்டும் ஒரே வகையாகச் சேர்க்கலாம். இரண்டாவது வகையில் மகர ஈற்றுப் பெயர்களை மட்டுமே கொண்டு- (அ)த்துச் சாரியை பெற்று வருவதால் அதையும் ஒலிக்கட்டுப்பாடு உடையதாகக் கருதலாம். அப்படியானால் அதைத்தனிவகையாகக் கருதத் தேவையில்லை. சுருங்கச்சொன்னால் சாரியைகளை ஒலிக்கட்டுப்பாட்டு நிலையில் வருணித்துவிடமுடியும்; எனவே பெயர்களை அமைப்பியல் பாகுபாடு செய்யவேண்டியதில்லை. இதை உணர்ந்த பெஸ்கி பெயர்ச் சொற்களைப் பாகுபடுத்தவில்லை என்பது அறியத் தகுந்தது.

சீகன்பால்கு குறிப்பிடும் சாரியைகளும் அவைகளின் பகிர்வும்:

(அ)த்து, இன் என்ற இரண்டு சாரியைகளே வந்துள்ளன. மகர ஈற்று ஒன்றன்பால் பெயர்- (அ)த்துச் சாரியையை விளிவேற்றுமை தவிர ஏனைய வேற்றுமைகள் பெற்றுள்ளன. ஒன்றன்பால் பெயர்கள் உடைமை, கருவி ஆகிய இரண்டு வேற்றுமைக்கு முன்னால் இன் சாரியை பெறும், (கட்டினுடைய, கட்டினால், கிறிகையினுடைய, கிறிகையினால்), மகர ஈற்று ஒன்றன்பால் பெயர்கள் இந்த இரண்டு வேற்றுமைக்கு முன்—அத்து, இன் என்ற இரண்டு

சாரியையும் பெற்று வரும். (பாவத்தினுடைய, பாவத்தினால்) பலவின்பால் பெயர்கள் கருவி வேற்றுமைக்கு முன்னால் இன் சாரியை பெறும் (பாவங்களினால், கட்டுகளினால், கிறிகை களினால்)

மகர ஈற்றுத் தொகுதிப் பதிலீட்டுப் பெயர்—அத்துச் சாரியை பெறும். எல்லாம்; எல்லாத்துக்கும்;

ஒன்றன் பால் சுட்டுப்பெயர்; வினாப்பெயர்கள் கருவி வேற்றுமை முன்னரே இன் சாரியை பெற்றுள்ளன (அதினால்), ஏனைய வேற்றுமைகளுக்கு முன் அது (அதை, அதுக்கு, அதில், அதொடெ), என்ற வடிவமும் இரண்டாம் வேற்றுமை, உடனி கழ்ச்சி வேற்றுமை ஆகிய இரண்டுவேற்றுமைகளுக்கு முன் அத்து - என்ற வடிவமும் (அத்தை, அத்தொடெ) பெற்றுள்ளன.

## 2.10. வினைச்சொற்கள்

கால வினை முற்றுகள், ஏவல் வினைகள், துணைவினைகள் வினையெச்சம், பெயரெச்சம், வினா உருபன்கள், செயப்பாட்டு வினைகள், குறை வினைகள், கால விகுதிஏற்கும் முறை (வினைத் திரிபு விளக்கம்) என்ற முறையில் வினையியல் அமைக்கப் பட்டுள்ளது.

### 2.10.1 இலக்கண விகுதிகள்

1. இடம்—திணை—பால் விகுதிகள்

| | |
|---|---|
| தன்மை ஒருமை | — ஏன் |
| தன்மை சிறப்பு ஒருமை | — ஒம் |
| தன்மை பன்மை | — ஒம் |
| முன்னிலை ஒருமை | — ஆய் |
| முன்னிலை சிறப்பு ஒருமை | — ஈர் |
| முன்னிலை பன்மை | — ஈர்கள் |
| படர்க்கை ஆண்பால் | — ஆன் |
| படர்க்கை பெண்பால் | — ஆள் |
| படர்க்கை சிறப்பு ஒருமை | — ஆர் |
| படர்க்கை சிறப்பு பலர் | — ஆர்கள் |

ஒன்றன் பால் } உது- (நிகழ்கால விகுதி - கள் இறந்தகால
பலவின் பால் } விகுதிகளுக்குப் பின் (விசுவாசிக்குது விசுவாசித்தது).

உ-ம் (எதிர்காலச் சூனிய விகுதிக்குப் பின் விசுவாசிக்கும்)

ஆது - (எதிர்மறை சூனிய விகுதிக்குப் பின்
(விசுவாசியாது)

அது - (நிகழ்கால - கிற் - விகுதிக்குப் பின்
(ஆகிறது)

2. கால விகுதிகள்

(அ) நிகழ்காலம்

- க்க்/க் அஃறிணை வினைமுற்றுக்கு முன்
(விசுவாசிக்குது, (ஓடுது)

- கிற் - குகரஈற்று வினைக்குப்பின் (வணங்கிறான்)

- ற் - போ - என்ற வினைக்குப் பின்
(போறது, போறான்)

- கிறு - எல்லாம் இடம் - திணைபால் விகுதிக்கு,

(ஆ) இறந்தகால விகுதிகள்

த்/த்த ஐகாரர, இகர, யகர ஈற்று மெய்யீற்று வினைக்குப் பின் உறழ்ச்சியாக

ந்த்~ஞ்ச் (ஞ்ச்)

ன் (ஆ, போ, சொல் என்ற வினைகளுக்குப்பின்

இன் ஏனைய இடங்களில்

(இ) எதிர்கால விகுதிகள்

- உம் அஃறிணைவினை—0க்கு முன் (ஓடும்)

- ப்/வ் ஏனைய இடங்களில் (ஓடுவான்)

(ஈ) எதிர்மறைகள்

நிகழ்காலம் எச்சம்+இல்லை—செய்யவில்லை

செய்கிறது+இல்லை—செய்கிறதில்லை

நிகழ்கால எல்லா வினைமுற்றுகள்+இல்லை

இறந்தகாலம் செய்தது+இல்லை

செய்த + இல்லை

இறந்தகால எல்லாவினைமுற்றுகள்+இல்லை

எதிர்காலம் பகுதி+ $\theta$ + இடம்—திணை—பால்.

செயவென் எச்சம் என்று நிகழ்கால வினைமுற்று இன்று இறந்தகாலத்துக்குத்தான் பயன்படுத்தப்படுகிறது. செய்கிறது + இல்லை என்பது வழக்கமாகச் செய்யும் செயலை மறுக்கவே இன்று கையாளப்படுகிறது. இறந்தகாலப் பெயரெச்சம்+இல்லை என்பது இன்று பேச்சு மொழியிலோ எழுத்துமொழியிலோ காணப்படவில்லை. எதிர்காலவினைமுற்று அஃறிணை வடிவம் தவிர பிற வடிவங்கள் இன்றைய பேச்சுமொழியில் இல்லை,

(உ) ஏவல் உடன்பாடு

பகுதி + $\theta$

பகுதி + உம் + (கொ (ள்) )

பகுதி + அ + (கடவார்கள்)

பகுதி + எதிர்கால விகுதி + { முன்னிலை ஒருமை முன்னிலை } + ஆக
பன்மை

பகுதி + எதிர்கால விகுதி + { தன்மை பன்மை }

தன்மை பன்மை வடிவம் (விசுவாசிப்போம்) எப்படி பன்மை ஏவலாகப் பயன்படுகிறது என்று தெரியவில்லை.

ஏவல் — எதிர் மறை

பகுதி + ஆத் + ஏ + (உம் + (கொள்) )

பகுதி + ஆமல்

செயவென் எச்சம் + வேண்டாம்

செயவென் எச்சம் + தேவையில்லை

இங்கு, பகுதி + ஆமல் என்பதை எதிர்மறை ஏவலாகக் கருத முடியாது. கடைசி இரண்டும் ஏவலோடு பேசுவோனின் கருத்தையும் காட்டுகிறது. அவைகளைத் தொடராகக் கருதுவதே சிறப்பாக இருக்கும். மொழியைக் கற்றுக் கொள்ளும் போது இப்படிப்பட்ட வடிவங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனால் அவைகளை இலக்கணமுறைமையில் இங்கு விளக்கத் தேவையில்லை,

(ஊ) வியங்கோள்

பகுதி + இடம் திணை பால் + ஓ (எதிர்மறையும் வினா
விகுதி வும் சேர்ந்தது)

செயவென் எச்சம் + வேண்டாம் + ஓ (வினா)

செயவென் எச்சம் + கட + { இடம் - திணை - பால் விகுதிகள் }

செயவென் எச்சம் + கட + அது + (அக)

முதல் அமைப்பு இன்று அவ்வளவாகப் பழக்கத்தில் இல்லை.

(எ) வினையெச்சங்களும் இடைச்சொற்களும்

செயவென் எச்சம் + { ச்சே செய்தே ஐயில் }

நிகழ்காலப் பெயரெச்சம் + { பொழுது, போது }

எதிர்காலப் பெயரெச்சம் + { இடத்தில், போது }

இறந்தகாலப் பெயரெச்சம் + போது

எதிர்மறைப் பெயரெச்சம் + { ச்சே, செய்தே, போது }

(ஏ) உறுதிப் பொருள்

வினைமுற்று + ஆம்

செயப்பாட்டுவினை இரண்டுவிதமாக

முகிக்கிறேன் — முகியிறேன்

முறிக்கிறேன் — முறிகிறேன்

நசுக்கிறேன் — நசுங்கிறேன்

எழுப்புகிறேன் — எழும்புகிறேன்

இவை தமிழ் இலக்கணமரபுப்படி பிறவினை—தன்வினை என்ற வேறுபாடு உடையது. சீகன்பால்கு கருதுவதுபோல செயப்படுபொருள் குன்றாவினை—செயல்பாட்டுவினை என்ற வேறுபாடு உடையது அல்ல. பெஸ்கி (1728 : 77,98) கருத்துப்படி விளங்குகிறது என்பது அஃறிணை (Neuter) வினை; விளக்குகிறது என்பது செய்வினை (Active verb); விளக்கப்படுகிறது என்பது செயப்பாட்டு வினை (Passive verb) ஆகும். இங்கு 'Neuter' என்பது சரியான பொருள் என்ன? என்று தெரியவில்லை.

## 2.10.2. வினைப்பாகுபாடுகள்

இறந்தகாலம், எதிர்காலம், ஏவல், செயவென் ஆகியவைகளுக்கு உரிய மாற்றுருபுகளை விளக்குவதற்காக முறையே எட்டு, இரண்டு, இரண்டு, ஆறு வகைகளாக வினைச்சொற்களைப் பாகுபடுத்தியுள்ளார். இங்குப் பேச்சுமொழிவடிவங்களை எடுத்துக்கொண்டு அங்குள்ள காலவிகுதிகளைச் சரியாகப் பகுக்காததாலேயே இவருடைய பாகுபாடு குறை உடையதாக அமைந்துவிட்டது. சான்றாக வணங்கு என்ற வினைச்சொல்லின் நிகழ்கால வடிவமாக வணங்கிறது என்று பேச்சுமொழி வடிவத்தை எடுத்துக்கொண்டு அங்கு - இற் - (அல்லது இறது என்பது) நிகழ்கால வடிவம் என்று கருதாமல் கிறது என்று கொண்டதாலேயே - யினேன் எடுக்கிற பிறவினைகளோடு அதாவது -உகிறது என்று வருகிற நிகழ்கால வினைகளோடு சேர்க்காமல் தனிப்பிரிவு (vi) அமைத்துவிட்டார். நிகழ்காலவிகுதியை விளக்கும்போது வினைச்சொல்லின் சுற்றெழுத்

தையும் சேர்த்துக் குறிப்பிட்டுள்ளதால் ஒன்றாகச் சேர்க்க வேண்டிய வினைகளை (செபி, வளர்) இரண்டுபிரிவில் சேர்த்து விட்டார் (செபி—முதல் பிரிவு; வள(ர்) - மூன்றாவது பிரிவு). இவைகளை, முதன் முயற்சியாக இருக்கிற காரணத்தாலும் மொழியியல் வளராத காரணத்தாலும் ஏற்பட்ட குறைகள் என்று நாம் புரிந்துகொள்ள வேண்டும்,

(அ) இறந்தகாலத்துக்குரிய பிரிவுகள்

| எண் | நிகழ்கால வடிவம் | இறந்தகால விகுதி வடிவம் | வினைகள் |
|---|---|---|---|
| 1 | — யிருக்கிறது | —சேன்/தேன் | செபி, சிரி, குடு, கொடு, அடை, தை |
| 2 | —யிகிறது | —ஞ்சேன் | அற், விளை, திரி. |
| 3 அ. | —அக்கிறது | —ந்தேன் | மற, நட |
| ஆ. | நக்கிறது | நக்கினேன் | நக்கு |
| இ. | —டாக்கிறது | —டாக்கினேன் | உண்டாக்கு, புதுசாக்கு |
| ஈ, | கக்கிறது | கக்கினேன் | கக்கு |
| உ. | ளக்கிறது | ளத்தேன் | வள(ர்) |
| 4 அ. | ஏகிறது<br>ஓகிறது | ந்தேன் | வே, நோ |
| ஆ. | ஒக்கிறது | யினேன் | போக்கு, நோக்கு |
| 5 அ. | —உகிறது | —யினேன் | பேசு, தப்பு, ஓடு எண்ணு, தள்ளு |
| ஆ. | —ளுகிறது | —ண்டேன் | கொள்ளு |
| இ. | —லுகிறது | —ன்னேன் | சொல்லு, கொல்லு |
| ஈ. | —ருகிறது | —ந்தேன் | வா (வரு), வளரு |
| உ. | —டுகிறது | —ட்டேன் | படு, விடு, போடு |
| ஊ. | —ழுகிறது | —ந்தேன் | விழு |
| 6 | —கிறது | —யினேன் | வாங்கு, பிடுங்கு, வணங்கு |
| | | —ன்னேன் | தின் (திங்),என்.(எஸ்) |
| 7 | —கிறது | —தேன் | பாற் (பார்), வாற், (வார்). பேற் (பேர்) |
| 8 | —கிறது (அடக்கிறது) | —யினேன் | அடக்கு, இறக்கு, சிமக்கு (சுமக்கு) ஏத்து |

மேலே குறிப்பிட்டபடி நிகழ்காலத்தில் வினைச்சொற்களின் ஈற்றெழுத்துகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சிலசொற்களில்

முழுவடிவமும் கொடுக்கப்பட்டிருக்கிறது (நக்கு, கக்கு). ஆனால் வே, நோ ஆகிய இரண்டு சொற்களை மட்டும் ஏகிறது, ஆகிறது என்று பிரித்தவர் கக்கிறது, நக்கிறது என்பதை அக்கிறது என்று பிரித்திருக்கலாம். இறந்தகாலத்தில்— சேன் /தேன் என்று குறிப்பிட்டு வல்லெழுத்து மிகுந்து வருவதை விளக்காமல் விட்டு விட்டார். இனேன் என்பது யகரமெய் சேர்த்துக்கூறியதும் சிறப்பு ஆகாது; கொள்ளுகிறது என்பதை ளுகிறது / ண்டேன் என்று கூறியது சிக்கலானதே.* கொள்ண்டேன் என்றவடிவம் இலக்கணப்படி உண்டாகும், ஆனாலும் தள்ளுஎன்ற வினையிலிருந்து வேறுபடுத்த—ளுகிறது/உகிறது என்று நிகழ்கால விகுதியில் வேறுபடுத்திக் காட்டி வேறுவேறு இறந்தகால விகுதியை ஏற்கின்றன என்று கூறியது சிறப்பானதாகக் கருதலாம்.

அ) எதிர்காலத்துக்குரிய பிரிவுகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1 அ. | —கிறது | இறந்த காலம் | எதிர்காலம் | |
| | | | வேன் | அறி எழுது செல்லு அதட்டு, விளையாட்டு |
| ஆ. | { ன் ண் } | | பேன் | தின், எண், காண் |
| இ. | ,, கிறேன் | வினேன் | வேன் குவேன் | வணங்கு, வாங்கு ,, |
| 2 அ, | —க்கிறது | | பேன் க்குவேன் | இரு, மற, துதி, அழை குடு, வை, ஆக்கு, உண்டாக்கு மோசம் போக்கு |

இங்கு இரண்டாவது பிரிவில் நிகழ்கால விகுதியாக —க்கிறது கொடுத்திருப்பதுபோல எதிர்கால விகுதியிலும்—ப்பேன் என்று கொடுத்திருக்கவேண்டும். ஆக்கு, போக்கு போன்றவினைகளையும் முதல்பிரிவு இ-யில் சேர்ப்பதுதான் பொருத்தமானது. வணங்கு— வணங்கிறது, வணங்குவேன் என்பது போல ஆக்கு—ஆக்கிறது— ஆக்குவேன் என்பவையும் அமைகின்றன. அப்படியானால் வல்வினை—மெல்வினை என்ற பாகுபாடு முழுமையும், அமைத்த சீகன்பால்கைச் சேர்ந்திருக்கும்.

(இ) செயவென் எச்சத்துக்குரிய பிரிவுகள்

| | | | |
|---|---|---|---|
| 1 | (ங்)கிறது | கிறது→க | வாங்கு, வணங்கு தாங்கு, பிடுங்கு |
| 2 | க்கிறது | க்கிறது→க்க | பொறு,தை விசாரி, தூஷனி |
| 3 | { ண் ன் } கிறது | அ | காண், தின், என் |

| | | | |
|---|---|---|---|
| 4 | (உ)கிறது | உ→அ | வரு (வா), அழு, ஆளு, விடு, இடு, கொள்ளு |
| ,, | யினேன் | கிறது→க | அருகு |
| 5 அ. | யிகிறது | இ+அ | அறி பிறி |
| ஆ. | ,, | கி→ய்ப் | வை, செய் |
| 6 {அ, எ, ஒ} | கிறது | கிறது→க | ஆகு, வேகு, நோகு |

வாங்கிறது என்ற நிகழ்காலவடிவத்தில் - இற் - என்பது நிகழ்கால விகுதியாகக் கொண்டிருந்தால் 2→அ என்பதுபோல (பிரிவு iv) விளக்கலாம். செயவென் எச்சத்தில் வல்வினை, மெல் வினை பாகுபாடு தெளிவாக அமைந்திருந்தும் சீகன்பால்கு வருண னையில் அது வெளிப்படாமல் போய்விட்டது. அதற்குக் காரணம் நிகழ்கால வடிவங்களைச் சரியாகப் பகுக்காததுதான்.

ஈ, ஏவல் வடிவத்துக்கான பிரிவுகள்

| | | |
|---|---|---|
| 1. | எதிர்கால விகுதியைக் கழித்தல் (வணங்குவேன் - வணங்கு) | வணங்கு வாங்கு, துதி, அழை |
| 2. அ | நிகழ்காலம் - க்கிறேன், இறந்த காலம் - யினேன் ஆகியவைகளில் க்கிறேன் → க்கு துவக்கிறேன் - துவக்கு | துவக்கு, இறக்கு அடக்கு |

ஆ ஒழுங்கற்ற ஏவல்கள்

தின்கிறது—தின்று (தின்னு)
நிற்கிறது—நில்லு
விக்கிறது—வில்லு

தின்கிறது என்ற நிகழ்கால வினைக்குரிய ஏவல் கின்று என்பதே. எனவே தின்று என்பது அச்சுப்பிழையாக இருக்கலாம். இரண்டாவது அ, வகையும் எதிர்காலவினை முற்றிலிருந்து ஏவலை உண்டாக்க முடியும். துவக்குவேன்→துவக்கு; இறக்குவேன்— இறக்கு. இங்கு நிகழ்காலத்திலிருந்து வருவித்தது வருணனையில் சிக்கலை உண்டாக்கிவிட்டது.

## 2,11 தொடரியல்

இது சுருக்கமாகவே விளக்கப்பட்டுள்ளது. இங்குக் குறிப்பிடும் முக்கிய செய்திகள் :

1 பால்பாகுபாடும் எழுவாய்—பயனிலை இயைபும் (இது முன்னரே விளக்கப்பட்டுள்ளது),

2 பெயரடை அது தழுவும் பாலுக்கு ஏற்பமாறாது

நல்ல புருஷன்

நல்ல பெண்சாதி

நல்ல மிறுகம் (மிருகம்)

3 வேற்றுமைகளின் பயன்பாடு

4 இரு, போடு, கொள், பண், வா, போ ஆகியவை துணை வினைகளாகப் பயன்படுத்தலாம்.

விசுவாசித்துக் கொண்டிருந்தான்

விசுவாசித்துக் கொண்டு வந்தான்

பாவங்களை விட்டுப்போட்டேன்

எழுதிக் கொண்டு போனார்

பாவம் பண்ணிக்கொண்டிருந்தார்

இங்குப் 'பண்' என்பது முதல் வினையாக உள்ளதே தவிர துணை வினையாகச் செயல்படவில்லை.

5 எழுவாய்ப்பெயரோடு ஆனவன், ஆனவள் ஆகியவை களைச் சேர்க்கலாம்.

இந்த ராசா ஆனவர்

என்னுடைய மகள் ஆனவள்

இந்தப்புண்ணியமானது

6 'என்று' என்பதைப் பயன்படுத்திக் கூட்டு வாக்கியம் பயன் படுத்தலாம்.

அவர் வந்தார் என்று சொன்னார்

சறுவேசுரன் எங்களை உண்டாக்கினார் என்று அறிந்திருக்கிறோம்.

7 செய்து என்னும் கூட்டு வாக்கியங்கள் உண்டாக்கலாம். எழு வினையெச்சங்களைக் கையாண்டு ஒரு நீண்ட வாக்கி யத்தை உதாரணமாகக் காட்டியுள்ளார்.

8 'பேரிலே' என்ற ஒருநிலைச் சொல்லைப் பெயரோடு பயன் படுத்தலாம்.

இந்தப்புதுமைகளின் மேலே ஆச்சரியப்படுகிறேன். இதுவே நூலின் கடைசித் தொடர்.

சீகன்பால்கு தமிழகத்துக்கு வந்து தமிழ்கற்றுத் தன்னுடைய மதத்தைப்போதித்த அதே நேரத்தில் தமிழையும் தமிழ்ப்பண் பாட்டையும் ஆராய்ந்ததால் ஏற்பட்ட உணர்வின் வெளிப் பாடாக இந்த இறுதித் தொடரைக் கொள்ளலாம் போலத் தோன்றுகிறது.

# கொடுந்தமிழ் இலக்கணம்

## 3.1. முன்னுரை

கான்ஸ்டன்டின் ஜோசப் பெஸ்கி (Constantine Joseph Beschi 1680 - 1742) இத்தாலி நாட்டில் பிறந்தவர், சமயப் பணிக்காகத் தமிழகம் வந்து தங்கியபோது வீரமாமுனிவர் என்ற தமிழ்ப்பெயர் சூட்டிக் கொண்டு சமயப் பணியோடு இலக்கியப் பணியும், இலக்கணப் பணியும் செய்தவர். தமிழகத்தில் பரவலாக அறியப்பட்ட மேலை நாட்டுக் கிறித்துவ அறிஞர், இத்தாலி, லத்தீன், பிரெஞ்சு, கிரீக், ஹீப்ரு, போர்ச்சுகீசு ஆகிய ஐரோப்பிய மொழிகளையும், பாரசீகம், சமஸ்கிருதம், ஹிந்துஸ்தானி ஆகிய ஆரிய மொழிகளையும், தமிழ், தெலுங்கு ஆகிய திராவிட மொழி களையும் அறிந்தவர். இவர் லத்தீன், தமிழ் ஆகிய இரு மொழிகளில் சமயம் மொழியியல் ஆகிய துறைகளில் நூல்கள் எழுதி உள்ளார். தமிழில் இலக்கணம் (தொன்னூல் விளக்கம்), அகராதி (சதுரகராதி), இலக்கியம் (கவிதையில்—தேம்பாவணி, திருக்காவலூர்க் கலம்பகம்) முதலியன, உரைநடையில்—(பரமார்த்த குரு கதை), இறைநூல் (வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம் முதலியவை), மொழிபெயர்ப்பு (குறள் இலத்தீன் மொழிபெயர்ப்பு) இவரைப் பற்றிய முழு விவரத்துக்கு வேங்கடசாமி, 1936. மீனாட்சி சுந்தரம், 1974 பார்க்கவும்) எழுதியுள்ளார்.

இவருடைய இலக்கணப் பணி ஒரு மொழி அகராதியாகவும் (சதுரகராதி), இரு மொழி அகராதியாகவும் (தமிழ்—ஆங்கில அகராதி, தமிழ்—இலத்தீன் அகராதி), பன்மொழி அகராதியாகவும் (போர்ச்சுகீசு — இலத்தீன்—தமிழ் அகராதி), இலக்கண

நூலாகவும் (லத்தீனில் 1 கொடுந்தமிழ் இலக்கணம், 2 செந்தமிழ் இலக்கணம், 3 க்ளாவிஸ்; தமிழில்—தொன்னூல் விளக்கம்) மலர்ந்துள்ளது. பல நூல்கள் இவர் உயிரோடு இருந்த காலத்தில் வெளியிடப்படவில்லை. இவர் எழுதிய இரு மொழி அகராதிகளில் லத்தீன் அகராதியும் தமிழ்—ஆங்கில அகராதியும் கிடைக்க வில்லை. (மீனாட்சி சுந்தரம், 1971 : 256) தேம்பாவணி (726) போன்ற இலக்கிய நூல்களை எழுதிய பிறகே இலக்கணப் பணியில் ஈடுபட்டிருக்கிறார். இலக்கண நூல் எழுதிய கால வரிசை

1. A Grammar of the common Dialect of Tamil Latin—1728
2. A Grammar of the High Dialect of the Tamil Language termed as stem Tamil—Latin—1730
3. தொன்னூல் விளக்கம் 1730
4. சதுரகராதி 1732
5. Clavis C—1735
6. Tamil—Latin Dictionary 1741/42

கொடுந்தமிழ் இலக்கணம் முதலில் 1938-இல் அச்சிடப்பட்டது. (ஞானப்பிரகாசம், 1985 : 103). கொடுந்தமிழ் இலக்கணத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு 1848-இல் வெளிவந்தது. அதைச் சரபோஜி சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தார் (தஞ்சாவூர்) 1971-இல் மறுபதிப்பு செய்துள்ளார்கள். அதையொட்டியே இந்தக் கட்டுரை எழுதப்பட்டுள்ளது. நூலில் இயல்தலைப்பு, உட்பிரிவு தலைப்பு, ஓரத்தில் பத்தி எண் (Marginal number) கொடுத்துள்ளார். பிற பதிப்பைப் பயன்படுத்துவோரும் எளிதில் மேற்கோள் பகுதியைப் புரிந்துகொள்வதற்குப் பத்தி எண் முதலிலும் சரசுவதி மஹால் பதிப்பு பக்க எண் அடுத்தும் கொடுக்கப்படுகின்றன.

மேலைநாட்டார் எழுதி இன்று கிடைக்கும் இலக்கண நூல்களில் இது மூன்றாவது. முதலில் பால்டே (1632—1672) டச்சு மொழியில் எழுதிய இலக்கணம் இன்று கிடைக்கும் இலக்கணங்களில் பழமையானது, முதன்மையானது, அடுத்து சீகன்பால்கு எழுதிய Grammatica Damulica என்பது 1716-இல் எழுதப்பட்டது. அது போன இயலில் விரிவாக விளக்கப்பட்டது. பெஸ்கியின் கொடுந்தமிழ் இலக்கணம் 1728-இல் எழுதப்பட்டதாக அவருடைய முன்னுரை குறிப்பிடுகிறது.

இந்த இலக்கணத்தை மொழியியல் நோக்கில் விரிவாகவும் விளக்கமாகவும் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் இரண்டு கட்டுரைகள் எழுதியுள்ளார். எனவே இலக்கண வரலாற்று நோக்கு, மொழி உணர்வு நோக்கு, இலக்கண உருவாக்க கோட்பாட்டு நோக்கு என்று மூன்று நிலையில் கொடுந்தமிழ் இலக்கணம் ஆராயப் படுகிறது.

## 3.2. வரலாற்று நோக்கு

இலக்கண வரலாற்று நோக்கு என்பது கொடுந்தமிழ் இலக்கணத்தில் முன்னைய நூல்கள் பற்றிய குறிப்பும், செல்வாக்கும் என்ற இரண்டையும் குறிக்கும்.

பெஸ்கி முன்னைய இலக்கண நூல்களை நேரடியாகக் குறிப்பிடவில்லை. இருந்தாலும் முன்னுரையில் முன்னோடிகள் இருப்பதாக (ப. 1) ஒத்துக் கொண்டு நூலுக்குள் இடையே சிலர் (12.29; 35.40) வேறொருவர் (77.98, 79. 102), ஒரு சில ஆசிரியர்கள் (113,139) என்று குறிப்பிட்டுள்ளார். எனவே சீகன்பால்கு இலக்கணமே கிடைப்பதால் அந்த இலக்கணத்தின் செல்வாக்கு கொடுந்தமிழ் இலக்கணத்தில் எப்படி காணப்படுகிறது என்று பார்க்கலாம். அந்தச் செல்வாக்கை இரண்டு விதமாகப் பிரிக்கலாம்.

1. அந்த இலக்கணத்திலுள்ள குறைகளைச் சுட்டிக்காட்டித் தன்னுடைய இலக்கணத்தைத் திருத்திக் கொண்டது.
2. அந்த இலக்கணத்தை அப்படியே பின்பற்றியது.

### 3,2.1, முந்தைய இலக்கணத் தவறுகள்

சீகன்பால்கு இலக்கணத்தில் குறிப்பிட்ட சில தரவுகள் தவறு என்றும், சில இலக்கணம் தவறு என்றும் பொதுவாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.

1. விரல் என்ற சொல்லின் பன்மை வடிவமாகச் சீகன்பால்கு விரல்க்கள் என்று கொடுத்துள்ளார். (ப. 27). ஆனால் மயில் என்பதற்கு மயில்கள் என்பதே பன்மை வடிவம் என்று பெஸ்கி கூறுவதால் (41.48) விரல்கள் என்பதே சரியான வடிவம் என்பதைத் தெளிவுபடுத்துவதாகக் கொள்ளலாம்.

2. 'ஒ' என்ற குறைவினையடி ஒக்கும், ஒவ்வாது என்ற இரண்டு வடிவம் மட்டுமே பெறும் என்று சீகன்பால்கு சொல்ல (ப. 64), பெஸ்கி ஒக்கும், ஒவ்வாது, ஒவ்வாத என்று மூன்று வடிவங்களை மட்டுமே. இன்னொருவர் (79.101) கொடுத்துள்ள

தாகக் குறிப்பிட்டு இறந்தகால வினைமுற்று (ஒத்தேன்), எதிர்கால வினைமுற்று (ஒப்பேன்), இறந்தகாலப் பெயரெச்சம் (ஒத்த), எதிர்மறை வினையெச்சம் (ஒவ்வாமல்), தொழிற்பெயர் (ஒப்பு) போன்ற வடிவங்கள் பெறும் என விளக்கியுள்ளார். இதன்படிச் சீகன்பால்கு இலக்கணம் 'குன்றக்கூறல்' என்ற குறை உடையது என்பது பெஸ்கியின் கருத்து.

3. நீய் விசுவாசிக்கிறாயோ அப்போ அவன் விசுவாசித்தான்; நீய் விசுவாசித்தாயோ, அப்போ நான் விசுவாசித்தேன்; நீய் விசுவாசிக்கிறாயே அப்போ நான் விசுவாசிப்பேன் என்ற மூன்று தொடர்களைச் சீகன்பால்கு (ப. 61) இறந்தகால முற்றுபெறாத் (post imperfect) தொடர் என்று குறிப்பிட்டுள்ளார். முதல் தொடரையும் மூன்றாவது தொடரையும் பெஸ்கி எடுத்துக்காட்டி இவைகளைத் தான் எந்த நூலிலும் படிக்கவில்லை, தாய்மொழியாகத் தமிழ் பேசுகிறவர்களிடம் கேட்டதில்லை என்று (113, 139) குறிப்பிட்டுள்ளது, சீகன்பால்கு தரவு தவறானது என்பதைப் புலப்படுத்துவதாகும்.

4. அ) இன்னொரு இடத்தில் சீகன்பால்கு தரவுகளை ஒத்துக் கொண்டு அவைகளின் இலக்கண விளக்கம் பொருந்தாது எனப் பெஸ்கி குறிப்பிட்டுள்ளார்.

நீங்கல் வேற்றுமையின் ஒரு பிரிவான உடனிகழ்ச்சிக்குரிய வடிவங்களாக — ஒடே, — உடனே; ஐப்பாத்து, — ஐக்குறிச்சு,—க்காக,—ஐக்கொண்டு ஆகிய வடிவங்களைச் சீகன்பால்கு (ப. 15, 16, 22) கொடுத்துள்ளார். இவைகளில்—க்காக,—ஐக்குறித்து,—ஐக்கொண்டு ஆக மூன்றையும் நீங்கல் வேற்றுமையாகக் கருதியது தவறானது என்றும்—க்காக என்பது நான்காம் வேற்றுமை பொருட்டுப் பொருளையும்—ஐக்குறித்து என்பது இரண்டாம் வேற்றுமை நோக்குப் பொருளையும்,—ஐக்கொண்டு கருவிப் பொருளையும் உணர்த்துகிறது என்றும் தமிழ் இலக்கணத்திலும் அவை நீங்கல் வேற்றுமையின் உருபு கருதப்படவில்லை என்றும் பெஸ்கி (35,40) குறிப்பிட்டுள்ளார்.

(ஆ) சீகன்பால்கு (ப. 80) முறிக்கிறேன்—முறிகிறேன், நசுக்கிறேன்—நசுங்கிறேன், எழுப்புகிறேன்—எழும்புகிறேன், ஆகிய இணைச் சான்றுகளைக் கொடுத்துப் பின்னவை செயப்பாட்டு வினைகள் என்று குறிப்பிட்டுள்ளார், பெஸ்கி முகிகிறது,

வளருகிறது, விளங்குகிறது ஆகியவைகளைக் கொடுத்து அவை (77.98) பிறரால் செயப்பாட்டு வினையாகக் கருதப்படுகின்றன; உண்மையில் அவை அஃறிணை (Neuter) வினைகள். ஏனென்றால் அவை செயப்பாட்டு வினை பொருளை உணர்த்தவில்லை. எனவே சீகன்பால்கு இலக்கணம் தவறு என்று பொருள்.

### 3.2.2. முந்தைய இலக்கணச் செல்வாக்கு

சீகன்பால்கு இலக்கணத்தைப் பலவழியிலும் பெஸ்கி பின் பற்றியுள்ளார். சான்றாக 1. வேற்றுமைகளை ஆறு, இரண்டு, எட்டு, நீங்கல்—இருத்தல், கருவி, உடனிகழ்ச்சி என்ற வரிசையில் விளக்குவது சீகன்பால்கைப் பின்பற்றியது.

2. பெயரியலில் வேற்றுமையை விவாதித்துவிட்டு பன்மை உண்டாகும் முறைகளை விளக்குவது

3. சீகன்பால்கு பெயரடை, பதிலீட்டுப் பெயர் ஆகியவை களைத் தனி இயலாக விளக்கியதைப் பெஸ்கி பெயரியலின் பகுதியாக இரண்டாம் பகுதி, மூன்றாம் பகுதி என வருணித்தது.

4. வினைச் சொற்களில் நிகழ்கால வினைமுற்றுச் சொற் களை முதலில் விளக்கி அதன் அடிப்படையில் இறந்தகால, எதிர்கால வடிவங்களை விளக்குவது. (V) தொடரியலைக் கடைசியாக விளக்குவது. இவை போன்று நூலமைப்பு முறையிலும் அமைப்பை விளக்கும் முறையிலும் பெஸ்கி, சீகன் பால்கைப் பின்பற்றியுள்ளார். அதேசமயத்தில் பெஸ்கியின் இலக்கணம் சீகன்பால்கதை விட விரிவானது, விளக்கமானது, வேறுபட்டது, பல தனித்துவம் வாய்ந்தது. எனவே இரண்டு இலக்கணத்துக்குமிடையே உள்ள வித்தியாசங்கள் அறியத் தகுந்தவை.

[பெஸ்கி, கால்டுவெல்லுக்கும் (1856) பல இலக்கணக் கோட் பாட்டுக்கு வழிகாட்டி. பெஸ்கியின் குறிப்பிட்ட மொழி அமைப்பு களைக் கால்டுவெல் பொதுமைப்படுத்தி மொழியியல் திறமையைப் புலப்படுத்தியுள்ளர்.

1. ஆயுதத்துக்கு ஒலி மதிப்பு (9) என்றது.

2. ஒவ்வொரு வல்லொலியும் குரல் ஒலி, குரல் இலாஒலி மாற்றம் பெறுவது வல்லொலி—மெல்லொலி மாற்றம் Convertability of surds into sonants) என்று பொது விதியாக்கியது.

3. வினையாகப் பிறக்கும் பெயர்களில் தொழிற்பெயர் (verbal noun—படித்தல், எழுதுதல் போன்றது), ஆக்கப் பெயர்கள் (verbal derivative—படிப்பு, எழுத்து) என்று பாகுபடுத்தி இரண்டுக்கும் தொடரியல் நிலையில் வித்தியாசத்தை விளக்கியது.

4. தமிழில் செயப்பாட்டு வினை இல்லை போன்றவைகளில் பெஸ்கி கருத்தை வாங்கிக் கொண்டே புதிய விளக்கம் கால்டுவெல் கொடுத்துள்ளார்.]

### 3.2.3. பெஸ்கியின் தனித்துவம்

சீகன்பால்கு இலக்கணம் மேலே குறிப்பிட்டபடி அடுக்குத் தொடர் இலக்கணம், பெஸ்கியின் இலக்கணம் அமைப்பியல் இலக்கணம் அதாவது மொழி அமைப்பு உண்மைகளைப் பொதுமைப்படுத்தி விதிகளாக விளக்குவது. சான்றாகச் சீகன்பால்கு இலக்கணத்தில் வேற்றுமை உருபுகள் எவையெவை என்று எடுத்துக் காட்டப்படவில்லை பல பெயர்ச்சொற்களின் வேற்றுமை வடிவங்கள் பட்டியல் போட்டுக் காட்டப்பட்டிருக்கும். இப்படி ஒவ்வொரு இலக்கணக் கூறுகளுக்குரிய விகுதிகளும், உதாரணங்கள் மட்டுமே சீகன்பால்கின் இலக்கணத்தில் இருக்கும்.

அமைப்பியல் நோக்கில் தமிழ் வரி வடிவங்களைப் பெஸ்கியே முதன் முதலில் ஆராய்ந்தார். பெஸ்கியின் இலக்கணம் இன்னொரு தனித்துவம் உடையது. தமிழ்மொழி அமைப்பை ஆங்காங்கே ஐரோப்பிய மொழிகளின் அமைப்புகளோடு உறழ்ந்து (அதாவது ஒற்றுமைகளையும், வேற்றுமைகளையும் விளக்குவது 4.11, எ.16, 51.64, 92.116, 99.124, 111.135, 134.16D; 147.169, 148.171, 163,191, 185.212 முதலியன) விளக்கியுள்ளார். இதனால் மீனாட்சி சுந்தரம் (1961.225, 231), கொடுந்தமிழ் இலக்கணத்தைப் புடைமாற்று (Transfer) இலக்கணம் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

சீகன்பால்கு வடமொழி கலைச் சொற்களையே பெரும்பான்மையும் பயன்படுத்தியிருக்க, பெஸ்கி தமிழ் இலக்கணக் கலைச் சொற்களை நிறைய கையாண்டுள்ளார்.

கொடுந்தமிழ் இலக்கணம் என்று பெயருக்கு ஏற்ப ஆங்காங்கே செந்தமிழ் வழக்குகளையும் உறழ்ந்து காட்டியுள்ளது. அதாவது மொழிகளுக்கிடையேயும் ஒரு மொழிக்குள்ளே இரண்டு நடைகளுக்கிடையேயும் (Inter language and Intra language contrast)

உள்ள வேறுபாடுகளை விளக்கிக் காட்டியுள்ளார். பின்னதன் மூலம் இருமொழி வழக்குகளையும் (Digloggic) விளக்கிய பெருமை பெஸ்கியைச் சாரும்.

சமூகக் கிளைமொழி வழக்குகள், இலக்கணத்தின் இயல்பு ஆகியவைகளும் பெஸ்கி நன்கு உணர்ந்தவராகக் காணப்படுகிறார். எனவே அவரைத் தமிழ் இலக்கண அறிஞர் என்பதைவிட நல்ல மொழியியல் அறிஞர் என்று கூறுவதே பொருத்தமாக இருக்கும். இன்னாசியும் (1984 : 64) 'தமிழ் மொழியியலின் முன்னோடி' என்று கொடுந்தமிழ் இலக்கணத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

### 3.3-மொழி உணர்வு நோக்கு

மொழி உணர்வு நோக்கு என்பது மொழியில் வழங்கும் பல கிளை மொழிகள் பற்றிய உணர்வு; மொழி வழக்கில் சிறந்தது எது? தாழ்ந்தது எது என்று வேறுபடுத்தி உணரும் உணர்வு; பேச்சு மொழிக்கும், எழுத்து மொழிக்குமுள்ள வேறுபாட்டு உணர்வு இவைகளைப் பற்றியெல்லாம் இலக்கண ஆசிரியனின் மனப் பாங்கைக் குறிக்கும். இங்குக் கொடுந்தமிழ் இலக்கணத்தில் காணப்படும் மொழி உணர்வுகளைப் பார்ப்போம்.

#### 'கொடுந்தமிழ்' விளக்கும் உணர்வு

நூல் தலைப்பின் உட்கிடை முதலில் சுட்டிக் காட்டத் தகுந்தது. கொடுந்தமிழ் என்று அழைக்கப்படும் தமிழ் மொழியின் பொதுக் கிளை மொழியின் இலக்கணம் (A Grammar of the common dialect of the Tamil language called Koduntamil) என்பதே நூலின் முழுத்தலைப்பு. இதைப் போலவே செந்தமிழ் இலக்கணத்தின் முழுத்தலைப்பு "செந்தமிழ் என்கிற தமிழ் மொழியின் உயர்கிளை மொழியின் இலக்கணம்" என்பதே. (A Grammar of the High dialect of the Tamil language termed shen Tamil). எனவே கொடுந்தமிழ் என்பது கொச்சை வழக்கு களைக் குறிக்காமல் பேச்சுத்தகு மொழி (Standard spoken language), பொது கிளைமொழி என்ற பொருளைச் சுட்டுகிறது.

இங்குக் 'கொடுந்தமிழ்' என்ற தொகையின் வழக்கு வரலாற்றையும் நூலுக்குள் ஆங்காங்கே குறிப்பிடும் சில கருத்து களையும் கவனித்தால்தான் கொடுந்தமிழ் என்பதன் முழுப் பொருளும் ஆசிரியரின் மனப்பாங்கும் புலப்படும்.

தமிழ் இலக்கணங்களில் 'செந்தமிழ்' என்ற சொல்லே காணப்படுகிறது. நன்னூல் மயிலைநாதர் உரையில் தான் 'தமிழ் மொழி பேசும் நிலம் பதிமூன்று பகுதி உடையது; அவற்றுள் ஒன்று செந்தமிழ் என்றும் மீதி கொடுந்தமிழ் நிலம்' என்றும் குறிப்பிட்டு இரண்டுக்கும் உள்ள நிலப்பரப்பும் விதந்து எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. இதன்படி தகுமொழியில்லாத கிளைமொழிகள் கொடுந்தமிழ் என்று பொருள்படும். இளம்பூரணர், சேனாவரையர் ஆகியவர்கள் இந்தக் கருத்து உடையவர்களே. ஆனால் பெஸ்கி 'பொதுத்தமிழ்' என்று குறிப்பிடுவதால் எல்லாரிடத்திலும் செந்தமிழ் (எழுத்து மொழி), கொடுந்தமிழ் (பேச்சு மொழி) என்ற இரண்டு வழக்குகள் இருக்கின்றன என்று கருதுகிறார் என்பதைப் புலப்படுத்துகிறது. பெஸ்கி குறிப்பிடும் செந்தமிழ் பழைய இலக்கிய வழக்குகளே தவிர, இன்றைய இலக்கண வழக்கைக் குறிப்பிடாது. அதனாலேயே பேச்சு மொழியைக் 'கொச்சை' என்றும் 'மிகத் தாழ்ந்த மக்கள் வழக்கு' (62.78) என்றும் 'முட்டாள் தனமாக உண்டாக்கப்பட்ட வடிவம்' (120 146) என்றும் பெஸ்கி குறிப்பிட்டது பின்னால் விளக்கப்படும். அதனால் தான் நூலின் முடிவில் (200.242), படித்த மக்கள் பேசும் மொழியையே மொழியைப் புதிதாகக் கற்றுக் கொள்பவர்கள் கற்றுக் கொள்ள வேண்டும் என்றும் அவர்கள் அறியாமல் பேசுவதைப் பின்பற்றக் கூடாது என்றும் மொழியை நல்ல முறையில் கற்றால் தாய்மொழி பேசுபவர்கள் செய்யும் தவறுகளையும் திருத்தலாம் என்றும் குறிப்பிட்டுள்ளார். இதனால் தான் மீனாட்சி சுந்தரம் (1961 : 250) பெஸ்கி கொச்சை மொழியை வெறுப்பவர் என்று குறிப்பிட்டுள்ளார். இந்த முரணுக்குக் காரணம்? இந்த உணர்வு இலக்கணத்தில் ஏற்படுத்திய பாதிப்பு என்ன? என்ற இரண்டு கேள்விகள் இங்கு எழுகின்றன.

கிறித்துவ பாதிரிமார்கள் பேச்சு மொழியை மட்டும் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உடையவர்கள் அல்ல. அவர்கள் பேச்சுமொழியைக் கற்றுக்கொள்வதற்கு ஒரு காரணம் பொதுமக்களோடு தொடர்புகொள்ள வேண்டும் என்பதற்கு மட்டுந்தான். பேச்சுமொழியைக் கற்றுக் கொள்ளும் போதே எழுத்து மொழியையும் கற்று சமய நூல்களையும் எழுதிப் பரந்த அளவில் சமயப் பிரச்சாரம் செய்ய வேண்டும் என்ற இன்னொரு நோக்கமும் உடையவர்கள் அவர்கள். எனவே பேச்சு மொழியைக் கற்றுக் கொள்ளும் போதே எழுத்து மொழியையும் கற்றுக் கொள்ள உதவும் வகையிலே மிகவும் கொச்சை வழக்குகளைச்

சுட்டிக்காட்டி அவைகளைத் தவிர்க்க வேண்டும் என்று பெஸ்கி குறிப்பிட்டுள்ளார் என்று எண்ணத் தோன்றுகிறது. எனவே வெறுப்புக்கும் ஒரு காரணம் இருக்கிறது. இருந்தாலும் வெறுப்பு இலக்கண வருணனையில் ஏற்படுத்திய ஒரு பாதிப்பு மிகப் பழைய வழக்குகளையும் கொடுந்தமிழ் இலக்கணத்தில் குறிப்பிட்டுள்ளார். அதை எதிர் உணர்வு என்று பொதுமைப்படுத்தலாம்.

### 3.3.2. எதிர் உணர்வு

ல + த் > ற்ற் : தவத்தினால் + தப்பாமல்→ தவற்றினாற்றப்பாமல்;

ன் + த் > ற்ற் : பொன் + தகடு→பொற்றகடு

ல் + க் > ற்க் : மயில் + கு —மயிற்கு (35,44)

என்ற சந்தி விதிகளையும் நூலுக்குள் விளக்கியுள்ளார். சொல்லியல் நிலையில், 1. இல் என்பதை நிபந்தனையெச்சமாக விகுதிகளைக் கூறியது, (115.140); 2. வேண்டு என்ற வினையடியின் அஃறிணை வினைமுற்றாக வேண்டாது அல்லது வேண்டா என்று கூறியது (180.103); 3. இன் சாரியை ஏற்ற வேற்றுமை உருபுகளைக் கொடுத்து உடனிகழ்ச்சி வடிவம்—இன்னோடு; கருவி வேற்றுமை—இனால்; ஆறாம் வேற்றுமை—இனுடைய,—இனது (35.39,40) என்று குறிப்பிட்டது; 4. சுட்டு அடிகளே பெயரடையாக வரும் என்பது : அந்நாள், இந்நாள், இவ்வண்ணம், இன்னன் (50.62); 5. ஈய், தா, கொடு என்ற சொற்களைக் குறிப்பிட்டு 'ஈய்' என்ற சொல்லை உயர்ந்தோனிடமும், 'தா' என்பதை ஒத்தவனிடமும், 'கொடு' என்பதைத் தாழ்ந்தவனிடமும், பயன்படுத்தப்படவேண்டும் என்று குறிப்பிட்டதோடு இந்த மரபு பொதுவாக வழக்கில் இல்லை என்றும் இது கற்றவர்கள் இப்படி பயன்படுத்த வேண்டுமென்று விரும்புவதால் சொல்லாமல் விடக் கூடாது என்பதற்காகக் குறிப்பிட்டிருக்கிறேன் என்றும் கூறியுள்ளார். (146.167) அதனாலே செந்தமிழ் இலக்கண வழக்குகள் பற்றியும் ஆங்காங்கே (99.124) சுட்டிக் காட்டியுள்ளார்.

### 3.3.3. ஏற்புணர்வு

பல இடங்களில் பேச்சுவழக்குகளையும் ஏற்றுக் கொண்டுள்ளார். 1. —ற்ற—என்பதன் ஒலிமதிப்பு — த்த் — (4.12): 2. அகரத்தை எகரமாக உச்சரிப்பது (8.18); 3, இகரம் சில சொற்களில் மறைந்தும் வேறு சில சொற்களில் உகரமாகவும் உச்சரிக்கப்படுவது (10.19); 4. நாள், ஆள் என்ற சொற்கள்—

க்கள் என்பதைப் பன்மை விகுதியாக ஏற்பது (41.48); 5. ஒன்றன்பால் சுட்டுப்பெயர்கள் வேற்றுமை உருபு ஏற்கும்போது இத்து—என்ற வடிவம் பெறுவது (இத்தை, இத்தொடு) (47.56); பலவின்பால் வடிவம், அதுகள், இதுகள் (47.60); 6. எல்லாம் என்பதன் வேற்றுமை ஏற்ற வடிவம் எல்லாத்தையும், எல்லாத்திலும், எல்லாத்துக்கும் (44.92); 7. நிகழ்கால அஃறிணை வினைமுற்றாக ஒருமைக்கும், பன்மைக்கும்—செய்குது என்ற வடிவம் கொடுப்பது (53.69); 8. (ங்) கு ஈற்றாக உள்ள வினையடிகள், நிகழ்கால காலவிகுதி—இற்; வணங்கு—வணங்கிற அடக்கு—அடக்கிற (58.73); 9. ஈற்று வினையில் செயவென் எச்ச வடிவமாக—கேள்க்க, என்பது (69.85); 10. எதிர்மறை ஏவல் பன்மையான—உங்கோள் (75.96); 11. சொல்லின் வடிவங்களைக் குறிப்பிடும் போது பேச்சுமொழி வடிவங்கள் கொடுத்திருப்பது: மனசு<மனம், வயறு<வயிறு (43,51); நெத்து<நெற்று (102.128), ஆர்<யார் (47.57) நெகிழ்காலம்<நிகழ்காலம் (52.67), மெள்ள<மெல்ல (175.196) முதலியன.

### 3.3.4. தகுமொழி, கிளைமொழிகள், நடை

மொழி உணர்வின் இன்னொரு வளர்ச்சி கிளைமொழி பற்றிய உணர்வாகும். பெஸ்கி தகுமொழி, வட்டாரக் கிளைமொழிகள் பற்றிப் பொதுவாகவும்; சமூகக் கிளைகளில் உயர்ந்தவர்களின் வழக்கு, தாழ்ந்தவர்களின் வழக்கு, கொச்சை வழக்கு, உயர்ந்த வழக்கு மாறுபாடுகள் பற்றிச் சிறப்பாகவும் எடுத்துக் காட்டியுள்ளார்.

'இந்த நாட்டில் ஒவ்வொரு பகுதியிலும் அங்கு வாழுகிற மக்கள் ஒவ்வொரு விதமாகப் பேசுகிறார்கள். பல வழக்குகளை ஒதுக்கி விட்டுப் புதிய வழக்குகளை அவர்கள் சேர்த்துக் கொள்கிறார்கள் என்பதை நான் அறிவேன்; அவைகளையெல்லாம் கொடுக்க வேண்டிய தேவை இல்லை என்று முடிவு செய்து விட்டேன். ஏனென்றால் ஐரோப்பாவிலும் இத்தாலி மொழியை வெளிநாட்டாருக்குக் கற்பிக்கிறவர்கள் எல்லாப்பகுதியிலும் படித்த மக்கள் பேசும் பொதுமொழியைக் கற்றுக் கொடுப்பதோடு நிறைவு அடைந்துவிடுகிறார்கள். ஒவ்வொரு விகுதியிலும் தாழ்ந்த மக்கள் கொச்சைத்தனமாகப் பேசும் வழக்குகளை ஒதுக்கி விடுகிறார்கள். அந்த முறையிலே நானும் பாமரமக்களின் தவறான வழக்குகளைக் குறிப்பிடாமல் தரமான சிறந்த வழக்குகளையே தமிழ் முதலில் கற்பவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும்

என்று முடிவு செய்தேன், என்ற அவர் கூற்று (200.242) மூன்று முக்கிய செய்திகளை உள்ளடக்கியுள்ளது. அவையாவன :

1. உலகளாவிய நிலையில் படித்தவர் வழக்குகளே அந்த மொழி பேசும் எல்லாப் பகுதிக்கும் பொதுவாக இருக்கும்.

2. தாழ்ந்தவர்களின் பேச்சு வட்டாரத்துக்கு வட்டாரம் மாறுபடும்.

3. உலகளாவிய நிலையில் பிற மொழியாளர்க்கு மொழி கற்பிக்கும் போது பொது வழக்குகளையே கற்பிக்க வேண்டும்,

தமிழில் சமூகக் கிளைமொழி வழக்கு இருப்பதை மேல்சாதி மக்களின் பேச்சு வழக்கையும், தாழ்ந்தசாதி மக்களின் பேச்சு வழக்கையும் எடுத்துக்காட்டுவதன் மூலம் விளக்கியுள்ளார்.

1. அவர்கள், இவர்கள் என்பதைப் பிராமணர்கள், அவாள், இவாள் என்று பேசுவார்கள் என்றும் 2. அவை எந்த விதி களுக்கும் கட்டுப்படவில்லை என்றும் கூறியுள்ளார் (46.57). இரண்டாவது கருத்து முழுவதும் பொருந்தாது. ஏனென்றால் வேறுசில கிளைமொழிகளின் வடிவங்களை ஒப்பு நோக்கினால்

1. ர்→θ/-க (ககரத்துக்குப் பின்னால் வரும் ரகரம் மறையும்) என்ற விதியும் (சில கிளைமொழியில் அவர்கள் என்பதை அவுக என்று கூறுவார்கள். இங்கும் ககரம் மறைந்துள்ளது )

2. க்→வ் / உயிர்—உயிர் (இரண்டு உயிர்களுக்கு இடையே வரும் ககரம் வகரமாகும் மகன், மகள் என்ற சொற்கள் மவன், மவள் என்றும் பல கிளைமொழிகளில் மாறும்) என்ற விதியும்,

3. வ்→θ/ உயிர்—உயிர் என்ற விதியும் (மகர்—மவர்>மார்— பகல் <பவல்>பால்) செயப்பட்டுள்ளன. க்→வ் / உயிர்—உயிர்; வ்→θ/ உயிர்—உயிர் /என்ற இரண்டு விதிகளுக்கும் பழைய காலத்தி லேயே செயல்பட்டிருக்கின்றன. 4. குறில்+குறில்→நெடில் என்ற விகுதியும் செயல்பட்டதாலேயே (avarkaḷ→ava kaḷ→avakaḷ→ avaal<avaiḷ) இவாள், அவாள் என்ற வடிவம் தோன்றியதாக விளக்கமுடியும்.

'மிகத் தாழ்ந்த மக்களாகிய பறையர்கள்' என்றும் (Man of the lowest caste of parrears 65.80) 'மிகத் தாழ்ந்தோர்' (62.78) என்றும் சில வழக்குகளைக் குறிப்பிட்டுள்ளார். 2. இறந்தகால விகுதியாக—த்—ஏற்கும் வை, பெய், செய், நெய் ஆகிய சொற் களில்—ந்—என்பதைச் சேர்ப்பது, பெய்தேன்→பெய்ந்தேன்>

பெய்ஞ்சேன் பெஞ்சேன். செய்தேன்→செய்ந்தேன்>செய்ஞ்சேன் (62.78). உண்மையில் பேச்சுமொழியில் பெய்ஞ்சேன்>பெஞ்சேன், செய்ஞ்சேன்<செஞ்சேன் என்று இடையண்ணமாக்கம் (palatalization) பெற்று யகரமெய் கெட்டுவரும். 2. அஃறிணை இறந்தகால வினைமுற்று வடிவம்— இன்—விகுதி ஏற்கும் வினையடிகளில்—ச்சு என்ற வடிவமும் (அடங்கிச்சு, பண்ணிச்சு) ஏனைய விகுதி ஏற்கும் சொற்களில் –இச்சு (வந்திச்சு) வடிவமும் கையாளுவது (65.80).

ஒவ்வொருவரும் ஒருவகை (Variety) மொழிமட்டும் இயல்பான சூழலில் இயற்கையாகக் கற்றுக் கொண்டு பேசுவதே கிளைமொழி ஆகும். பெரும்பாலான மக்கள் தங்கள் கிளைமொழியை மட்டும் அறிந்திருப்பார்கள். அப்படியே ஒருவரே இடச் சூழலுக்கு ஏற்பவும் கேட்பவரின் சமூக மதிப்புக்கு ஏற்பவும் வேறுசில வகைகளைப் பயன்படுத்துவார்கள். இப்படிப்பட்ட மொழி வகையை நடை (style) என்று சமூக மொழியியலாளர்கள் (Trudgill, 1974:109) குறிப்பார்கள். அப்படிப்பட்ட வழக்கைப் பெஸ்கி மேன்மையான நடை (elegant) என்று பல இடங்களில் (19.28, 50.62, 53.99 88.111) குறிப்பிட்டுள்ளார். அப்படியே அவர் உறழ்ந்து காட்டும் கூறுகள் (சமூக மதிப்பில்) உயர்ந்தது, தாழ்ந்தது என்று பொதுவாகக் குறிப்பிடலாம். இதுவே இரட்டை வழக்கு (உயர் வழக்கு, தாழ்வழக்கு) Diglossia, என்று மொழியியலாளர்கள் பரவலாக ஆராய்கிறார்கள். அந்த முறையில் பெஸ்கி பல மாறுபாடுகளைச் சுட்டிச் சென்றிருக்கிறார்.

| கூறு | உறழ்ச்சி | | சான்று | |
|---|---|---|---|---|
| | உயர்மொழி | தாழ்மொழி | உ.மொ. | தா.மொ. |
| ஒலி | <ன்ற்> | <ண்ண்> | கன்று | கண்ணு (12.23) |
| | <ல்க்க்> | <ற்க> | என்றைக்கு<br>வீட்டிலக்கிட | எண்ணைக்கு<br>வீட்டிற்கிட (19 28) |
| | | | பேசாமல் போ | பேசாமற் போ |
| உருபொலியன் | <இ> | <இந்த> | இப்படி | இந்தப்படி (50.67) |
| ஆறாம் வேற்றுமை | (இன்) அது | உடைய | மலையின்<br>மலையினது<br>மலையது | மலையுடைய (35.39) |
| 4ஆம் வேற்றுமை | -க்கு- | -உக்கு | மயிற்கு<br>அவற்கு | மயிலுக்கு (37.44)<br>அவனுக்கு |

| | | | | |
|---|---|---|---|---|
| நிகழ்காலம் | -கிந்- | -இந்- | நக்குகிறது | நக்கிறது (56.72) |
| பொருள் | எதிர் காலப் பொருள் | நிகழ்காலப் பொருள் | செய்கிறான் (எதிர்காலப் பொருள்) | செய்கிறான் (நிகழ்காலப் பொருள்) (53,69) |
| இறந்தகாலம் ஒன்றன்பால் விகுதி | அது | உது | செய்தது | செய்துது (64,79) |
| இறந்தகால விகுதி | த்த் | ச்ச் | படித்தேன் | படிச்சேன் |
| | ந்த் | ஞ்ச் | அறிந்தேன் | அறிஞ்சேன் |
| | இன் | ன் | போயினேன் ஆயினேன் | போனேன் ஆனேன் |
| வேண்டும் என்பதன் எதிர்மறை | | | வேண்டா | வேண்டாம் |
| | | | வேண்டாது | (80.103) |
| | | | வேண்டும் | வேணும் |
| சொல் வடிவம் | த் | ர் | போதாது | போராது(84.106) |
| | | | போதும் | போரும்'' |
| போல் | | | முழுவினை போல்வேன் போலுகிறேன் | குறைவினை (88.111) |
| குறிப்புவினை ஆண்பால் விகுதி | ஆன் | காறன் | தஞ்சாவூரான் | தஞ்சாவூர்க் காறன் (103.130) |
| | | | ஊரான் | ஊர்க்காறன்'' |
| நிபந்தனை விகுதி | இல் | ஆல் | வணங்கிய | வணங்கினால் (115.14) |
| செய | அர் | அக் கொள்ள | வர | வரக்கொள்ள (119.144) |
| | அச் செய்து | -சே | வரச்செய்து | வரச்சே (120.146) |
| | -அ | -அதினாலே | வர | வருவதினாலே (145.165) வந்ததினாலே |
| | -அற்கு | -க்கு | வருவதற்கு முன் | வருவதுக்கு முன் (151.177) |

| | | | | |
|---|---|---|---|---|
| முழுமை Absolutive | — | ஒன்றே | ஒன்றில் | (164.191) |
| உயர்திணை | ஆறு பேர் முதல்வர் | | அறுவர் | ஆறுபேர் (184.212) |
| எண்ணுப் பெயர் | | | எழுவர் | ஏழுபேர் |

கேட்பவரின் சமூகமதிப்புக்கு ஏற்ப பேச்சுவழக்கு மாறுபடும். 'நடை' மாறுபாட்டையும் பெஸ்கி குறிப்பிட்டுள்ளார். மகன் தந்தையிடம் பேசும் போது 'நீ இரு' என்பதற்குப் பதிலாக 'நீர் இரும்' என்று கூற வேண்டும், என்று பெஸ்கி (45.54) குறிப்பிடுவ தால் ஒத்தவர்களிடம் 'நீ இரு' என்ற வடிவம் பயன்படுத்தப் படுவதாகக் கொள்ளலாம்.

அப்படியே ஏவல் வடிவத்தைப் பயன்படுத்தும்போது செயவென் எச்சத்தையும் (இருக்க, போக, சொல்ல) அரசன் குரு போன்ற மிகவும் உயர்ந்த பெயர்களை முன்னிலையாகச் சொல்லும் போது உயர்வு ஒருமை வடிவமாகச் செய்யும் என்று பயன் படுத்தாமல்—செயவென் எச்சத்தைப் பயன்படுத்த வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்.

அரசன் மதகுரு போன்ற மிக உயர்ந்தவர்களிடம் பேசும்போது 'தேவரீர் எழுந்திரும்' என்று கூறாமல் 'தேவரீர் எழுந்திருக்க' என்றே கூறவேண்டும். பொதுவாகச் 'செய்யும்' என்ற வடிவத்தைப் பயன்படுத்தாமல் 'செய்ய' என்ற வடிவத்தையே கையாள வேண்டும் (69.85). எனவே சமூக வேறுபாடு, உயர்ந்தவர்—தாழ்ந்தவர் என்ற வேறுபாடு மொழியிலும் பிரதி பலிக்கிறது. வினைமுற்றைப் பயன்படுத்தும்போது மிக உயர்ந்த வர்களைச் குறிக்க 'குருசுவாமி எழுந்தருளிற்று' என ஒன்றன்பால் வடிவம் பயன்படுத்தலாம் என்று பெஸ்கி (51.85) குறிப்பிட்டாலும் 'அருள்' என்ற துணை வினை உயர்வைக் குறிக்கப்பயன்படுத்தி யுள்ளதைக் காணலாம். நாம், நீர், தாம் ஆகிய பன்மை வடிவங் களை உயர்ந்தோர் தங்களைக் குறிக்கப் பயன்படுத்த வேண்டும். (45.54). இங்குத் தாழ்ந்தவர்கள் உயர்ந்தவர்களிடம் பேச வேண்டிய முறையும் உயர்ந்தவர்கள் தங்களைக் குறிப்பிட வேண்டிய முறையும் விளக்கப்பட்டுள்ளன.

### 3.4. நூலமைப்பு

நூலை ஐந்து இயலாகப் பிரித்துள்ளதாக அவர் முன்னுரை யிலே குறிப்பிட்டுள்ளார். அவையாவன :

1. தமிழ் எழுத்துகளும் தமிழ் நெடுங்கணக்கின் விதிகளும்
2. பெயர்களும் பதிலீட்டுப் பெயர்களும்
3. வினைச்சொற்கள்
4, தொடரியல் விதிகள்.
5. எண்ணுப் பெயர்களும் அன்றாடத் தேவைக்கான சொற்களும்.

### 3.4.1. எழுத்து

முதல் இயல் ஆறுபிரிவுகள் கொண்டது. முதல் பிரிவு தமிழ் எழுத்துகளின் தொகையையும், வரிவடிவங்களையும், இரண்டாவது பிரிவு எழுத்துகளின் ஒலி மதிப்பையும், மூன்றாவது பிரிவு மாற்றொலிகளையும், நான்காவது பிரிவு சொற்களின் எழுத்து வடிவங்களில் (சொல்லெழுத்து) ஏற்படும் திரிபுகளையும், ஐந்தாவது பிரிவு புணர்ச்சியில் தோன்றும் 'மிகுதல்' மாற்றத்தையும், ஆறாவது பிரிவு கிரந்த எழுத்துகளையும் விளக்குகிறது.

### 3.4.1.1. வரிவடிவங்களின் அமைப்பும் திருத்தமும்

1. தனிஉயிர் 12; தனிமெய் 18, இவைகளை மெய்யும் உயிருமாகக் சேர்த்து இன்னொரு வகை எழுத்துகள் அதாவது உயிர்மெய் எழுத்துகள் உண்டாக்கப்படுகின்றன. அ. அவைகளை 'எழுத்து' என்று கூறாமல் அசை (syllable) என்று கூறுவதே சரியானது. ஐரோப்பியர்களைப் போல மெய்யெழுத்துக்குப் பின் உயிரெழுத்தை எழுதி அசை உண்டாக்காமல் மெய்யையும் உயிரையும் சேர்த்துப் புதிய வடிவங்கள் உண்டாக்கப்பட்டு உயிர் மெய்யெழுத்துகள் (உயிரோடு கூடிய உடம்பு) என்று அழைக்கப் படுகின்றன. ஆ. தனி உயிர் தொடரின் முன் வரும் போது எழுதப்படும் ஙகர மெய் தவிர ஏனைய மெய்களோடு பன்னிரண்டு உயிரைச் சேர்த்து உயிர்மெய்கள் உண்டாக்கப்படுகின்றன (2.6) என்ற முன்னுரைகளோடு உயிர்மெய்களில் வரும் உயிருக்குரிய துணை வடிவங்களை ஆராய்ந்துள்ளார். அவைகளைப் பற்றிப் பார்ப்பதற்கு முன்னால் மேலே குறிப்பிட்ட கருத்துக்களின் வன்மை, மென்மைகளைப் பார்ப்போம்.

அ. உயிர்மெய்களை 'அசை' என்று குறிப்பிட்டாலும் மொழி அமைப்பில் எழுத்தியலின் பகுதியாய் வரும் 'அசை' என்பதோடு மாறுபட்டது (தெ.பொ.மீ. 961.188). ஏனென்றால் ஈரொற்று உடனிலை உடைய சொற்களில் (பார்த்து, வாழ்ந்து) முதலில் உள்ள உயிரோடு அடுத்துள்ள இரண்டு தனிமெய்களும் சேர்த்தே ஒரு அசையாகக் கருதப்படும். சொல்லின் இறுதியில்

வரும் மெய்யும் (கல், பகல்) முன்னுள்ள உயிர்மெய்யும் சேர்த்து ஒரு அசையாக அமையும். இந்த முறையில், அசை எழுத்து முறை என்று தமிழ் எழுத்துகளைக் கருத முடியாது. உண்மையான அசையெழுத்து முறையில் இரண்டு ஒலிகளுக்கு ஒரு வடிவமே காணப்படும்; தமிழில் அகர உயிர்மெய் தவிர ஏனைய உயிர் மெய்களில் உயிரைக் குறிக்கும் வடிவம் (ஆ = ா; எ = ெ முதலியன) உண்டு. எனவே தமிழ் எழுத்து முறையை ஒலியன் எழுத்து முறை என்றே கருதப்படவேண்டும். ஆனாலும் ஒலியன் எழுத்து முறை உடையதாகக் கருதப்படுகிற ரோமன் எழுத்து முறையில் தனி உயிரும் மெய்க்குப் பின்னர் வரும் (AND, CAT) உயிரும் ஒரே விதமாக எழுதப்பட தமிழிலும் பிற இந்திய மொழிகளிலும் மெய்க்குப்பின் உயிர் வரும்போது மாற்று வடிவம் பெற்று வரும். எனவே தமிழ் எழுத்து முறை ஒலியன் எழுத்து முறை என்றே கருதப்படுகிறது.

தனி உயிர் தொடரின் முன் வரும்போது எழுதப்படும் என்பது உயிர் முதன் மொழிச் சொற்கள் தொடரின் முதலில் வரும்போது தனிஉயிர் வடிவத்தோடு எழுதப்படும்; இரண்டாவதாகவோ அல்லது மூன்றாவதாகவோ வரும்பொழுது முன்னுள்ள சொல் மெய் ஈறாக இருந்தால் (கல்+அழகு>கல்லழகு) உயிர்மெய் யாகவும்; உயிர் ஈறாக இருந்தால் உடம்படுமெய் பெற்று (கிளி+அழகு>கிளியழகு) உயிர் மெய்யாகவும் எழுதப்படும் என்ற உண்மையைத் தெளிவுபடுத்துகிறது.

உயிர்மெய்யெழுத்துகளில் வரும் உயிரின் மாற்று வடிவங்கள்

1. அகர உயிர் மெய்க்கும் தனிமெய்க்கும் ஒரே வடிவம். இது ஏற்றுக் கொள்ள முடியாது. தொடக்கத்தில் அது சிரமத்தைக் கொடுக்கும். இதனால் தமிழ் இலக்கண நூல்கள் தனிமெய் புள்ளிபெறும் என்று குறிப்பிட்டாலும் நடைமுறைப் பழக்கத்தில் புள்ளி வைத்து எழுதவில்லையென்று தெளிவாகிறது. ஆனால் அவர்காட்டும் எல்லாச் சான்றுகளிலும் தனிமெய்யெழுத்து காணப்படுகிறது. தாம் என்று அவர் குறிப்பிடுவது <தாம்> என்றே எழுதப்பட்டிருக்க வேண்டும்.

2. ஆகார உயிர்மெய்யில் உயிரைக் குறிக்க <ா> என்ற வடிவம் ண, ன, ர, ஆகிய மூன்று தவிர ஏனைய எழுத்துகளில் சேர்க்கப்படும். அந்த மூன்று மெய்களிலும் வடிவ மாற்றம் செய்து (ணா, னா, றா) ஆகார உயிர்மெய் உண்டாக்கப்படும்.

3. ஆகார உயிர்மெய்க்குரிய வடிவமும் ரகரத்துக்குரிய வடிவமும் ஒன்றேதான். எனவே <தாம்> என்பது /தாம்/, /தரம்/ என்று இரண்டு விதமாகப் படிக்க முடியும். ஆனால் ஒரு சிலர் கிரந்த எழுத்து முறையைப் பின்பற்றி (ா) என்ற வடிவத்தில் வலது காலின் கீழே சிறு சாய்வுக்கோடு சேர்த்து எழுதி ரகரத்தை வேறுபடுத்துகிறார்கள். நன்னூலில் ரகர உயிர்மெய்யை ரகர மெய்யோடு வேறு புள்ளி வைத்து எழுதும் முறை குறிப்பிடப்பட்டிருப்பதாகச் சொல்லியுள்ளார் (3.7) (தாம்) என்பது /தாம்/ என்றும் <தரம்> என்று எழுதினால் பின்னதை /தரம்/ என்றும் படிக்க வேண்டும் என்பது அவர் கருத்து.

4. எகர ஏகாரத்தையும் ஒகர ஓகாரத்தையும் வேறுபடுத்த குறிலைக் குறிக்க <எ̄>, <ஏ̄> என்று எழுதி, நெடிலைக் குறிக்க எந்தவிதக் குறியீடும் சேர்க்காமல் எழுதி வருகிறார்கள். எனவே <மெய்> என்று எழுதி /மேய்/ என்று படிக்கிறார்கள். <மெய்> என்று எழுதினால் தான் /மெய்/ என்று படிக்கலாம். அப்படியே <பொய்> என்பதைப் /போய்/ என்றும் /பொய்/, என்றும் படிக்கிறார்கள். சில சொற்களில் மட்டும் இந்தக் குறியீட்டைக் கையாண்டுக் குறில்—நெடில் வேறுபடுத்தப்படுகிறது. பெரும்பாலான சொற்களில் இந்த வடிவ வேறுபாடு செய்யப்படுவதில்லை. எனவே தான் ஒரு புதுமுறை கண்டிருப்பதாகக் குறிப்பிட்டு அதை விளக்கியுள்ளார், <எ> என்று எழுதுவதைக் குறிலையும் ஏ'கார உயிர்மெய் வடிவத்துக்குப் போல மேல்நோக்கி எழுதினால் (ே) நெடிலாகும்.

<மேய்> /மேய்/ <போய்> /போய்/

<மெய்> /மெய்! <பொய்> /போய்/

5. இகர உயிர்மெய் உண்டாக்க <ே> என்ற வடிவம் சேர்க்கப்படும். (ஆங்கில மொழி பெயர்ப்பில் thay add to a /| the letters the figure of) என்று உள்ளது. அப்படியானால் <க> என்பதே /கி/ ஆகும். இலத்தீன் மூலத்தில் என்ன வாசகம் உள்ளது என்று கவனிக்க வேண்டும். டிகரம் இகர உயிர்மெய் உண்டாக்க டகரத்தில் கிடைக்கை (Heriznotal) கோட்டின் இறுதியிலும் நடுவிலும் துணைக்குறி சேர்க்கலாம்.

6. எகர ஏகார உயிர்மெய்களுக்கு மெய்யெழுத்துக்குப் பின்னால் <ா> சேர்க்கப்படும்.

7. ஒ"ர. ஓகார உயிர்மெய்களுக்கு முன் எகரத்துக்குரிய துணைக் குறியும் பின்னால் ஆகார துணைக் குறியும் சேர்க்கப்படும், பொய்.

8. ஔகார உயிர்மெய்களுக்கு மெய்யெழுத்துக்கு முன்னால் கொம்பும் <ா>, பின்னால் ளகரமும் <ள> சேர்க்கப்படும். <கௌ>.

<கௌ> என்று எழுதினால் /கேள்/ என்றும் படிக்கலாம். எனவே இந்த முறையை அதிகம் பின்பற்றாமல் அகர உயிர்மெய் வடிவமும் வகர உயிர்மெய் வடிவமும் சேர்த்து எழுதப்படும் <கௌவை> = <கவ்வை>

9. ஐகார உயிர்மெய் எழுத்துக்கள் உண்டாக்கச் சுழி என்று அழைக்கப்படுகிற <ை> என்ற வடிவத்தை மெய்யெழுத்துக்கு முன்னால் சேர்க்க வேண்டும். <கை> ஆனால் ண,ன,ல,ள ஆகிய நான்கு மெய்கள் மட்டும் ஒருகுறிப்பிட்ட வடிவத்தை அவைகளின் துவக்கத்துக்கு முன் சேர்க்க வேண்டும் ணை னை லை ளை

(X) உகர ஊகார உயிர் மெய்கள் அதிகம் வேறுபடுகின்றன இருந்தாலும் அவைக்குரிய மூன்று முறை காணப்படுகின்றன.

a) க, ச, ட, ம, ழ, ள, ர ஆகியவை ஒரு விதம்
க-கு, கூ, ட-டு, டூ, ம-மு, மூ. ள-ளு, ளூ, ர-ரு, ரூ

b) ச, ப, ய, வ, ஆகியவை மற்றொரு விதம்
ச-சு, சூ, ப-பு, பூ, ய-யு, யூ, வ-வு, வூ

c) ஞ. ண, த. ந, ல, ற, ன ஆகியவை இன்னொரு விதம்
ஞ,ஞு, ஞூ, ண-ணு, ணூ. த-து, தூ, ந-நு, நூ, ல-லு,லூ, ற, று, றூ, ன-னு, னூ.

பொதுவாக மேலே குறிப்பிட்ட விளக்கங்கள் உயிர்மெய் எழுத்துக்களை வரிவடிவத்தின் அமைப்பியல் முறையில் ஆய்வு மேற்கொண்ட பெருமை பெஸ்கியையே சாரும் என்பதைத் தெளிவு படுத்தும். மேலும் தமிழ் வடிவங்களில் ஒரு வடிவம் ஒன்றுக்கு மேற்பட்ட ஒலி மதிப்பு உடையது என்பதையும் உணர்ந்த காரணத்தாலேயே பெஸ்கியால் வரிவடிவத்தில் சில சீர்திருத்தம் செய்து கூடியவரையில் ஒரு வடிவம் ஒரு ஒலி மதிப்பு உடையதாக மாற்றி அமைக்க முடிந்தது. ஆனாலும் இந்த இலக்கணத்தில் எகர ஏகார உயிர்மெய் யெழுத்துகளில்செய்த சீர்திருத்தத்தை மட்டும் குறிப்பிட்டுள்ளார். தொன்னூல் விளக்கத்திலேயே எகர ஏகார உயிரெழுத்

துக்களில் செய்த திருத்தம் குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனாலும் அதன் உரை அந்தக் கருத்தைத் தெளிவுபடுத்தவில்லை. அதனால் தமிழ் ஆராய்ச்சி உலகில் பெஸ்கி செய்த சீர்திருத்தம் பற்றிக் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. அவையாவன:

1. பெஸ்கிக்கு முன்னரே இந்தச் சீர்திருத்தங்கள் கல்வெட்டில் காணப்படுகின்றன. எனவே எழுத்துச் சீர்திருத்தம் செய்த பெருமை பெஸ்கியைச் சாராது (இராகவ ஐயங்கார் ஆராய்ச்சித் தொகுதி ப. 123, நாகசாமி, தினமணிச் சுடர் 13-7-75. இந்த இரண்டு மேற்கோளும் சாலை இளந்திரையன் கட்டுரையில் 1985:43 எடுக்கப்பட்டவை.

2. கொடுந்தமிழ் இலக்கணத்தில் குறிப்பிடுவது எகர ஏகார ஒகர ஓகார உயிர்மெய் வடிவங்களின் திருத்தம் மட்டுமே. உயிர் எழுத்துகளில் யார் அந்தச் சீர்திருத்தம் செய்தார் என்பது தெரியாது என்பது வேங்கடசாமியின் (1938-82) கருத்து.

3. இரண்டு வடிவ எழுத்துச் சீர்திருத்தமும் செய்தது வீரமாமுனிவரே என்பது சாலை இளந்திரையன் (1985) கருத்து. அவர் முதல் கருத்து பொருந்தாது என்பதையும் விளக்கியுள்ளார் பின்னிரண்டு கருத்துகளையும் முதலில் பார்த்து விட்டு முதல் கருத்தைக் கடைசியில் பார்ப்போம்.

வேங்கடசாமி, கொடுந்தமிழ் இலக்கணத்தில் உள்ள எகர ஏகாரம் உயிர்மெய் வடிவங்கள் பற்றிய கருத்தைக் குறிப்பிட்டு உயிர்மெய் வடிவத்தில் வீரமாமுனிவர் தான் திருத்தம் செய்தார் என்று ஒத்துக் கொண்டுள்ளார் (ப.83). ஆனால் தனி உயிர்களில் செய்த மாற்றத்துக்குத் தொன்னூல் விளக்கச் சூத்திரத்தையும் (12) அதனுடைய உரையையும் சான்றுகளையும் எடுததுக்காட்டிப் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார், உரையில் காட்டிய சான்று: எ̱ரி (எரி), ஏ̱தி (ஏதி)

'இவர் இயற்றியமைத்த இவ்விகுதியைப் பின்பற்றியே 19ஆம் நூற்றாண்டில் சில அச்சுப் புத்தகங்களில் நீண்ட புள்ளியும், சுழித்த புள்ளியும் அமைத்து அச்சிடப்பட்டன. ஆனால் இக் காலத்தில் எகர, ஏகார குற்றெழுத்துக்கள் வீரமா முனிவரின் தொன்னூல் விளக்கத்தில் கூறியபடி நீண்ட புள்ளி பெறாமலும் நன்னூல் முதலிய பண்டைக்கால இலக்கணங்களின்படி சுழித்த புள்ளி பெறாமலும் எழுதப் பெறுவதோடு ஏகார ஓகார நெட்டெழுத்துகள்

முறையே நீண்ட புள்ளியும் சுழித்த புள்ளியும் கீழே அமைக்கப்பட்டுள்ளன. இந்த மாறுதல் யாரால் எப்பொழுது உண்டாக்கப்பட்டது என்று தெரியவில்லை' (ப.82) எனும் வேங்கடசாமியின் வாசகத்துக்கு வேறு விளக்கம் தேவையில்லை.

சாலை இளந்திரையன் (1985) எகர, ஏகார உயிர் எழுத்துக்களில் சீர்திருத்தம் செய்தது வீரமாமுனிவரே என்று முதலில் (ப.42) குறிப்பிட்டு, கொடுந்தமிழ் இலக்கணத்தில் மேற்குறிப்பிட்ட மேற்கோளை எடுத்துக்காட்டி (ப.42) 'எ, ஏ என்னும் ஒலிகளுக்கும் ஒ, ஓ என்னும் ஒலிகளுக்கும் இடையில் இருந்த குழப்பத்தை நீக்கியதோடு குறில் நெடில்களுக்கு உரிய குறியீடு (எ.ஒ)களிலும்- வீரமாமுனிவர் பெரிய மாறுதல்களைச் செய்தார் என்பது இந்தக் குறிப்பிலிருந்து தெளிவாகப் புலப்படுகிறது' என்று முடித்துள்ளார். சாலை இளந்திரையன் மேற்கோளும் வேங்கடசாமியின் மேற்கோளும் ஒன்றுதான். ஆங்கிலமொழி பெயர்ப்பிலும் (சரசுவதி மஹால் பதிப்பு. ப.7) இந்தக் கருத்தே காணப்படுகிறது. எனவே சாலை இளந்திரையன் குறிப்பிடுவது போல அந்த மேற்கோளில் உயிரெழுத்துகளில் செய்த மாற்றம் குறிப்பிடப் படவில்லை. ஆகவே சாலை இளந்திரையன் கருத்தான உயிரெழுத்துகளிலும் வீரமாமுனிவரே சீர்திருத்தம் செய்தார் என்பது கொடுந்தமிழ் இலக்கணத்தில் குறிப்பிடப் பட்டிருக்கிறது என்பது பொருந்தாது. உயிரெழுத்துகளில் செய்ததிருத்தம் வேங்கடசாமி எடுத்துக்காட்டிய தொன்னூல்விளக்கச் சூத்திரத்திலே குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பது ஐந்தாவது இயலில் விளக்கப்படும். அந்தச் சூத்திரத்தின் உரைதான் தவறு என்பதும் தொன்னூல் விளக்கத்துக்கு முனிவரே உரை எழுதினார் என்பதை ஐயுறும் படியான பல ஆதாரங்கள் இருப்பதும் அங்கு விளக்கப்படும். எனவே வீரமாமுனிவர் எகர, ஏகார உயிர்மெய்யெழுத்துகளில் செய்த சீர்திருத்தத்தைக் கொடுந்தமிழ் இலக்கணத்திலும் உயிரெழுத்துக்களில் செய்த சீர்திருத்தத்தைத் தொன்னூல்விளக்கத்திலும் குறிப்பிட்டிருக்கிறார் என்பதே உண்மை.

இராகவ ஐயங்காரும், நாகசாமியும் இந்த இரண்டு சீர்திருத்தங்களும் முன்னரே கல்வெட்டுக்களில் உள்ளது என்று ஆதாரம் காட்டியே வீரமாமுனிவர் அந்தச் சீர்திருத்தத்துக்கு மூலகர்த்தா இல்லை என்று குறிப்பிட்டுள்ளார்கள். அந்தக் கருத்தை மறுத்து முனிவரே செய்ததாகக் கொள்ளவேண்டும் என்று சாலை இளந்

திரையன் வாதாடியுள்ளது சிறப்பானது; பரவலாக அறியத் தகுந்தது. அவருடைய வாதங்களாவன:

1. கல்வெட்டுக்களில் காணப்படும் திருத்த வடிவம் அவை செதுக் கப்பட்ட பிறகு உண்டானவையாக இருக்கலாம். 2 பரவலாக ஒரு குறிப்பிட்ட காலத்தில் எல்லாக் கல்வெட்டுக்களிலும் - ஒரே விதமாக எழுதப்பட்டிருந்தால்தான் அந்த எழுத்து முறை வழக்கத் தில் இருந்ததாகக் கொள்ளவேண்டும். 3. கல்வெட்டில் காணப் படும் வடிவங்கள் திட்டமிட்டுச் செய்ததாக இருக்க முடியாது. ஒரே எழுத்தை வெவ்வேறு ஆட்கள் வேறு வேறு விதமாக எழுதுவது போல் யாரோ சில சிற்பியர் வேறு விதமாகச் செதுக்கி னர் என்று கருதவும் இடமுண்டு. 4. அச்செழுத்து முறை வந்த பிறகே ஒரு ஒலிக்கு ஒரு வடிவம் என்ற கருத்து அழுத்தம் பெற்று வரிவடிவம் பற்றிய சிந்தனை ஏற்பட்டது. 5. இந்தச் சிந்தனை விளைவாகச் சிந்தித்து திட்டமிட்டு எழுத்தமைப்பு வகுத்தார் என்ற முறையில் 'தமிழ் எழுத்துச் சீர்மைக்குத் தொடக்கம் செய் தவர் என்ற பெருமை இத்தாலியத் தமிழரான வீரமாமுனிவரையே சாரும் (ப.45).

### 3. 4. 1. 2. மாற்றொலிகள்

இரண்டாவது கருத்தில் 'எழுத்தின் ஆற்றல்' என்று அவை களின் ஒலிமதிப்பை ஒவ்வொரு எழுத்துக்கும் பொதுமைப் படுத்திக் கொடுத்துள்ளார். சான்றாக, ககரம் ஒலி மதிப்பு பறிறிச் சொல் லுக்கு முதலில் /k/- (குரல் இலா ஒலி) என்றும் இடையில் தனியாக வரும் போது /g/ (குரல் ஒலி) என்றும், இரட்டித்து வரும்போது /k/ என்றும் கூறியுள்ளார். இந்தமுறை (சொல்லுக்கு முதலிலும் இரட்டித்து வரும்போது குரல் இலா ஒலியாகவும் இடையே வரும் போது குரல் ஒலியாகவும் காணப்படுவதால் கால்டுவெல் இன்னும் பொதுமைப்படுத்தி வல்லொலி (surds) மெல்லொலி (sonarts) என்று குறிப்பிட்டு விட்டார்.

பெஸ்கி சொல்லுக்கு இடையில் தனியே வரும் என்று பொது வாகக் கூறியது குன்றக்கூறலாக அமைந்துள்ளது என்பது சுட்டிக் காட்டத் தகுந்தது. ஏனென்றால் சொல்லுக்கு இடையில் தனியே வரும் என்பது இரண்டு உயிர்களுக்கு இடையேயும் மூக்கொலிக்கும் வல்லொலிக்குப் பிறகும் வருவதைக் குறிக்கும். இங்கு ந், ட் என்ற வல்லொலிக்குப் பிறகு க்; ச், ப் ஆகிய மூன்று வல்லெழுத்துக்களும் வரும்போது குரலிலா ஒலியாக இருக்கும்: பெஸ்கியும் டகர மெய்க்

குப் பிறகுப் பகரமெய் வரும்போது /p/ ஆக ஒலிப்பதைச் சரியா கவே குறிப்பிட்டுள்ளார் (ப.13). எனவே க, ச. ப ஆகிய வல்லெழுத் துகளும் ந், ட் என்ற மெய்யை அடுத்து வரும்போதும் /k/, /c/, /p/ என்று குரலிலா ஒலியாக உச்சரிக்கப்படும் என்று இலக்கணத்தில் விளக்க வேண்டும். சகரத்தில் சொல்லுக்கு முதலிலும் நடுவிலும் /s/—குரல் இலா அண்பல் இடைநா உரசொலியாகவும்-இரட்டித்து வரும் (c)- குரல் இலா இடைநா இடை அண்ண அடைப் புரசொலி யாகவும் உச்சரிக்கப்படும் என்று கூறியிருப்பதும் சரியானதே.

றகரத்தின் ஒலிமதிப்பு பற்றிய பெஸ்கியின் கருத்து விமர்சனத் துக்கு உள்ளாகியுள்ளது. <ற்ற> என்பது /த்த்/ என்று உச்சரிக்கப் படுவதைப் பெஸ்கி தவறு என்று கருதுவதாகவும் ஆனால் இந்த உச்சரிப்பு வீரசோழிய காலத்திலிருந்து பேச்சுமொழியில் காணப் படுவதாகவும் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் (1961:191) குறிப்பிட் டுள்ளதில் முதல் கருத்து பொருந்தாது. ஏனென்றால் <ற்ற> என்ற எழுத்தின் உச்சரிப்பை விளக்கச் சான்றாகத்தான் பெஸ்கி குற்றம் என்று எடுத்துக் காட்டியுள்ளாரே தவிர (4, 12) அந்த உச்சரிப்பு குற்றம் உடையது என்று கூறவில்லை.

If douled is equivalent to two **tt**; thus குற்றம் is read **cuttam**; a Fault என்பதே ஆங்கில மொழிபெயர்ப்பு வாசகம். இங்கு /த்த்/ என்பதைத் தவறான உச்சரிப்பு என்று கூறவில்லை.

**3. 4. 2.** பெயர்கள்

இது ஐந்து பிரிவுகளைக் கொண்டது. முதல் பிரிவு வேற்றுமை பற்றியும், இரண்டாவது பிரிவு பெயரடை பற்றியும், மூன்றாவது பிரிவு பதிலீட்டுப் பெயர்கள் பற்றியும், நான்காவது பிரிவு பதிலீட் டுப் பெயரடைகள் பற்றியும், கடைசிப் பிரிவு திணை-பால் பிரிவு பற்றியும் விளக்குகின்றன.

பெயர்ச் சொற்களை முதன்முதலில் திணை பால் பாகுபாடு பற்றி மரபு இலக்கணங்கள் விவரிக்க சீகன் பால்கைத் தழுவிப் பெஸ்கியும் வேற்றுமையை விளக்கி விட்டுப் பிறகே பன்மை விகுதி களையும் விளக்கியுள்ளார். சீகன் பால்கு தொடரியலில்-பால் பாகுபாட்டை விளக்கப் பெஸ்கி பெயரின் ஒரு பகுதி—கடைசி பிரிவிலாவது அதை விளக்கியிருப்பது இலக்கண ஆய்வில் செய்த முன்னேற்றமாகக் கருதலாம். மேலும் பால்வேறுபாட்டை மட்டும் சீகன்பால்கு குறிப்பிட திணை-பால் பாகுபாட்டையும் பெஸ்கி விளக்கியுள்ளார். அப்படியே சீகன்பால்கு தனி இயல்

களாகப் பெயரடையையும் பதிலீட்டுப் பெயர்களையும் கருதப், பெஸ்கி பெயரியலின் பகுதியாகக் கொண்டு, சீகன்பால்கு விளக்கிய அதே வரிசைப்படி வேற்றுமை, பெயரடை, பதிலீட்டுப் பெயர் என்ற முறையில் வருணித்துள்ளார். ஆனாலும் பெயரடையைப் பெயரின் பகுதியாகக் கொண்டதால் பெயரடை பெயரிலிருந்து தோன்றியதாகக் கருதுகிறார் என்று நினைக்கத் தோன்றுகிறது.

பெயரடை என்று சிறப்பித்துச் சொல்லப்படுபவை பல, சில, புது, பொது, அரிய, உரிய, பெரிய, சிறிய, இனிய என்று மிகச் சிலவே என்று முதலில் குறிப்பிட்டாலும் பின்பகுதியில் கொடிய என்பதைக் கொடுமை என்ற பெயரிலிருந்தும் அரிய என்பதை அருமை என்ற பெயரிலிருந்தும் உண்டானதாக விளக்கியுள்ளார். இது நன்னூல் மரபைத் தழுவியது. ஆனால் சுத்தம், கடினம் போன்ற சொற்களையும் சேர்த்திருப்பது பெயரடையைத் தனிச் சொல்வகையாகக் கருதத் துணைபுரிகிறது.

பெஸ்கி பெயரடையை 'உரிச்சொல்' என்று தமிழ் இலக்கணக் கலைச் சொல்லால் குறிப்பிட்டிருப்பதையும் தெ, பொ, மீனாட்சி சுந்தரம் (1961-1971) விமர்சித்துள்ளார். இன்று வரிச்சொல் பற்றி நடந்த தொடர் ஆய்வு சில உண்மைகளைப் புலப்படுத்தியுள்ளதால் அவருடைய கருத்துப் பரிசீலனைக்கு உரியதாகி விட்டது. பெயர டையை உரிச்சொல் என்று மொழி பெயர்த்தது தவறு என்றும் பிற்கால ஐரோப்பிய அறிஞர்களும் தமிழ் இலக்கண ஆசிரியர்களும் பெயரடையை உரிச்சொல் என்று கருதும் வழக்கத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து வருகிறார்கள் என்பதும் உரிச்சொல் அடிச்சொல்லையும் இடைச்சொல் விகுதியையும் குறிக்கும் என்பதும் தெ. பொ. மீ யின் கருத்து. இறுதிக் கருத்தே இன்று, விவாதத்துக்கு உரியது. தமிழ் இலக்கண நூல்கள் விளக்கும் உரிச் சொற்களில் அடையாகச் சொற்கள் உள்ளதும் (சண்முகம், 1986 : 159 - 66), இடைச் சொற்களிலும் அடிச் சொல்லாகவும் அடையாக வரும் சொற்கள் இருப்பதும் (சண்முகம், 1992 - 278) கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சீகன்பால்கைப் போலவே பெஸ்கியும் பெயர்ச் சொற்களும் எப்படி பெயரடையாகச் செயல்படுகின்றன என்று விளக்கியுள்ளார். மொழியியல் நோக்கில் பெயரடை சொல் லியல் நோக்கிலும்) தொடரியல் நோக்கிலும் விளக்கப்பட்டுள்ள தாகக் கொள்ளலாம்.

பெஸ்கி கருத்துப்படிப் பெயரடைக்கென்று சில தனிச் சொற் கள் இருப்பதால் அவர் பெயரடையை - உரிச்சொல் என்று அழைத்தது தவறு இல்லை என்று இன்று நாம் கருதலாம்.

### 3. 4. 3 வினைகள்

மூன்றாவது இயலான வினையியலில் ஒன்பது பிரிவுகள் உள்ளன. முதல்பிரிவு நிகழ்கால வினைமுற்று வடிவங்களையும், இரண்டாவது பிரிவு இறந்தகால வினைமுற்றுகளையும், மூன்றாவது பிரிவு எதிர்மறை முற்றுகளையும், நான்காவது பிரிவு ஏவல்வினைகளையும், ஐந்தாவது பிரிவு செயவெனெ எச்சங்களையும், ஆறாவது பிரிவு ஏனைய வினையெச்சங்களையும், ஏழாவது பிரிவு, எதிர்மறைகளையும், எட்டாவது பிரிவு செயப்பாட்டு வினைகளை யும், ஒன்பதாம் பிரிவு குறை வினைகளையும் விளக்குகின்றன.

சீகன்பால்கு முதலில் வினைமுற்று, அதனுடைய எதிர்மறை கள்; ஒன்றிரண்டு சான்றுத் தொடர்கள் என்ற முறையில் நிகழ் காலம், இறந்தகாலம், எதிர்காலம் ஆகிய மூன்று கால வடிவங் களை விளக்கிவிட்டு ஏவல் வினைகள், எச்சங்கள், வினைவடிவங் கள், செயப்பாட்டு வினை, குறை வினைகள், வினைத்திரிபு (Conjugation) என்ற வரிசையில் ஒரே இயலில் விளக்கியுள்ளார்.

வினைமுற்றுச் சொற்களில் இடம் - பால் - விகுதிகள் எல்லா வினைச் சொற்களிலும் ஒரே மாதிரியாக வருகிறது என்று பெஸ்கி குறிப்பிட்டு அவைகளை எடுத்துக்காட்டி நிகழ்கால விகுதிகளை விவரிக்கத் தொடங்கியுள்ளார். கால விகுதிகளைப் பொதுவாகப் பேசும்போது அவைகளின் முதல் வடிவம் (First Form) என்று கூறுவது மொழியியல் நோக்கில் அடிநிலைக் கிளவி (Base Forms) ஆகும். அதைக் கண்டுபிடிப்பது ஓரளவு கடினம் என்று குறிப்பிட் டுள்ளார். ஏனென்றால் கால விகுதிகளின் மாற்று வடிவங்களை எல்லாம் ஒலிக் கட்டுப்பாடு உடைய மாற்றுருபுகளாக அவை ஏற்கும் வினைச் சொற்களின் ஈற்று ஒலி அடிப்படையில் பகுத்து விகுதிகளின் பகிர்வை விளக்க முடியாது.

‘நிகழ்கால வினைச் சொற்குரிய விகுதி கடினம் இல்லை. ஏனென்றால் எல்லா வினைச் சொற்களும்—கிறது என்பதையே ஏற்கிறது; சில இடங்களில் கால விகுதியின் முதலிலுள்ள ககரம் இரட்டிக்கிறது’ என்று குறிப்பிட்டுள்ளார். இந்த வல்லின இரட்டிப்பு எதிர்கால விகுதியிலும் செயவென் எச்ச விகுதியிலும் செயல்படுகிறது.

செயவென் வினையெச்சம் இன்ஃபினிட்டிவ் (Infinitive) என்று தனிப்பிரிவாக விளக்கப்பட்டுள்ளது. காரணம் ஐரோப்பிய மொழி களிலும் இது பெரும்பான்மையும் காணப்படுவது தான்.

ஜெரண்ட் (Gerund) என்பதை வினையெச்சம் என்று குறிப்பிட்டு, 'செய்து' என்னும் வாய்பாடு மட்டுமே விவரிக்கப்பட்டுள்ளது. இந்தப் பிரிவிலேயே பெயரெச்சமும் விளக்கப்பட்டுள்ளது.

எதிர்மறையில் இரண்டு வகை விளக்கப்பட்டுள்ளது அ) செய்+ இடம் - திணை - பால் விகுதி/ஏவல் விகுதி, வினையெச்ச விகுதி, பெயரெச்ச விகுதி ஆகியவைகளை ஏற்று வருபவை.

(ஆ) செய்யாது + இரு + கால விகுதி + இடம் - திணை - பால் விகுதி. (இ) மூன்று கால விகுதிகளும் இடம் - திணை - பால் விகுதிகளும் ஏற்ற வினைமுற்று வடிவம் இல்லை. (செய்கிறேன் இல்லை, செய்தேன் இல்லை) (2)திணை - பாலுக்கும் பொதுவான எதிர்மறை என்பது செய + இல்லை (செய்யவில்லை)
3, மூன்று காலத்துக்கும் உரிய ஒன்றன்பால் வினைமுற்று + இல்லை செய்கிறதில்லை, செய்ததில்லை, செய்வதில்லை).

செயப்பாட்டு வினை என்ற பிரிவில் செயப்பாட்டுக்குத் தனி வினைச் சொல் இல்லை என்றும் செயவென் எச்சத்தோடு 'படு' என்ற வினைச் சொல்லைச் சேர்ப்பதால் செயப்பாட்டு வினை உண்டாக்கப்படுகிறது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

கடைசிப்பிரிவான குறைவினைகள் என்பது ஒக்கும், வேணும், மாட்டேன், இல்லை, அல்ல, உண்டு போன்ற எல்லாக்கால விகுதிகளையும் திணை—பால் விகுதிகளையும் ஏற்காத சொற்களை விளக்குகிறது.

3.4.4. தொடர்

நான்காவது இயலான தொடரியல் ஆறு பிரிவுகளைக் கொண்டுள்ளது. முதல் பிரிவான தொடரின் கட்டமைப்பில் தமிழ்மொழி சொற்சுருக்கம் உடையமொழி என்று 'போகத் தக்கதாக' என்பதைப் 'போக' என்றும் 'ராயன் என்கிற நாமத்தைக் கொண்டிருக்கிறவன்' என்பது 'ராயன் என்பவன்' என்றும் குறிப்பிடுகிறது மேலும் வேற்றுமை உருபுகளையும் அவைகளைத் தொடர்களில் பயன்படுத்தும் முறைகளையும் எட்டுவிதிகள் மூலம் விளக்கியுள்ளார். 'பெயர்' என்ற இரண்டாவது பிரிவில் பெயர்ச் சொற்களில் தொடரடுக்கு (syntagmatic relation) பற்றிய ஆண்பால் பகுபதப் பெயர்கள் (Appellative nouns of men) பற்றி விரிவாகவும் விளக்கியுள்ளார். பெயரடியாகப் பிறக்கும் ஆக்கப் பெயர்கள் பற்றிய குறிப்புகள் சில காணப்படுகின்றன.

1. காறன் என்பது பரவலாகவும் (சீட்டுக்காறன்)—ஆன் என்பது சிறப்பாகவும் பயன்படுத்தப்படுகின்றன (ஊரான்).

2. வேறுபல் விதமாகவும் பகுபதப் பெயர்கள் உண்டாக்கப்படுகின்றன. ஆங்காரம்→ஆங்காரன் ஆங்காரி; உதாரம்→ உதாரன்—உதாரி; அழகு—அழகன், அழகி

3. வினையாலணையும் பெயர்களை வினையிலிருந்து உண்டாகும் பகுபதப் பெயர் என்று குறிப்பிடப்பட்டுள்ளார்.

வினையன் (verbals) என்ற இன்னொருவகைப் பெயர் இருக்கிறது என்றும் குறிப்பிட்டுள்ளார். செய்கிறது, படிக்கிறது/படித்தல் / படிப்பு ஆகியவை இந்த வகையில் அடங்கும்.

பெயர் வினையன்கள் (Noun verbals) என்று செய்கை, இருக்கை என்ற வடிவங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. படிப்பு, கடுப்பு என்பவை வினை ஆற்றல் இழந்தவை என்று கூறுவது பொருத்தமானதே. 'படிப்பது' என்ற பெயர் வினைகள் வினை ஆற்றலைத் தக்கவைத்திருக்கிறது என்றும் சுட்டிக்காட்டப் பட்டுள்ளது.

மூன்றாவது பிரிவு வினையின் பயன்பாட்டை விளக்குகிறது. நான்காவது பிரிவு சில துணை வினைகளையும் ஐந்தாவது பிரிவு செயவென் எச்சத்தின் தொடரியல் பயன்பாட்டையும், ஆறாவது பிரிவு இடைச் சொற்களையும் வருணிக்கிறது.

### 3.4.5 சொற்களஞ்சியம்

எண்ணுப்பெயர்கள், அவைகளின் தொடரியல் பயன்பாடு, அளவுப்பெயர்கள், முறைப்பெயர்கள். நாள், மாத —ஆண்டுப் பெயர்கள் திசைப்பெயர்கள் (particles) ஆங்கில ஒரு நிலைச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களின் பட்டியல் ஆகியவை இந்த இயலில் இடம் பெற்றுள்ளன.

### 3.5.1. இலக்கண உருவாக்கம்

இலக்கணம் என்பது மொழித்தரவுகளைத் திரட்டி மொழியின் கட்டமைப்பைப் பொதுமைப்படுத்தி விளக்குவது என்று ஒரு வகையில் கூறலாம். எனவே இலக்கணத்தை அந்த இலக்கண ஆசிரியர் தேர்ந்தெடுத்த தரவுகளின் தன்மை (மொழிப்பணி)—அவைகளை இலக்கணப்படுத்திய முறை (மொழியியல் பணி) என்று இரண்டு விதமாக ஆராயலாம்.

பெஸ்கி கொடுந்தமிழுக்கு இலக்கணம் எழுதினாலும் கொடுந் தமிழ் வழக்குகளை இகழ்ந்து, செந்தமிழ் வழக்குகளைப் புகழ்ந்து ஏற்றுக் கொண்டது மேலே (3.2.2, 3.2.3 பார்க்க) விளக்கப்பட்டது. அவர் தேர்ந்தெடுத்த தரவுகள் வழக்கில் இல்லாதிருப்பதை தெ. பொ. மீனாட்சிசுந்தரம் (1981) ஆங்காங்கே எடுத்துக்காட்டிச் சென்றுள்ளார். இலக்கண உருவாக்க நோக்கில் பார்க்கும்போது அவைகளில் சிலவற்றைத் தவறாகப் புரிந்துகொண்டதால் ஏற்பட்டவை என்றும் வேறு சிலவற்றை மொழியிலுள்ள அமைப்புக் குறையை உணராமல் பொதுமைப்படுத்தியதால் ஏற்பட்டது என்றும் இரண்டு வகைப்படுத்தலாம். பின்னதற்கு மரபு இலக்கணங்களிலும் சான்று உண்டு என்பது பிற்பகுதியில் எடுத்துக்காட்டப்படும்.

### 3.5.1. தரவுத் தவறுகள்

1. ரகரத்தின் வடிவத்தை விளக்கும் போது றகர உதாரணம் கொடுத்தது (3.7) அர்த்தம் என்பதற்கு அற்தம் என்ற வடிவம் கொடுத்தது.

2. பெண்டு, சம்மனசு ஆகிய இரண்டு பெயர்ச் சொற்களின் பன்மை வடிவம் பெண்டுக்கள்; சம்மனசுக்கள் அல்ல. பெண்டுகள், சம்மனசுகள் என்பது தான் (41,48) (மீனாட்சிசுந்தரம், 1961 : 201).

3. அன்ன, இன்ன ஆகிய இரண்டு சொற்களும் முறையே; அந்த, இந்த என்ற பொருளை உணர்த்துபவை அல்ல (49.61) மாறாக அப்படிப்பட்ட, இப்படிப்பட்ட என்ற பொருள் உடையவை (மீனாட்சிசுந்தரம் ப. 199).

4. 'சொல்லத் தக்கதாக வந்தேன்' என்பதும் 'சொல்லத்தக்க வந்தேன்' என்பதும் ஒரே பொருள் உடையவை (86.108). இவை பேச்சு வழக்கிலோ, எழுத்து வழக்கிலோ காணப்படவில்லை.

5. நாட்களைப் பொதுவாகக் குறிப்பதற்குக் கிழமை, வாரம் என்ற இரண்டு சொற்களும் பயன்படுத்தப்படுவதாகக் குறிப்பிட்டு ஏழு நாட்களைக் கொண்ட காலக்கட்டத்தைக் குறிக்கப் பொதுப் பெயர் இல்லை என்று பெஸ்கி கூறியுள்ளார் (189.223) கிழமையைக் குறிக்க வாரம் என்ற சொல் தெலுங்கிலும், வடமொழியிலும் தமிழில் சிலப்பதிகாரத்திலும் (23.125) வழங்கப்படுகிறது. தற்காலத் தமிழில் 'வாரம்' என்பது ஏழுநாள் கொண்ட

காலத்தைக் குறிக்கப் பயன்படுத்துவதைப் போலவே பதினெட்டாம் நூற்றாண்டிலும் கையாளப்பட்டிருக்க வேண்டும்.

கீழ்க்காணும் இரண்டு தவறுகளும் இலக்கண உருவாக்கக் கோட்பாட்டைப் புலப்படுத்துபவையாக உள்ளன: அதாவது இலக்கண ஆசிரியர்கள் தாம் தொகுத்த தரவுகளின் அடிப்படையில் முதலில் இலக்கண விதிகள் அமைத்துத் தருவார்கள். பின்னர் அந்த அமைப்பு ஒழுங்கு அடிப்படையில் சில அமைப்புக் குறை சொல்லெழுத்திலும் வடிவநிலையிலும் இருந்தால் தரவுகள் தங்களுக்குக் கிடைக்கவில்லையென்று கருதி அவைகளையும் படைத்து இலக்கண விதிகள் அமைத்து விடுவார்கள். இதை இலக்கண ஒப்புமையாக்கம் என்று கூறலாம். இதனால் இலக்கணம் வருணனை நிறை (Descriptive adequacy) உடையதாகக் கருதப்படும். (விளக்கத்துக்குச் சண்முகம், 1980).

கொடுந்தமிழ் இலக்கணத்தில் காணப்படுகிற இரண்டு தரவுத் தவறுகள் இந்த வகையில்—இலக்கண ஒப்புமையாக்கப் பணியில் ஏற்பட்டிருக்கலாம் என்று நினைக்கத் தோன்றுகிறது.

1. பண்பு விகுதியான—மை என்பது பெயர்ச் சொற்களிலும் (கன்னி—கன்னிமை; ஆண்—ஆண்மை) அடைச் சொற்களிலும் (புது—புதுமை; பொது—பொதுமை) (ஒரு—ஒருமை), நிகழ்கால, இறந்தகாலப் பெயரெச்சச் சொற்களிலும் (படித்த—படித்தமை;* படிக்கிறமை) சேர்க்கப்படும். (177.197). இங்கு நிகழ்காலப் பெயரெச்ச வடிவம் படிக்கின்றமை என்றே காணப்படுகிறது. (மீனாட்சிசுந்தரம், 1961 : 245) எனவே இந்த வடிவம் தவறு. இந்தத் தவறு எப்படி ஏற்பட்டது? இங்குப் பெயரெச்ச வடிவம்—மை ஒற்று வரும் என்ற பொதுவிதி சரியானதே. ஆனாலும் நிகழ்கால வடிவம் -கின்று, -கிறு என்ற இரண்டு மாற்று வடிவங்களை உடையது. பெயரெச்சமாக வரும்போது இரண்டு வடிவங்களும் (படிக்கின்ற, படிக்கிற) உறழ்ச்சியாக வரும் என்றாலும் பண்புப் பெயராக வரும்போது கின்று என்பது மட்டுமே காலவிகுதியாக வரும். அதைப் பெஸ்கி கவனிக்கத் தவறியிருக்க வேண்டும். அதாவது சொல்லியல் விதி சரியானது; உருபொலியன் (சொல்லெழுத்து) விதி தவறானது. எனவே இந்தத் தவறு இலக்கண ஒப்புமையாக்கத்தால் ஏற்பட்டிருக்கவேண்டும்.

2. தமிழில் வினையெச்சங்களில் உடன்பாட்டு வடிவங்களும், எதிர்மறை வடிவங்களும் உண்டு. ஆனாலும் செய்து வினை

யெச்சத்துக்கு மட்டுமே செய்யாது / செய்யாமல் என்ற எளிய சொல்லியல் நிலையிலான எதிர்மறை உண்டு. செய்ய செய்யின் / செய்தால் என்ற இரண்டு வினையெச்சங்களுக்கும் கூட்டு நிலையில் முறையே செய்யாதிருக்க, செய்யாதிருந்தால் / செய்யாதுவிட்டால் என்றே எதிர்மறை வினையெச்சம் + இரு / விடு + வினையெச்ச விகுதி என்ற முறையிலே உண்டாக்க முடியும்.

பெஸ்கி பல எளிய நிபந்தனை எச்சவடிவங்களைக் குறிப்பிட்டுள்ளார். இல்லாததால், அல்லாததால் (82.105) (167.193) செய்யாததால் (115.141) இந்த வடிவங்கள் எல்லாம் வழக்கில் இல்லை (மீனாட்சிசுந்தரம் 1961 : 218, 227.244). எனவே இந்தத் தவறு எப்படி ஏற்பட்டது?

பெஸ்கி செய்து வினையெச்சங்களிலிருந்து எளிய எதிர்மறை (செய்யாது) உண்டாக்க முடிவதைப் போல, செய்தால் உடன் பாட்டு நிபந்தனையெச்சத்திலிருந்து எதிர்மறை வடிவம் வினையடி + எதிர்மறை + நிபந்தனையெச்சவிகுதி என்ற கட்டமைப்பில் இலக்கண ஒப்புமையாக்கம் ஏற்படுத்தியது தவறு. கட்டமைப்பு தவறு என்பதால் அதன் அடியாக உண்டான சொல் வடிவமும் தவறு ஆகிவிட்டது. ஏனென்றால் உண்மையில் எதிர்மறை வினையெச்சம் + விடு/இரு என்ற துணைவினை + நிபந்தனை விகுதி என்பதே சரியான கட்டமைப்பு.

3.5.2. இலக்கணத் தவறுகள்

இலக்கண விளக்கத்தில் ஏற்பட்ட தவறுகள்.

1. தனிஉயிர் தொடரின் முன் மட்டும் என்று கூறியது (2.6). மெய்ஈற்றுச்சொல் உயிர் முதலான சொல்லோடு சேரும்போது உயிர்மெய்யாகிவிடும். உயிரீற்றுச் சொல் உயிர் முதன்மொழிச் சொல்லோடு உடம்படுமெய் பெற்று உயிர்மெய்யாகிவிடும். எனவேதான் தொடரின் முன் மட்டுமே தனி உயிர் வரும் என்று கூறியிருக்க வேண்டும். உயிர்ஒலி வியப்படைச் சொற்கள் வரும் போது தொடருக்குள்ளும் அவருடைய இலக்கணத்திலேயே சான்று காணப்படுகிறது. ஒ, ஒ. இதுக்கோ வழுகிறாய் (148.173). எனவே அளபெடையிலும் தனி உயிர் வரும்.

2. மெய்யொலிகளின் ஒலி மதிப்பை விளக்கும் சொல்லுக்கு முதலிலும் இடையில் இரட்டித்து வரும்போது குரல் இலா ஒலியாக உச்சரிக்கப்படும் என்றே பொதுமைப்படுத்தியுள்ளார். ஆனால் டகரம் மட்டும் இன்னொரு வல்லின மெய்க்கு முன் வரும்

போதும் குரல் இலா ஒலியாக உச்சரிக்கப்படும் என்று மட்டும் கூறியுள்ளார். (4.13) <நட்பு> / natpu / இங்குப் பகரமும் குரல் ஒலியாகவும் உச்சரிக்கப்படும் என்பதும் சுட்டிக்காட்ட வேண்டும். அப்படியே றகரத்துக்குப் பிறகு வரும் வல்லினமும் (சுற்பு) குரல் இலா ஒலியாக உச்சரிக்கப்படும் என்றும் விளக்க வேண்டும்.

3. தகப்பன், அண்ணன், தோழன் ஆகிய மூன்று மட்டும்—மார்விகுதி ஏற்கும் (41.48). இங்குப் பெயர்ச் சொல்லின் இறுதி னகர மெய் கெடும் என்று ஒரு விதி அமைக்க வேண்டும். தகப்பன்+மார்→தகப்பமார், அண்ணன்+மார்→அண்ணமார்; தோழன்+மார்→தோழமார், தாய்+மார்→தாய்மார்.

4. இரண்டாம் வேற்றுமைக்குப் பதிலாக எழுவாய்த் தொடர்கள் பயன்படுத்துகிறார்கள் (91,115) என்பது மிகவும் பொதுவான விதி. செயப்படு பொருள், அஃறிணைச் சொல்லாக இருந்தால் மட்டுமே எழுவாய் வடிவம் பயன்படுத்தப்படும் (மீனாட்சிசுந்தரம் 1961 : 221)

5. 'என்னைச் சாஸ்திரங்களைப் படிப்பித்தான்' என்ற தொடரை எடுத்துக்காட்டி (94.119) வினைச்சொல் நேரடியாக இரண்டு பெயர்களையும் பாதித்தால் இரண்டும் செயப்படு பொருளாகப் பயன்படுத்துவது லத்தீன் மொழியிலும் காணப்படு கிறது என்று குறிப்பிட்டு இதில் கற்பிக்கும் மனிதனைக் குறிக்கும் பெயர் நான்காம் வேற்றுமையாகவும் சிலர் கையாளுகிறார்கள் (எனக்குச் சாஸ்திரங்களைக் கற்பித்தான்) என்றும் அது பாமரத்தனமானது என்றும் 'கண்டிக்கத் தகுந்தது' என்றும் பெஸ்கி கூறியுள்ளார், நான்காம் வேற்றுமை உபயோகிப்பதைப் பாமரத்தனம் என்று ஏன் பெஸ்கி சொல்கிறார் என்று மீனாட்சிசுந்தரம் தெரியவில்லை என்று குறிப்பிட்டுள்ளார் (1961 : 221). இங்கு லத்தீன் மொழிவழக்கு அடிப்படையில் தமிழ் வழக்கு மதிப்பிடப்பட்டுவிட்டது என்று தோன்றுகிறது.

6. 'சொல்லச் செய்தே' (செயவென் எச்சம்+செய்தென் வினையெச்சம்) என்பதும் 'சொல்லியே' என்பதும் (செய்தென் எச்சம்) ஒரே பொருள் உடையவை (120.146) என்பது பொருந்தாது.

நான் சொல்லச் செய்தே செய்யாதே போனாய் = நான் சொல்லியே செய்யாது போனாய் என்பது பெஸ்கியின் கருத்து.

சொல்லச் செய்தே' என்பதற்குச் 'சொல்லும் போதே' (செய்யும். என்ற பெயரெச்சம்+போதே) என்பதே சமமானது.

7. 'இப்போது', 'அப்போது', 'எப்போது' ஆகியவை வினையடை அல்ல; பெயர்ச் சொற்கள்; பெயரைப் போல வேற்றுமை ஏற்பவை. என்ற பெஸ்கி கருத்து (125.149) பொருந்தாது. ஏனென்றால் அவை காலப் பெயர் என்ற முறையில் நான்காம் வேற்றுமை மட்டுமே (இப்போதைக்கு) ஏற்கும், (மீனாட்சிசுந்தரம் 1961 : 229). உண்மையில் இப்போது தவிர ஏனைய இரண்டும் நான்காம் வேற்றுமையும் ஏற்காது. மூன்றும் கால வினையடை (Adverb of time) தான்,

8. 'எங்கு எப்படி, யார், எப்போது ஆகிய உறுதியற்ற சொற்கள் (words of uncertainty)—உம் விகுதி ஒற்று முழுமைப் பொருளை (universal sense) உணர்த்தும் (147.169) என்பார் பெஸ்கி. இவைகளை 'வினாச்சொற்கள்' என்று பொதுமைப் படுத்துவதே சரியானது (மீனாட்சிசுந்தரம் 1961 : 235).

9. முன், பின் (151.176), படி (152.78) ஆகியவை பெயர்ச் சொற்கள் என்பது பொருந்தாது. அவை சில வேற்றுமை உருபுகளை (முன்னால், முன்னுக்கு, சொன்னபடி, சொன்னபடியே) ஏற்று வந்தாலும் கூடுதல் பொருள் தருவதில்லை. அவைகளை வேற்றுமை உருபாகக் கருதுவதை விட இடைச் சொல்லாகக் கருத வேண்டும். முன், பின் போன்றவை அடிச் சொல்லாக வரும் இடைச் சொல் என்று கொள்ளவேண்டும்.

### 3.5.3. வருணனை முறைகள்

பொதுவாகக் கொடுந்தமிழ் இலக்கணம் புடைமாற்று முறையில் பிறமொழியாளருக்குத் தமிழ்மொழி அமைப்பைக் கற்பிக்கும் இலக்கணம் என்பதே அடிப்படையான உண்மை. இங்கு ஒரு இலக்கணக் கூறு கற்பித்த பிறகு அந்த இலக்கணக் கூறிலிருந்து உண்டாகும் பிற இலக்கணக் கூறு விளக்கப்படும். இதன் மூலம் மாற்று வடிவங்களையும் (அடிச் சொற்களின் மாற்று வடிவங்களும்) தனியே விளக்க வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விடும். அப்படி விளக்கும்போது சில இலக்கண உருவாக்கக் கோட்பாடு வெளிப்பட்டுள்ளது. எனவே நிபந்தனை வினையெச்சங்களைப் பெஸ்கி வருணிக்கும் முறையையும் அங்குப் புதைந்துள்ள இலக்கண உருவாக்க கோட்பாடுகளையும் பார்ப்போம்.

நிபந்தனையெச்ச வடிவங்களாகச் செய்யில், செய்தால் என்ற இரண்டு வாய்பாட்டு வடிவங்களைப் பெஸ்கி (115.142—3) விளக்கியுள்ளார். கட்டமைப்பு முறையில் இவைகளை முறையே
1. வினையடி + இல் நிபந்தனையெச்ச விகுதி, என்றும்
2. வினையடி + இறந்தகால விகுதி + ஆல், நிபந்தனை எச்சவிகுதி என்றும் விளக்கலாம்.

பெஸ்கி செய்தால் எனும் வாய்பாட்டு வடிவங்களை இறந்த காலத் தன்மை ஒருமைக்கான முற்று வடிவத்தை அடிப்படையாகக் கொண்டு அதில் உள்ள ஏன் என்பதை—ஆல் என்று மாற்றி வந்தேன்—வந்தால்) உண்டாக்கலாம் என்று சுலபமாக விளக்கி விட்டார். இதனுடைய வன்மை—மென்மைகளைப் பார்ப்போம். செய்தால் என்ற நிபந்தனை எச்சத்தை இரண்டு வகையில் விளக்கலாம். 1 மேலே குறிப்பிட்ட கட்டமைப்பு முறை (வினையடி + இறந்த கால விகுதி + நிபந்தனையெச்ச விகுதி—ஆய் 2. 'செய்து' என்ற வினையெச்சம் + ஆல். கற்பித்தல் இலக்கணம் என்பதாலும் கட்டமைப்பு விளக்கம் பதினெட்டாம் நூற்றாண்டில் பரவலாகப் பயன்படுத்தப்படாததாலும் முதன் முறையைப் பெஸ்கி கையாளவில்லை என்று கூறலாம். இரண்டாவது முறையைக் கையாளுவதே பெஸ்கியின் சிறப்பை ஓரளவு புலப்படுத்துகிறது. 'இன்' என்பதை இறந்தகால விகுதியாக ஏற்கும் வினைச் சொற்களின் இகரம் மட்டும் (ஓடி, பாடி) 'செய்து' என்ற வினையெச்ச வடிவத்தில் இருக்க நிபந்தனையெச்சத்தில்—இன் என்ற வடிவமே (ஓடினால், பாடினால்) இருக்கும். எனவே தான் பெஸ்கி இலக்கண உணர்வுடனேயே மேலே குறிப்பிட்ட இரண்டு முறையையும் பின்பற்றாது வினைமுற்று வடிவத்திலிருந்து நிபந்தனை வினையெச்ச வடிவம் உண்டாகியதாக விளக்கியிருக்கிறார். இது பெஸ்கி தமிழ்மொழி அமைப்பு உண்மை நன்கு உணர்ந்ததைப் புலப்படுத்தும்.

செய்யில் என்ற நிபந்தனையெச்ச வடிவத்தை விளக்க அவரே மூன்று முக்கிய விதிகளும் விலக்கு விதிகளும் அமைத்துள்ளார்.

1. —க்கிறது ஏற்று வரும் வினைகளில்—றது என்பதை நீக்கி—ல்சேர்க்கவும்.

இருக்கிறது—இருக்கில்
பார்க்கிறது—பார்க்கில்

2. அ) —கிறது ஏற்று வரும் வினைகளில் —'கிறது' என்பதை நீக்கி—ஐ சேர்க்கவும்.—கிறது நீக்கிய பிறகு—உ இருந்தால் அதையும் நீக்கவும்.

சொல்லுகிறது—சொல்லில்
காட்டுகிறது —காட்டில்

ஆ) இந்த வகையில்—இனேன் என்பது இறந்தகால விகுதி யாக வரும் வினைச்சொற்களில்—'னேன்' என்பதை நீக்கிவிட்டு—ல் சேர்க்கவும்.

வணங்கிறது—வணங்கினேன்— —வணங்கில்

உண்மையில் இதுவிலக்கு விதியாக இருந்தாலும் விலக்குவிதி அல்ல.ஏனென்றால் வணங்கிறது என்ற நிகழ்கால வடிவம் வணங்கு கிறது என்ற வடிவத்தின் தொகுத்தல் விகாரமே (5 வது பிரிவு). வணங்குகிறது என்பதை நிகழ்கால வினைமுற்று வடிவமாகக் கொண்டால் விதிவிலக்காக அமைக்காமல் 2அவில் அடங்கி விடும். இங்குப் பெஸ்கி முதலிலேயே வணங்குகிறது என்பதே நிகழ்கால வினைமுற்றுவடிவம் என்று கொண்டு விளக்காமல் இரண்டாவது பகுதியாகக் கொண்டு பொது விதியில் அடக்கலாம் என்ற 'தன் இலக்கண உருவாக்கக் கோட்பாடு' பின்னால் விளக்கப்படும் (இ) நெட்டெழுத்துக்குப் பிறகு வரும்—கிறது சொற்களில்—'கிறது' ஐ நீக்கி—கில்சேர்க்கவும்.

ஆகிறது — ஆகில்
போறது<போகிறது—போகில்
காண்கிறது—காண்கில்

இங்குக் 'காண்' என்ற வினையைச் சேர்த்தது பொருந்தாது' ஏனென்றால் அது நெட்டெழுத்தும் ஒரு மெய்யெழுத்தும் உடையது. மேலும்

தின்கிறது—தின்கில்
என்கிறது—என்கில்
உண்கிறது—உண்கில்

என்ற சொற்களும் - கில் விகுதி ஏற்கும். உண்மையில் - கிறது - என்பதற்கு முன் மெல்லெழுத்து உடைய வினைச் சொற்கள் இந்தப் பிரிவில் அடங்கும். எனவே இவைகளைத் தனிப் பிரிவாக அமைக்க வேண்டும்.

## 3·4.4. பொதுக் கோட்பாடுகள்

வணங்கிறது, போறது என்ற நிகழ்கால வினைச் சொற்களை முதலில் குறிப்பிட்டே இலக்கிய வடிவமான வணங்குகிறது, போகிறது என்ற வடிவங்களைக் குறிப்பிடுவதற்குக் காரணம், பேச்சுமொழி வடிவங்களை அடிப்படையாகக் கொண்டே இலக்கண விதி அமைக்க வேண்டும் என்ற இலக்கண உருவாக்கக் கோட்பாடு உடையவர் என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

தொல்காப்பியர் ஒன்பது என்ற எண்ணுப் பெயரைக் குறிக்கத் 'தொண்டு' என்பது அருகிய வழக்கு என்று உணர்ந்ததால், தான் பயன்படுத்தியிருந்தாலும் (தொல் 1358,3) 'ஒன்பது' என்பதே பெருவழக்காக இருக்கிறது என்பதற்காகத் தொண்ணூறு, தொள்ளாயிரம் ஆகிய வடிவங்களுக்குத் தொண்டு என்பதை நிலை மொழியாகக் கொள்ளாமல் 'ஒன்பது' என்பதைக் கொண்டு புணர்ச்சி மாற்றங்கள் உடையதாக விளக்கிப் பிற்காலத்தில் பிறருடைய பழிப்புக்கும் கேலிக்கும் ஆளாகி விட்டார். அதாவது இலக்கண ஆசிரியனுக்கு எளிமையாக இருக்கிறது என்பதை விட மொழியைப் பேசுபவர்களின் மனநிலையை அல்லது பேச்சு மொழியின் அடிப்படையைக் கருத்தில் கொண்டே இலக்கணவிதி அமைக்கவேண்டும் என்ற இலக்கண உருவாக்கக் கோட்பாடு இங்குப் புதைந்துள்ளது என்பது தெளிவாகிறது.

பெஸ்கி, மொழி அமைப்பு முழுவதும் தருக்கமுறையாக அமையாதது என்பதையும் அமைப்பு சிக்கலானது என்பதையும் உணர்ந்திருக்கிறார்.

'ஆள் என்பதன் பன்மை வடிவம் ஆள்க்கள்; நாள்—நாள்க்கள். ஆனால் வாள் என்பதன் பன்மை வடிவம் வாள்க்கள் அல்ல; பொது விதிப்படி வாள்கள் என்பதுதான். இங்கு எல்லாவற்றிலும், வழக்கே விதியை நிர்ணயிக்கிறது (In all these, customs supplants the rule) என்பதே அவர் கருத்து (41,48).

இங்கு மொழி அமைப்பு தருக்க நெறியில் அமையவில்லை என்பதோடு வழக்கை ஒட்டியே இலக்கணம் அமைக்கவேண்டும் என்று கூறியது மொழியின் இயல்பையும் இலக்கணத்தின் இயல்பை யும் பெஸ்கி நன்கு உணர்ந்தவர் என்பதைப் புலப்படுத்திவிடுகிறது.

'கால விகுதிகளை விளக்கும்போது விகுதிகளின் முதல் வடிவத்தைச் (First form of the tenses) கண்டுபிடிப்பது கடினம், அந்த வடிவத்திலிருந்தே விதிகளைப் பொருத்திச் சரியான வடிவம்

காணவேண்டும். என்று இன்னொரு இடத்தில் (52.69) கூறுவதில் இரண்டு உண்மைகள் அடங்கியுள்ளன.

1. ஒரு உருபனுக்குப் பல மாற்று வடிவங்கள் இருந்தால் ஒன்றை அடிப்படை வடிவமாக (அவர் கருத்துப்படி முதல் வடிவம்) கொண்டு பிற மாற்று வடிவங்களைச் சில விதிகள் மூலம் விளக்குவது.

2. அடிப்படை வடிவம் கண்டுபிடிப்பது கொஞ்சம் கடினமான பணி. இந்த இரண்டும் மொழியியலில் அடிப்படை கோட்பாடுகளாக இன்று ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன என்னும் போது பெஸ்கியின் நுண்மாண் நுழைபுலம் நன்கு வெளிப்படுகிறது.

பொதுவாகக் கொடுந்தமிழ் இலக்கணம் பெஸ்கி தமிழ்மொழி அமைப்பை எவ்வளவு ஆழமாக ஆராய்ந்தார் என்பதைப் புலப் படுத்துகிறது. அவருடைய இலக்கண வருணனை, மொழியியல் என்ற தனித் துறையாக வளராத காலத்தில் மொழியின் இயலை - பண்பை எவ்வளவு நுட்பமாக உணர்ந்திருக்கிறார். என்பதைப் புலப்படுத்துகிறது. எனவே இன்னாசி (1984.64) 'தமிழ் மொழியின் தற்கால மொழியியற் கொள்கைகளைக் கூர்ந்து நோக்கின் அடிகளாரைத் தமிழ் மொழியியல் முன்னோடி எனக் கூறுவதற் கான வாய்ப்புக்கள் உள்ளன, என்று கூறியது பொருத்தம்.

மரபு இலக்கண அடிப்படையில் தொன்னூல் விளக்கத்தை அமைத்தாலும் அங்கும் வருணனை மொழியியலின் முன்னோடியாகப் பல புதுக்கோட்பாடுகளை வெளிப்படுத்தியது ஐந்தாவது இயலில் விளக்கப்படும்,

# செந்தமிழ் இலக்கணம்

## 4.1. முன்னுரை

பெஸ்கியின் 'செந்தமிழ் இலக்கணம்' லத்தீன் மொழியில் 13-9-1730இல் எழுதிமுடிக்கப்பட்டு 1822இல் ஆங்கில மொழி பெயர்ப்புடன் அச்சிடப்பட்டது. அதன் இரண்டாம் பதிப்பு 1917 இலும் மூன்றாம் பதிப்பு 1974இலும் (தமிழியல் ப.4) வெளியிடப் பட்டுள்ளது. இங்கு இரண்டாம் பதிப்பே பயன்படுத்தப்பட் டுள்ளது.

ஆங்கிலப்பதிப்பில் 'A Grammar of the High dialect of the Tamil language termed as Shentamil to which is added an introduction to poetry' என்ற தலைப்பு காணப்படுகிறது. அதாவது 'செந்தமிழ் என்ற தமிழின் உயர்வழக்குக்குரிய இலக்கணத்தோடு தமிழ்ச் செய்யுளுக்கு ஒரு அறிமுகமும் இணைக்கப்பட்டுள்ளது' என்று பொருள்.

## 4.2. ஆசிரியரின் முன்னுரை

கொடுந்தமிழ் இலக்கணம், செந்தமிழ் இலக்கணம் ஆகிய இரண்டு நூல்களிலும் பெஸ்கியின் முன்னுரை பதிப்பிக்கப் பட்டுள்ளன. அவைகளில் கொடுந்தமிழ், செந்தமிழ் ஆகியவைகளின் விளக்கம், தமிழ்க்கல்விநிலை, தமிழ் அறிஞர்களின் பண்பு; தமிழ் இலக்கண வரலாறு போன்று பல செய்திகள் காணப்படுகின்றன.

### 4.2.1. 'கொடுந்தமிழ்' 'செந்தமிழ்' விளக்கம்

தமிழில் இரண்டு கிளைமொழிகள் (Dialects) இருக்கின்றன. அவையாவன : 1) உயர் வழக்கு (High dialect) 2) பொது

வழக்கு (Common dialect). சிலர் உயர்வழக்கைச் செய்யுள் வழக்கு என்று குறிப்பிடுவது சரியில்லை; ஏனென்றால் செய்யுளுக்கான உரையான உரைநடை அந்த உயர்வழக்கில் எழுதப் பட்டிருக்கிறது. அதாவது உயர்வழக்கில் செய்யுளும் உரைநடையும் உள்ளன. தமிழர்கள் உயர்வழக்கைச் செந்தமிழ் என்றும் பொது வழக்கைக் கொடுந்தமிழ் என்றும் குறிப்பிடுகிறார்கள்.

### 4.2.2. பிறகருத்துகள்

1. செந்தமிழிலிருந்து கொடுந்தமிழ் தோன்றியது. செந் தமிழின் கொச்சை வழக்குகளே பொதுத்தமிழ் வழக்குகள்.

(இது இன்று பாமரத்தனமான (Popular) கருத்தாகக் கருதப் படுகிறதே தவிர மொழி அறிவியல் அடிப்படையில் ஒத்துக் கொள்ளப்படவில்லை; காரணம் பேச்சுவழக்கில் காணப்படும் சில வழக்குகள் செந்தமிழ் வழக்குகளைவிட வரலாற்றுப்பழமை உடையவை. சான்றாகப் பேச்சுவழக்கில் காணப்படும் 'உசிர்' என்ற வடிவமே செந்தமிழ் வழக்கில் காணப்படும் 'உயிர்' என்ற வடிவத்தை விட வரலாற்றுப்பழமையானது என்று திராவிட மொழி ஒப்பிலக்கணம் (P. S. Subrahmanyam; 1983: 331) கூறுகிறது. எனவே 'உயிர்' என்ற வடிவத்திலிருந்து 'உசிர்' என்ற வடிவம் தோன்றியதாகக் கருதமுடியாது.)

2, செந்தமிழ் படிப்பது கடினமான செயல். ஆனால் கடின மாக முயன்று படிப்பதற்கு ஏற்ற பலன் உண்டு.

3. தாய்மொழிக்காரர்களிலும் ஒருசிலரே இந்த உயர் வழக்கைக் கற்றவர்கள். அதன் சில அடிப்படை உண்மை தெரிந்த வர்கள் கூட தமிழர்களால் மதிக்கப்படுகிறார்கள். செய்யுளை மேற்கோளாகக் காட்டுபவர்கள் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரியவர்களாகக் கருதப்படுகிறார்கள். ஆகையால் வெளிநாட்டார் செந்தமிழைக்கற்றால் அவர்களால் பெரிதும் மதிக்கப்படுவார்கள். தாங்கள் மதிக்கிறவர்கள் சொல்லும் கருத்துகளையும் - அறிவுரை களையும் கவனமுடன் கேட்பார்கள். இந்தக் காரணம் ஒன்றுக்காக வாவது வெளிநாட்டார்கள் செந்தமிழைப் பயிலவேண்டும்.

4. செந்தமிழில் எழுதப்பட்ட நூல்கள் பெரும்பான்மையும் செய்யுள் வடிவத்திலேயே உள்ளன. சமயப்பிரச்சாரகர்கள் இலக்கிய மேற்கோள் காட்டுவது மரபுதான். மேலும் தமிழகத்தில் அதற்கு அதிகமதிப்பு உண்டு, ஏனென்றால் தமிழர்கள் எப்

பொழுதும் பகுத்தறிவுக்கு முக்கியத்துவம் கொடுப்பதைவிட சான்றோரின் சொல்லுக்கு மதிப்பு கொடுப்பார்கள். ('The natives are Swayed not so much by reason as by authority'— செந்தமிழ் இலக்கணம் ப, 9)

5. தமிழில் இறைவனுடைய பெருமையைக் கூறும் நூல்களும் அறக்கருத்துகள் அடங்கிய நூல்களும் நிறைய உள்ளன. அவைகளை வெளிநாட்டார் எடுத்துச்சொல்லும் போது அவருடைய சமயக் கருத்து பற்றிய எதிர்வாதங்கள் அவர்களுடைய இலக்கியக் கருத்துகளுக்கே மாறுபட்டிருப்பதை உணர்ந்து மனம் மாறுவார்கள்.

### 4.2.3. மாறுபாடுகள்

கொடுந்தமிழ் இலக்கணமும் செந்தமிழ் இலக்கணமும், அவைகளின் தரவுகளில் வட்டும் அல்லாமல் அவை பற்றிய மொழி உணர்விலும் இலக்கண வருணனையிலும் மாறுபடுகின்றன என்பது சுட்டிக்காட்டத்தகுந்தது.

### 4.2.2.1. மொழி அமைப்பு மாறுபாடுகள்

முதலில் செந்தமிழ் நூலைக் கற்கவேண்டிய முறை பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழின் உயர் வழக்கைக் கற்றுக்கொள்வதற்கு உதவியாகவும் கொடுந்தமிழ் இலக்கணத்தைப் படித்துப் பொது வழக்கைத் தெரிந்து கொண்ட பிறகு படிக்கவேண்டிய நூலாகவும் 'செந்தமிழ் இலக்கணம்' எழுதப்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டுள்ளதோடு நூலுக்குள் கொடுந்தமிழ் இலக்கணத்தைக் குறிப்பிட்டு அதிலிருந்து கூடுதலாகத் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகள் என்றும் பல இடங்களில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

கொடுந்தமிழில் குறிப்பிடாதவை எழுத்துச்சாரியைகள் (1.15), புதிய புணர்ச்சி விதிகள் (5.21,) செயவென் எச்சம் பற்றிய புதிய செய்திகள் (37.77) பெயரெச்சம் பற்றிய கூடுதல் செய்திகள் (39.79) என்று ஆங்காங்கே அவரே நூலுக்குள் சுட்டிக்காட்டியுள்ளார். தமிழ் இலக்கணங்களில் குறிப்பிட்டுள்ள செய்திகள் என்றும் (2.16) செந்தமிழின் சிறப்புப் பண்பு (34.73) என்றும் சில இடங்களில் குறிப்பிட்டுள்ளார். பல இடங்களில் நன்னூல் சூத்திரங்களை எடுத்துக்காட்டியதோடு (9,30,31,33; 42, 82) சொல்லதிகாரத்தின் இறுதியில் (46.87) 'பிற்சேர்க்கை' என்ற தலைப்பில் 'இதுவரை

விளக்கியது நன்னூலில் பவணந்தி 456 சூத்திரங்களில் விரிவாகக் கூறப்பட்ட செய்திகளின் சுருக்கம்' என்றும் கூறிப்புதிய சில செய்திகளைக் குறிப்பிட்டுள்ளார். அவை பின்னால் விளக்கப்படும். எனவே செந்தமிழ் இலக்கணத்தின் எழுத்து, சொல் அதிகாரங்கள் நன்னூலைத் தழுவி எழுதப்பட்டது என்பது தெளிவாகிறது.

செந்தமிழ் என்பது உயர்வழக்கு என்பது மட்டும் அல்லாமல் பழையகால இலக்கிய வழக்கு என்று கொள்வதே பொருத்தமாக இருக்கும். எனவேதான், பழைய இலக்கியத்தில் மட்டுமே காணப்படும் உகரச்சுட்டும் (19.69), ஒற்றளபெடையும் (3.19), செய்பு, செய்யூ போன்ற வினையெச்சங்களும் (43.84) செந்தமிழ் இலக்கணத்தில் விவரிக்கப்பட்டுள்ளன, ஆகவே பெஸ்கியின் செந்தமிழ்/கொடுந்தமிழ் என்ற மாறுபாடு இன்று மொழியியலாளரால் பேசப்படும் இரட்டை வழக்கை (Diglossia) குறிக்காது. ஏனென்றால் இரட்டை வழக்கு என்பது ஒரே காலக்கட்டத்தில் ஒருவரே பயன்படுத்தும் இரண்டு வித வழக்குகளை மட்டும் குறிக்கும்.

மொழி அமைப்பில் செந்தமிழுக்கும் கொடுந்தமிழுக்கும் பெஸ்கி ஆங்காங்கே சுட்டிக்காட்டும் மாறுபாடுகள்.

| | பொருள் | இடம் | செந்தமிழ் | கொடுந்தமிழ் |
|---|---|---|---|---|
| 1 | எழுத்து | 1.15 | — | இரந்த எழுத்து |
| 2 | ,, | ,, | ஆய்தம் | — |
| 3 | ,, | 2.17 | | ர,ல,ட,ய ஆகியவை சொல்லுக்கு முதலில் வரும் |
| 4 | ,, | 2.19 | உயிரளபெடை ஒற்றளபெடை | — |
| 5 | ஆறாம் வேற்றுமை | 9.34 | அது | உடைய |
| 6 | 7 ஆம் வேற்றுமை | 9.35 | கண் | இல் |
| 7 | குறிப்புவினை | 14.45 | எல்லா இடம் பால் விகுதி ஏற்கும் | — |
| 8 | சிறப்பு ஒருமை | 23.62 | — | உண்டு |
| 9 | நிகழ்கால விகுதி தொகுத்தல் விகாரம் | 26.67 | இல்லை (வணங்குகிற) | உண்டு (வணங்கிற) |

| | | | | |
|---|---|---|---|---|
| 10 | இறந்த காலம் அளபெடை வடிவம் | 31.70 | உண்டு (நிறீஇ- நிறுத்தி தழீஇ-தழுவி) | இல்லை |
| 11 | ஏவல் வடிவம் உகரச்சேர்க்கை | 34.73 | இல்லை (உண், தின், சொல்) | உண்டு (உண்ணு, தின்னு, சொல்லு) |
| 12 | தொழிற்பெயர் | 26.67 | -தல் | கிறது (செய்கிறது) |
| 13 | எதிர்மறை ஏவல் விகுதி | 35.75 | -அற்க (செய்யற்க) | -ஆதே (செய்யாதே) |
| 14 | எதிர்மறை வினையெச்சம் | 43.85 | செய்யாமை | — |

மேலே குறிப்பிட்டபடி செந்தமிழின் சிறப்புப் பண்புகளாக வினையியலின் பிற்சேர்க்கையாகக் குறிப்பிட்டவை : (46.47.87.91)

15 மகர ஈற்றுப்பெயர் நான்காம் வேற்றுமையின் முன் அத்துச் சாரியை பெறாமலும் வரும். சான்று கயம்—கயக்கு. சிந்தாமணி. (பதுமையார் இலம்பகம் 76.)

16 'அறம்' என்ற பெயர்ச்சொல்லிலிருந்து குறிப்புவினை பெயரெச்சம் அமைப்பது. 'அறவியமனத்தார்' (சிந்தா. விசயை மாதேவி துறவு. 264)

17 எதிர்கால விகுதியாக வகரத்துக்குப்பதில் ககரம் பயன்படுத்துவது செய்வேன்—செய்கேன். அடைப்பேன்—அடைக்கேன். என்பேன்—என்கேன்.

18 செயவென் எச்சம் அகரவிகுதிபெறாமல் உகர விகுதி பெறுவது. எழுக - எழுகு (எந்தைமார்கள் எழுகென்றான்).

19 நியதி வினையெச்சம் செய்தால் வாய்பாட்டுக்குப் பதிலாகச் செய்யின் வாய்பாடு பயன்படுத்துவது - நினைத்தால்—நினைப்பின் ('நினைப்பினும் பணிக்கும் உள்ளம்'—சிந்தாமணி)

20 செய்யா(தார்) என்ற வாய்பாட்டு எதிர்மறை வினையால ணையும் பெயராகச் செய்யலா(தார்) என்ற வடிவத்தைக் கையாளுவது.

சான்று

நினையா—நினையலா

செய்யாதார்—செய்கலாதார் (செயற்கரிய செய்கலாதார்' குறள். 36)

நவிலாதார்—நவிற்றாதார் (சிந்தா)

21 ஆன் என்ற ஆண்பால் விகுதிக்குப் பதிலாக - ஆன என்ற விகுதியை உபயோகிப்பது.

கண்டான்—கண்டான ('கண்டான விராமன்'—
கம்பராமா. அதிகாயன்வதை. 27)

என்றான்—'என்றான (விராவணன்)'—
(கம்பராமா அதிகாயன்வதை)

22 புதிய இடைச்சொற்கள் கையாளுவது.

ந - என்பது சிறப்புப் பொருட்டு என்ற பொருள் உடைய முன்னொட்டு (நன்னூல் மயிலைநாதர் உரையிலே காணப்படுகிறது). இது மெய்யை முதலாக உடைய சொற்களுக்கு முன் வருமொழி மெய் இரட்டித்தும், உயிர் முதன்மொழிச் சொற்களுக்கு முன் வகரம் இரட்டித்தும் வரும்.

| | |
|---|---|
| நக்குடம் | நல்ல குடம் |
| நப்பொருள் | நல்ல பொருள் |
| நல்வகை | நல்ல வகை |
| நல்வமிர்தம் | நல்ல அமிர்தம் |

23 சில விகுதிகள் அசைச் சொல்லாக வெற்றுருபாகப் பயன் படுத்தப்படுவது.

ஆல் - அவனோவெனின் என்பதற்குப் பதிலாக
அவனாலோ வெனின்

ஒரும் - செய்யுளில் அசை நிறைக்கப்பயன்படும் 'அஞ்சுவ
தோரும் அறனே: ஒருவனை அஞ்சிப்பதோருமவர்'
(குறள். 366)

4 2 2·2. வருணனை மாறுபாடு

மொழி அமைப்பு மாறுபடுவதற்கேற்ப இலக்கண வருணனை உத்தியும் மாறியிருக்கிறது. சான்றாகக் கொடுந்தமிழ் இலக்கணத்தில் (54.70) நிகழ்கால வினை முற்று வடிவத்தை அடிப்படை வடிவமாகக் கொண்டு இறந்தகால வடிவம், ஏவல்வடிவம் முதலியன விளக்கப்பட்டுள்ளன. ஆனால் செந்தமிழ் இலக்கணத்தில் (26.67) தல்!த்தல், அல் ஆகிய விகுதி ஏற்று வரும் தொழிற்பெயர் வடிவத்திலிருந்து இறந்தகால வடிவம் உண்டாக்குவது எளிது என்று குறிப்பிடப்பட்டு அப்படியே வருணிக்கப்பட்டிருக்கிறது. சான்று; நீத்தல் - நீத்தேன், நீக்கல் - நீக்கினேன். எதிர்கால வினை முற்றுக்கும் தொழிற்பெயர் வடிவமே அடிப்படையாகக் கொள்ளப்பட்டுள்ளது.

அணிதல்—அணிவேன்

செய்தல்—செய்வேன்
நடப்பல்—நடப்பேன்

### 4.3.2.3. வழிகாட்டி மாறுபாடு

கொடுந்தமிழுக்கும் செந்தமிழுக்கும் உரிய நல்லவழக்குகளாகக் கொள்வதற்குரிய வழிகாட்டி - முன்மாதிரி (model) பற்றியும் பெஸ்கி குறிப்பிட்டிருப்பது அவருடைய மொழிபற்றிய பொது அறிவின் - மொழியியல் அறிவின் ஆழத்தைப்புலப்படுத்துகிறது.

1. பொதுத்தமிழில் சில இலக்கணத் தவறான வழக்குகளும் நடைமுறைக்கு வந்துவிட்டால் சரியானவையாக ஏற்றுக்கொள்ளப் படும்; ஆனால் உயர்வழக்கில் அந்தமுறை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

Custom may Sanction this error (அதாவது குறிப்பு வினையைப் பெயராகப் பயன்படுத்துவது—அடியேன் என்ற குறிப்புவினை பேச்சுவழக்கில் அடியேனை, அடியேனுக்கு என்று பெயராகப் பயன்படுத்தியிருப்பது) in the commmon dialect but it is altogether inadmissible in this என்று செந்தமிழ் இலக்கணத்தில் (14.46) குறிப்பிட்டுள்ளார்.

2. தொழில் அடியாகப் பகுபதப் பெயர்களைப் பொதுந் தமிழில் விருப்பப்படி உண்டாக்கிக் கொள்ளலாம்.

வாணிகம் — வாணிகன்
செல்வு — செல்வினன் 'பயணி'
விரைவு — விரைவினன்
ஓதுதல் — ஓதினன், ஓதுவான்
காத்தல் — காத்தவன், காப்பவன்

தொழிற் பெயரிலிருந்து உண்டான சொற்களைப் படர்க்கை வினைமுற்றாகவும் பகுபதப்பெயராகவும் கொள்ளலாம். (செ. ந. 11.41) நன்னூலில் ஓதுவான் என்பது வினைமுற்றாக இல்லாமல் பகுபதப் பெயராக இருந்தால் அங்குள்ள ஆகாரம் அதிக அங்காப்புடன் (more open) உச்சரிக்கப்படும் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது செந்தமிழ் இலக்கணத்தில் (11.46). இது நன்னூல் சூத்திரத்திலோ (276.286) உரையிலோ (மயிலைநாதர், சங்கர நமசிவாயர், சிவஞானமுனிவர்) காணப்படவில்லை. எனவே சொல்லாக்கத்துக்குச் செந்தமிழில் கட்டுப்பாடு அதிகம் என்று பொருள்.

3. செந்தமிழில் மகரமும் னகரமும் உறழ்ந்து வரும் (அறம்~அறன்; மனம்~மனன்). இது பொது விதி அல்ல; இங்குப் பழமையான ஆசிரியர்களுடைய வழக்கத்தைப் பின்பற்ற வேண்டும். (செ. த. இ. 24.65)

4. ஈரசைச்சொற்களில் முதல் நெடிலாக இருந்தால்—அம் ஈற்றுச்சொற்கள் உகரமாக மாறும்.

யோகம் — யோகு
நடுக்கம் — நடுக்கு (நடுக்குற்ற காட்சி—குறள்)

சில சொற்களில் — அம் கெட்டுவிடும்.

நீலம் — நீல் (நீலுண்ட)
காமம் — காம் (காமுற்ற)

பல அசைச்சொற்களிலிலும்—அம் கெடும்.

உலகம் — உலகு

இதற்கும் பழைய ஆசிரியர்களின் வழக்குகளை வழிகாட்டியாகக் கொள்ள வேண்டும் (செ. த. இ. (24.65).

5. வினைச்சொற்களிலும் பழைய நூலாசிரியர்களின் வழக்குகளையே பின்பற்ற வேண்டும் என்றும் அவர்களும் இலக்கண மீறல்களாகச் சிலவற்றைப் பயன்படுத்தியுள்ளார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார் (46.88)

இங்குக் கொடுந்தமிழில் பேச்சுமொழியும் செந்தமிழில் இலக்கிய வழக்கும் சிறந்த வழிகாட்டிகளாக அமையும் என்பதன் பொருள் என்ன? பேச்சுமொழியில் சுதந்திரம் அதிகம்; ஏனெனில் அதற்குப் பேசுபவனின் உணர்வே முக்கியம். இலக்கிய மொழியில் கட்டுப்பாடு உண்டு. ஏனென்றால் அங்குப் பயன்படுத்துபவனின் அறிவு—இலக்கிய அறிவே முக்கியம். இது இரண்டு வகைப்பட்ட மொழியின் உள்ளார்ந்த மாறுபாட்டைப் பெஸ்கி உணர்ந்திருக்கிறார் என்பதோடு அவை பற்றிய தமிழ்மக்களின் உணர்வையும் உணர்ந்திருக்கிறார் என்பதைப் புலப்படுத்துகின்றது.

### 4,3.3. இலக்கண வரலாறு

கல்விச் சூழலின் ஒரு பகுதியாகவே பெஸ்கி இலக்கண வரலாற்றைக் குறிப்பிட்டுள்ளார். சுருக்கமாகவேனும் தனக்குத் தெரிந்த இலக்கணங்கள் பற்றிய விவரங்களைக் குறிப்பிடுவதன் மூலம் இலக்கண வரலாற்றுக்குப் பதினெட்டாம் நூற்றாண்டிலேயே அடிகோலிய பெருமை பெஸ்கியைச் சாருகிறது. இது

அவருடைய அறிவுணர்வை - குறிப்பாக வரலாற்றுணர்வைப் புலப்படுத்தும். அவர் குறிப்பிடும் இலக்கண வரலாறு :

'செந்தமிழுக்கு முதன்முதலில் இலக்கணம் எழுதியவர் அகத்தியர். அவரே தமிழை உண்டாக்கியவராகக் கருதப் படுகிறார். அவரைப்பற்றி அபத்தமான பல கதைகள் வழங்கு கின்றன. அவர் தென்பகுதியில் உள்ள பொதுகை மலையில் வாழ்ந்ததால்தான் தமிழுக்குத் தென்மொழி என்று ஒருபெயர் ஏற்பட்டது. அவர் இயற்றிய நூலிலிருந்து சில இலக்கண விதிகளே பிற ஆசிரியர்களால் மேற்கோளாகக் காட்டப்படுகின்றன. அவருடைய முழு நூலும் கிடைக்கவில்லை. அவருக்குப்பிறகு பலர் தமிழுக்கு இலக்கணம் எழுதினார்கள். அவர்களில் பல்காய னார், அகையனார், நத்தத்தனார், மயேசுரர், காத்தியாயனர்' அவினயனார், காக்கைப்பாடினியார் குறிப்பிடத்தகுந்தவர்கள்' இவர்கள் எழுதிய நூல்களும் மறைந்துவிட்டன. இன்று கிடைக்கும் நூல்களில் அவர்களின் சூத்திரங்கள் மேற்கோளாகக் காட்டப் பட்டிருப்பதைக் கொண்டே அந்த நூல்களைப் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது. தொல்காப்பியனார் என்பவரால் எழுதப் பட்ட ஒரு பழைய நூல் இன்று நமக்குக் கிடைக்கிறது. அது கரடு முரடானதாகவும் புரிந்து கொள்ள முடியாததாகவும் (It is so obscure and unintelligible' —செந்தமிழ் இலக்கணம் ப. 10) இருப்பதால் பவணந்தி செந்தமிழுக்கு இலக்கணம் எழுத முன் வந்தார். தொல்காப்பியனார் தம்முடைய இலக்கணத்தில் 'என்மனார் புலவர்', 'மொழிமனார், புலவர்' என்ற தொடர்களை அடிக்கடி பயன்படுத்தியுள்ளார் என்று பெஸ்கி செந்தமிழ் இலக் கணத்தில் (32.47) தொல்காப்பியத்தை ஒரு இடத்தில் நேரடியாகக் குறிப்பிட்டுள்ளார்.

'பவணந்தி அவருடைய நூலுக்கு 'நன்னூல்' என்று பெயரிட் டிருக்கிறார். அது பிரெஞ்சு மொழியின் 'Belles lettres' என்ற தொடரோடும் லத்தீன் மொழியின் Littre humaniores என்ற தொடரோடும் பொருளில் தொடர்பு உடையது. தமிழகத்தில் எல்லோருக்கும் நன்னூலின் பெயர் தெரிந்திருந்தாலும் மிகச்சிலரே அதைப்படித்திருக்கிறார்கள். பவணந்தி எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்தாகப்பிரித்துள்ளார். இருந்தாலும் அவர் எழுத்து, சொல் என்ற இரண்டு பகுதிக்கே விரிவான இலக்கணம் எழுதியிருக்கிறார். பவணந்தி இறந்தபிறகு நாற்கவிராசநம்பி என்பவர், 'பொருள்' பற்றியும் அமிர்தசாகரர் என்பவர் 'யாப்பு'

பற்றிக் காரிகை என்ற நூலையும், தண்டி என்பவர் 'அணி' பற்றித் தண்டியலங்காரம் என்ற நூலையும் எழுதியுள்ளார்கள்.' இதுவே பெஸ்கி குறிப்பிடும் இலக்கண வரலாறு.

கடந்த இரண்டரை நூற்றாண்டு கால ஆய்வால் யாப்பருங் கலக்காரிகை 10ஆம் நூற்றாண்டிலும் தண்டியலங்காரம் 12ஆம் நூற்றாண்டிலும் நம்பியகப்பொருள் 12ஆம் நூற்றாண்டு இறுதியிலும் நன்னூல் 13ஆம் நூற்றாண்டிலும் எழுதப்பட்டன என்று இன்று நாம் அறிந்திருக்கிறோம். அதாவது அவர் சொன்ன கால வரிசை இன்று ஏற்றுக்கொள்ளப்படவில்லை. வீரசோழியம், இலக்கண விளக்கம் போன்ற பிறநூல்களின் செல்வாக்கு தொன்னூல் விளக்கத்தில் காணப்பட்டாலும் அவைகளை இங்கு ஏன் குறிப்பிடவில்லை என்று தெரியவில்லை. எப்படியானாலும் இலக்கண வரலாறு, நூல்கள் எழுதுவதற்கான காரணம் ஆகியவை களையும் பற்றி முதன்முதலில் நினைத்துப்பார்த்தவர் என்ற முறையில் அது வரலாற்றுச் சிறப்பு உடையது.

பல இலக்கியங்களை மேற்கோளாகக் காட்டியுள்ளாரே தவிர அங்கு இலக்கியவரலாறு எழுதும் முயற்சி ஏன் மேற்கொள்ள வில்லை என்று தெரியவில்லை. திருக்குறள், சிலப்பதிகாரம், நாலடியார், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், நளவெண்பா ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டியுள்ளார். அதனால் சங்க இலக்கியம் பதினெட்டாம் நூற்றாண்டில் அதிகம் பயிற்சியில் இல்லை என்பது தெரிகிறது.

### 4.3.4. நூல் அமைப்பு

செந்தமிழ் இலக்கணம் இரண்டு பெரும் பிரிவாகப் பிரிக்கப் பட்டு முதல் பிரிவில் எழுத்து, பெயர், வினை என்று மூன்று இயல்கள் உள்ளன. இரண்டாவது பிரிவில் யாப்பு (அப்படி பொதுத்தலைப்பு கொடுக்காமல் அசை, சீர், தளை, அடி என்று நான்கு உட்பிரிவுகளைக் குறிப்பிட்டுள்ளார்): பா (அதாவது பாவகை), இனம் (பாவினம் தாழிசை, துறை, விருத்தம்), செய் யுளின் பண்பு (The Art of Tamil poetry) அவையாவன : சொல் தேர்வு (Diction). 2. கற்பனை (Poetic fiction). 3. கடவுள் வாழ்த்து, 4. செய்யுள் வகை (புராணம், காப்பியம், உலா அல்லது மாலை, பரணி, கலம்பகம், அம்மானை, வண்ணம், சிந்து, கூத்து (சிறு நாடகம்), நாடகம் என்ற நான்கு உட்பிரிவு என்று நான்கு இயல்கள் அமைக்கப்பட்டுள்ளன, இங்கு மொழி அமைப்பினை விளக்கும் முதல்பெரும் பிரிவே ஆராயப்படுகிறது.

எழுத்தியலை இரண்டு பிரிவுகளாக—எழுத்து எண்ணிக்கையையும் எழுத்தின் பல்வேறு வகைப்பாடுகளையும் ஒருபிரிவாகவும் புணர்ச்சிமாற்றங்களை இன்னொரு பிரிவாகவும் விளக்கியுள்ளார். இரண்டாவது பிரிவிலே மெல்லினமும் இடையினமும் உடனிலை மெய்மயக்கமாக வரும்போது குற்றெழுத்து மட்டுமே முன்னால் வரும்; நெட்டெழுத்து வராது என்ற மொழி அமைப்பு உண்மையைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

பெயரியல் ஐந்து உட்பிரிவுகளைக் கொண்டது. முதல்பிரிவு சாரியைகள், வேற்றுமை உருபுகள் ஆகியவைகளையும், இரண்டாம் பிரிவு பகுபதப் பெயர்களையும் (Appellative nouns) குறிப்பு வினையாலணையும் பெயர்களையும், மூன்றாவது பிரிவு பெயரடைகளையும் (அவைகளை உரிச்சொல் என்றும் உள்ளே குறிப்பிட்டுள்ளார்), நான்காவது பிரிவு பதிலீட்டுப் பெயர்களையும், ஐந்தாவது பிரிவு பிற்சேர்க்கை என்று சில தொல்வழக்குகளையும் விளக்கியுள்ளது.

வினையியலில் பிற்சேர்க்கையும் சேர்த்து ஆறு உட்பிரிவுகள் உள்ளன. முன்னுரையாக செந்தமிழில் (த)ல் விகுதிசேர்ந்த தொழிற்பெயர்களைப்பற்றிக் கூறிவிட்டு முதல் பிரிவு செய்வினையின் முற்றுவினைகளில் வரும் இடம்-பால் விகுதிகளையும், இரண்டாவது பிரிவு ஏவல்வினை முற்று விகுதிகளையும், மூன்றாவது பிரிவு செயவென் எச்சங்களையும், நான்காவது பிரிவு பெயரெச்சங்களையும், ஐந்தாவது பிரிவு எல்லாவினையெச்சங்களையும் ஆறாவது பிரிவு 'பிற்சேர்க்கை' என்று செந்தமிழின் சிறப்புப்பண்புகளாகப் பெயர்ச்சொற்களிலும் வினைச்சொற்களிலும் காணப்படும் பழைய இலக்கிய வழக்குகளையும் வருணிக்கின்றன.

## 4.4. வருணனை உத்திகள்

செந்தமிழ் இலக்கணமும் மொழிப் பயிற்சி இலக்கண முறை அடிப்படையில் ஒரு இலக்கணக் கூறிலிருந்து இன்னொரு இலக்கணக்கூறு உண்டாவதாக விளக்கப்பட்டுள்ளது. அப்படி விளக்கும் போது வடிவஒற்றுமைக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கப்படும்; பொருள் மாற்றம் ஏற்படுவதைப்பற்றிக் கவனிக்கப்படமாட்டாது. அதனால் இலக்கணவருணனையும் சிக்கலாகிவிடுகிறது.

'செய்யன்மின் என்ற எதிர்மறை ஏவல்பன்மை வினைமுற்று லகர விகுதி பெற்று வரும் தொழிற்பெயரோடு 'மின்' விகுதியைச் சேர்த்து லகர ஈற்றை னகரமாக மாற்றி உண்டாக்கலாம்' (36‘37) என்பது ஒரு விதி

பாடல்—பாடன்மின் விடல்—விடன்மின்
அகலல்—அகலன்மின்

இங்குத் தொழிற்பெயர்ச்சொல்லிலுள்ள —அல் விகுதி உடன்பாட்டு விகுதியாகக் கருதப்படவேண்டும் ஆனால் அது ஏவல் பன்மையாக மாறும் போது எதிர்மறை பொருளை உணர்த்துவதாக மாறிவிடுகிறது. இங்கு வடிவ ஒற்றுமையை மட்டும் கொண்டு பொருள் ஒற்றுமையைப் புறக்கணித்துள்ளதா லேயே செந்தமிழ் இலக்கணமும் மொழிப்பயிற்சி இலக்கணம் என்று கருத வேண்டியிருக்கிறது. செய்யின் என்னும் வாய்பாட்டு நிபந்தனை எச்சம் பழங்காலத்தில் வல்வினையில் பகரமெய் பெற்று வரும் (நினைப்பின் நடப்பின்). எனவே இவை எதிர்கால வடிவத்தி லிருந்து உண்டாவதாக விளக்கப்பட்டுள்ளன (46.89). மேலும் செய்யின் என்ற நிபந்தனை எச்சமும் எதிர்காலத்தை உணர்த்துகி றது என்று இங்குச்சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. இது உண்மைதான் என்றாலும் மெல்வினை நிபந்தனை எச்சத்தில் எதிர்காலம் உணர்த்தும் விகுதி இல்லாததால் (செய்யின், வரின், பாடின்) அந்த விளக்கம் முழுவதும் பொருந்தாமல் போய் விடுகிறது.

எதிர்காலப் பெயரெச்சங்கள் (ஓடும் குதிரை; படிக்கும் புத்தகம்) -உம் ஈற்றில் முடியும் எதிர்கால ஒன்றன்பால் வினை முற்று வடிவங்களால் உணர்த்தப்படுகின்றன என்று முதலில் குறிப்பிட்டு அவை செந்தமிழில் அடையும் மாற்றங்கள் வருணிக்கப்பட்டுள்ளன (39-80).

(1) ஈற்று மகரம் கெடலாம்.

| | | |
|---|---|---|
| வினைமுற்று | — | எச்சம் |
| செய்யும் | — | செய்யு |
| நிமிரும் | — | நிமிரு |

(2) தழுவும் பெயர் உயிர் முதன்மொழிச் சொல்லாக இருந்தால் உகரம் கெடும்.

பரப்பும் — பரப்பு+இரவி பரப்பிரவி
(கதிர்பரப்புமிரவி)
என்பதற்குப் பதிலாகக் கதிர்பரப்பிரவி)

(3) தழுவும் பெயர் உயிர் முதன்மொழிச் சொல்லாக இல்லாவிட்டாலும் உகரம் கெடும்; நிலைமொழியிலுள்ள மெய் 'க' ஈற்றெழுத்தா,க வரும் மெய்யாக இருந்தால் போதுமானது.

நிமிரும்—நிமிரு+கொம்பு>நிமிர் கொம்பு (இங்கு உகரம் சேர்ந்து வந்த ரகரமெய் சொல்லுக்கு ஈற்றில் வரக்கூடிய மெய்களில் ஒன்று).

வாழும்—வாழு+குடி வாழ்குடி

(4) பெயரெச்ச உகரத்துக்கு முன் குறிலை உடைய ஓரசை மட்டும் இருக்குமானால் உகரம் கெடாது.

வரும்—வரு

*வர் என்று மாறாது. ஏனென்றால் முன்னால் ஒரு அசை மட்டும் உள்ளது.

வாரும்—வாரு+கழல் > வார்கழல் — ஏனென்றால் ரகர மெய்க்கு முன் நெடிலை உடைய ஓரசை உள்ளது.

(5) பெயரெச்சத்தின் ஈற்று உகரம் ஏறிவரும் மெய் ஈற்று மெய்களில் ஒன்றாக இருந்து இரட்டித்து வந்திருந்தால் உகரமும் மெய்யும் கெடும்.

வெல்லும்—வெல்லு—வெல்

துள்ளும் —துள்ளு—துள்

(6) உகரத்துக்கு முன் யகர மெய்யும் ஒன்றுக்கு மேற்பட்ட அசையும் இருந்தால் உகரமும் யகர மெய்யும் கெடும்.

அணியும்—*அணியு+கலன்>அணிகலன்

புரியும் —*புரியு+தயை>புரிதயை

அறியும் —*அறியு+பொருள்>அறிபொருள்

(7) சாயும், காயும் ஆகிய வினைமுற்று வடிவங்களில் யகரத்து முன் ஓரசையே இருந்தாலும் உகரம் மட்டுமே கெடும்; யகரம் கெடாது.

காயும்—*காயு+கொம்பு>காய் கொம்பு

அணி, காய் என்ற இரண்டு சொற்களும் பெயராகவும் பெயரெச்சமாகவும் கையாளப்படும். பெயராக இருக்கும் வருமொழி வல்லினம் இரட்டிக்கும், எச்சமாக இருந்தால் இரட்டிக்காது.

காய்க்கொம்பு—பெயர்த்தொகை—காயை உடைய கொம்பு

காய்கொம்பு — பெயரெச்சத்தொகை—காய்கிற கொம்பு (வினைத் தொகை)

இந்த வருணனை பல விதிகளை உள்ளடக்கியுள்ளதால் பெயரெச்சம் உண்டாக்குவது கடினமான செயல் என்று தெரிந்துகொள்ளலாம். மேலும் இந்த வருணனையில் பெயரெச்சத்தின் இரண்டு வகைகளை (செய்யும் என்னும் வாய் பாட்டுப் பெயரெச்சம், செய் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்) ஒரே வகையாகக் கருதி விட்ட தவறு கலந்து விட்டது. மேலும் அந்த இரண்டு வகையும் பெயரெச்சமாக அமைந்தாலும் இரண்டுக்கும் பயன்பாட்டில் வேறுபாடு உண்டு. செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சமும் பெயரும் சேர்ந்து வருவது வினைத்தொகை என்றும் தமிழ் இலக்கணங்கள் குறிப்பிடும். அவை இரண்டுக்கும் இரண்டு விதமாகப் பெயர் வைத்ததற்குக் காரணம் பெயரெச்சத் தொடரில் பெயரெச்சத்துக்கும் பெயருக்கும் இடையே இன்னொரு சொல் வரலாம். (படிக்கும் பெரிய புத்தகம்); வினைத்தொகைக்கு இடையே வேறுசொல்லை நுழைக்க முடியாது (அணிகலன், வார்கழல்). இங்கு இலக்கண வருணனையில் சிக்கல் ஏற்பட்டதோடு இலக்கண விளக்கத்திலும் (இரண்டையும் ஒரேவகை பெயரெச்சமாகக் கருதியது) தவறு ஏற்பட்டுவிட்டது.

## 4.5. இலக்கண உருவாக்கம்

செந்தமிழ் அமைப்பைப் பெஸ்கி எவ்வளவு தூரம் உள் வாங்கிக் கொண்டு பொதுமைப்படுத்தி இலக்கணம் உருவாக்கியுள்ளார் என்பதே இலக்கண உருவாக்கம் எனப்படும். இங்கு மொழிப்பணி மொழியியல்பணி என்று இரண்டாகப் பிரித்து ஒவ்வொன்றிலும் பாராட்டத் தகுந்தது—புதுமையானது; திருத்தத்துக்கு உரியது—தவறானது என்றும் பகுத்துப் பார்க்கலாம் என்று முன்னரே விளக்கப்பட்டுள்ளது (சண்முகம், 1992).

### 4.5,1. மொழிப்பணி

செந்தமிழுக்கான தரவுகளைத் தேர்ந்தெடுத்ததில் பல இடங்களில் ஏற்றுக்கொள்ளத் தகுந்தவையாக இருப்பது மேலே கொடுந்தமிழ்—செந்தமிழ் மாறுபாடுகளாகக் காட்டப்பட்டவை களால் அறியலாம். ஆனாலும் மிகைப்படக்கூறல், குன்றக்கூறல் ஆகிய தவறுகள் காணப்படுகின்றன. அவைகளை மொழித்தவறு - தரவுத்தவறு என்றும் குறிப்பிடலாம்.

(1) வினை முற்றுகளில் வரும் இடம் - பால் விகுதிகளில் முன்னிலையிலும் படர்க்கையிலும் (பலர்பால் மட்டும்) பன்மையில் - கள் விகுதி ஏற்று வருவதற்கு இலக்கியச் சான்றுகள் உண்டு.

முன்னிலைப் பன்மை

| | |
|---|---|
| செய்கின்றீர்—அப்.தே. 2129 | கழிக்கின்றீர்கள்—அ. தே. 412 |
| கொண்டீர் —அப்.தே. 928 | கெடுவீர்கள் —அ தே. 2354 |

படர்க்கை பலர்பால்

| | |
|---|---|
| கண்டார்—நா.தி. 170 | புக்கார்கள்—நா.தி. 1416. |
| பறந்தார்—நா.தி 3540 | அறிந்தார்கள்—நா.தி. 1867 |
| காப்பர் —நா.தி. 2375 | செய்வர்கள் —நா.தி. 1918 |

பெஸ்கி தன்மை, முன்னிலை, படர்க்கை (பலர்பால், பலவின்பால்) ஆகிய மூன்று இடங்களிலும் பன்மையில் - கள் விகுதி சேர்ந்து வரும் என்று கூறியது (26.69) இலக்கணத் தவறால் ஏற்பட்ட இலக்கியத் தவறாகக் கருதலாம்.

தன்மைப் பன்மை

நடந்தேம் — நடந்தேங்கள்
நடந்தனம் — நடந்தனங்கள்
நடப்பேம் — நடப்பேங்கள்
நடப்பனம் — நடப்பனங்கள்

தன்மை பன்மை - கள் விகுதியை ஏற்றதற்கு இலக்கிய வழக்கு கிடையாது.

(2) எதிர்மறை முற்று வடிவங்களை விளக்கும் போது ஒன்றன் பால் எதிர்மறை வடிவங்களில் (செய்யாது, நடவாது, ஆகாது) - து விகுதியை நீக்கி - வன என்பதைச் சேர்த்தால் பலவின்பால் எதிர்மறை முற்று உண்டாகும் என்ற கருத்து (33.72) தவறானது. செய்யாவன, நடவாவன, ஆகாவன போன்ற வடிவங்கள் இலக்கிய வழக்கிலோ பேச்சு வழக்கிலோ காணப்படவில்லை.

(3) நிபந்தனை வினையெச்சம் வினைமுற்றுக்குப் பிறகு ஏல்/ஆல் விகுதி சேர்த்தும் உண்டாக்கப்படும் என்று கூறி செய்கின்றேனால், செய்கின்றேனேல், செய்தனையேல், செய்குவனேல் என்று பல சான்றுகளைக் கொடுத்துள்ளார். ஆனால் ஒன்றன்பால் வினை முற்றுகளில் துகரத்தை நீக்கி - ஆல் விகுதி சேர்த்தும் நியதி வினையெச்சம் உண்டாக்கலாம் என்று குறிப்பிட்டு செய்கின்றவால், செய்தவால், செய்வவால் என்ற சான்று கொடுக்கப்பட்டுள்ளன (45.86). இந்த வடிவங்கள் இலக்கிய வழக்கிலும் பேச்சு வழக்கிலும் காணப்படவில்லை.

இவையெல்லாம் மிகைபடக் கூறல் என்ற தவறு உடையவை என்று கூறலாம். ஆனால் இலக்கண உருவாக்க நோக்கில் மொழியில் ஒப்புமையாக்கத்தால் புதிய வடிவங்கள் உண்டாக்குவது போல இலக்கண உருவாக்கத்தில் ஒப்புமையாக்கம் பின்பற்றப் பட்டுள்ளது என்று பொதுமைப்படுத்தலாம்.

ஓரிடத்தில் சொல்லியல் நிலையில் விதி ஒழுங்காக விளக்கப்பட்டு எழுத்தியல் நிலையில் புணர்ச்சி மாற்றத்தைக் குறிப்பிடாததால் தரவு தவறாகப் போய்விட்டது. பலவின் பால் வினைமுற்றும் பலவின்பால் வினையாலணையும் பெயரும் முறையே னகர ஈறும் பெறும் என்று பொதுவாகக் குறிப் பிட்டுள்ளார் (41.82).

| | | |
|---|---|---|
| நிகழ்காலம் | செய்கின்றவை | செய்கின்றன |
| இறந்தகாலம் | செய்தவை | செய்தன |
| எதிர்காலம் | *செய்பவை | செய்வன |

இங்கு நிகழ்கால வடிவங்களும் இறந்தகால வடிவங்களும் சரியானவையே. அதே முறையைப் பின்பற்றி எதிர்கால னகர ஈற்று வடிவமும் சரியானதே. எதிர்கால வைகார ஈற்று வடிவம் மட்டுமே தவறானது. இங்குச் சரியான வடிவம் செய்பவை என்பதே. இன்னொரு வகர அசைக்கு முன் முதல் வகரம் பகர மாக மாறிவிடும் என்ற புணர்ச்சி விதி சேர்க்கவேண்டும். இந்த மாற்றத்தைப் பெஸ்கி கொடுந்தமிழ் இலக்கணத்தில் (106.431) குறிப்பிட்டுள்ளார். அங்குத் தன்மை வினைமுற்றிலிருந்து வினையாலணையும் பெயர் உண்டாக்கலாம் என்று குறிப்பிட்டு ப்டேன்/டேன் எதிர்கால வடிவங்களில் ஏன் என்பதை நீக்கி விட்டு அவன், அவள் ஆகியவைகளைச் சேர்க்கலாம் என்றும் (இருப்பேன் - இருப்பவன்; இருப்பவள்; காண்பேன் - காண்பவள்) - வேன் என்பது எதிர்கால விகுதியாக இருந்தால் வகரத்தைப் பகரமாக மாற்றி அதே முறையில் உண்டாக்கலாம் என்றும் (செய்வேன் - செய்பவன், செய்பவன்) விளக்கியுள்ளார். இங்கும் அதே முறையில் விளக்கியிருந்தால் சரியாக இருக்கும். நடப்பன - நடப்பவை; காண்பன - காண்பவை; செய்வன - செய்பவை. இதுவும் (அதாவது புணர்ச்சி மாற்றத்தைச் செந்தமிழ் இலக்கணத்தில் குறிப்பிடாதது) மிகைபடக் கூறல்என்ற குற்றம் என்றும் இலக்கண உருவாக்க நோக்கில் இலக்கண ஒப்புமை நோக்கம் என்றும் கொள்ளலாம்.

## 4.5 2. மொழியியல் பணி

உடனிலை மயக்கத்துக்குக் கட்டுபாடு கண்டு பிடித்தது; தமிழில் செயப்பாட்டு வினை (Passive Voice) இல்லை என்றது; பெயரடைச் சொற்களை உரிச்சொல் என்று கொண்டது ஆகிய வற்றை ஏற்றுக்கொள்ளத் தகுந்த மொழியியல் பணி எனலாம். அதே சமயத்தில் தரவுகள் சரியாக இருந்தும் அதன் இலக்கண விளக்கம் - மொழியியல் பணி திருத்தத்துக்கு உரியதாய் அமைந்த இடங்களும் சில உண்டு.

பகுபதப்பெயர்கள் பண்பு (பெஸ்கி, குணம் என்று குறிப் பிட்டுள்ளார்) அடியாகப் பிறந்த பெயர்களாகக் கொடியன்< கொடுமை; இனியன்<இனிமை; கூனன்<கூன்; குள்ளன்<குள்ளம் முதலிய சொற்களைக் கொடுத்துள்ளார் (11.40). இங்கு இரண்டு தவறுகள் உள்ளன. கொடியன், கூனன் ஆகிய இரண்டையும் ஒரே வகையாகக் கருதமுடியாது. ஏனெனில் முன்னது குறிப்புவினையாலணையும் பெயர்; பின்னது ஆக்கப் பெயர். இரண்டும் இரண்டு வகைப்பட்ட அடிச் சொற்களிலிருந்து உண்டானதாகக் கருதவேண்டும்.

பொதுவாகப் பெஸ்கி, குறிப்புவினையாலணையும் பெயர்கள் தமிழில் உண்டு என்பதை ஒப்புக்கொள்ளவில்லை என்றே கருத வேண்டியிருக்கிறது. அடியேன் என்ற குறிப்புவினை முற்று என்றும் அடியேனை, அடியேனால் என்று வேற்றுமை ஏற்றுவருவது தவறு என்றும் இன்னொரு இடத்தில் (14.46) குறிப்பிடுவதாலும் குறிப்பு வினையாலணையும்பெயர் உண்டு என்று பெஸ்கி கருத வில்லை என்பதை அறிய முடிகிறது. அவர் கருத்துப்படி அடியேன் என்பது வினைமுற்று மட்டுந்தான்; அடியன், அடியான் என்பவையே பகுதப் பெயர்கள், ஆனால் வழக்கில் 'அடியேன்' குறிப்பு வினையாலணையும் பெயராகப் பயன்படுகிறது.

செய்கலாதார் (குறள். 36) என்ற வடிவமும் செய்யாதார் என்ற வடிவமும் ஒன்று என்பது பொருந்தாது (4 6.89. ஏனென்றால் இரண்டின் பொருளும் (முன்னது செய்ய முடியாதவர், பின்னது செய்யாதவர்) அமைப்பும் (முன்னது செய்+கல் என்ற வினையடிகள் கொண்ட கூட்டுவினை. கல் என்பது இயலும் என்ற பொருள் உடையது; பின்னது 'செய்' என்ற ஒரு வினையைக் கொண்ட தனி (Simple) வினை) மாறுபட்டவை

எதிர்கால வினைமுற்றுகளை விளக்கும்போது விளக்கத்துக்கும் சான்றுக்கும் முரண் காணப்படுகிறது. மனார், மார் ஆகிய இரண்டும் ஒரே பொருள் உடையவை என்று குறிப்பிட்டு மொழிமனார் - மொழிவார்; எம்மனார் - என்பார் என்ற சான்றுகளைத் தந்தது (32.72) தவறானது; திருத்தத்துக்கு உரியது. அப்படியே மார் என்று குறுகி, மர் என்று வரும் எனக் குறிப்பிட்டு என்பாரும்~என்மரும் என்று இரண்டும் ஒன்றே என்று சான்று தந்தது தவறானது.

குறிப்பு வினையைப் பகுபதப் பெயர்களின் பகுதியாக விளக்கியதும் (14.45) இலக்கணத் தவறாகவே கருதப்படவேண்டும். ஏனென்றால் அனையன், அனையள்; அன்னன், அன்னள்; மேலது; மேலின ஆகியவைகளும் குறிப்புவினைமுற்றுக்களாக இலக்கிய வழக்கில் வழங்கி வந்துள்ளன. அவை அனை -, அன் -, மேல் -, ஆகிய அடியாகப் பிறந்த குறிப்புவினைகள். அவைகளைப் பெயரடிகளாகக் கருத முடியாது. பெஸ்கியே குறிப்புவினையை விளக்கும்போது (4.45) வினையைப் போல எல்லா இடம் - பால் விகுதிகளை ஏற்கும் என்று குறிப்பிட்டுவிட்டு, பெயராகக் கொண்டது பொருந்தாது.

ந - என்பது முன்னொட்டு என்றும் அது பெயரோடு வரும் என்றும் கூறி (47.90) நக்குடம் (நல்ல குடம்), நப்பொருள் (நல்ல பொருள்) நல்வழி (நல்லவழி). நல்லமிர்தம் என்ற சான்றுகளைக் கொடுத்துள்ளது பொருந்தாது என்றே நினைக்கவேண்யிடிருக்கிறது. சங்க இலக்கியத்தில் இயற்பெயரோடு நக்கீரனார், நச்செள்ளையார், நப்பாலனார், நப்பிள்ளை என்ற சொற்கள் காணப்படுகின்றன, இவை நல் + கீரனார் செள்ளையார் பாலையார் என்று கொண்டே விளக்கவேண்டும். இங்கு 'நல்' என்ற பெயரடையின் மாற்று வடிவமாகவே நக் -, நச் -, நப் - ஆகியவை வந்துள்ளதே தவிர ந - என்ற முன்னொட்டோடு வந்ததாகக் கருதுவது சிறப்பு ஆகாது. எனவே ந - என்பதை முன்னொட்டாகக் கருதாமல் பெயரடையாகக் கொள்ள வேண்டும்.

# தொன்னூல் விளக்கம்

## 5.1. முன்னுரை

தொன்னூல் விளக்கம் பெஸ்கியால் 1730ஆம் ஆண்டு எழுதி முடிக்கப்பட்டது. ஆனால் அது 1838இல் தான் முதன் முதல் அச்சிடப்பட்டிருக்கிறது. இதில் களத்தூர் வேதகிரி முதலியார் என்பவரால் பல இலக்கண இலக்கிய நூல்களிலிருந்து சான்று களைச் சேர்த்து அச்சிடப்பட்டது என்று குறிப்பு காணப்படுகிறது. இதில் மூலமும் உரையும் வீரமாமுனிவரே எழுதியதாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தப் பதிப்பே இங்கு ஆதாரமாக கொள்ளப்படுகிறது.

தொன்னூல் விளக்கத்திற்கு இன்னும் இரண்டு பதிப்பு வெளி யிடப்பட்டதாக அறிய முடிகிறது. 1864இல் அமிர்தநாதர் என்பவ ராலும் 1891இல் உ. சீனிவாசராகவாச்சாரியார் என்பவரால் பார்வையிடப்பட்டு, மெக்கென்ஜி என்பவராலும் சென்னையில் அச்சிடப்பட்டிருக்கிறது. (சுப்பிரமணியம், 1978 : 23). ஒவ்வொரு தலைப்பின் கீழும் அதற்கு நேரான ஆங்கிலச் சொல்லும் கொடுக்கப் பட்டுள்ளது என்று சுப்பிரமணியம் குறிப்பிட்டுள்ளது 1891ஆம் பதிப்பை ஒட்டியதாக இருக்க வேண்டும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஏனென்றால் 1838ஆம் ஆண்டுப் பதிப்பில் ஆங்கில வாசகம் கொடுக்கப்படவில்லை. சுப்பிரமணியம் (1978) மூலமும் பொழிப்புரையும் சேர்த்து விரிவான முன்னுரையோடு (70 பக்கம்; வரலாறு, தமிழ்த்தொண்டு, திறனாய்வு, உரையாசிரியர்) தொன்னூல் விளக்கத்தை வெளியிட்டுள்ளார்.

நூலைப் பொறுத்தவரையில் இரண்டு பெரிய சிக்கல்கள் உள்ளன. அவையாவன 1) உரையாசிரியர் யார்? 2) நூலை

ஐந்து அதிகாரமாகப் பிரித்ததில் கருத்து வேறுபாடு இல்லையானாலும் ஒத்து, இயல் என்று உட்பிரிவுகள் செய்து, உட்தலைப்புகள் கொடுத்து யார்? மூல நூலைச் சரியாகப் புரிந்து கொள்ளவதற்கு இந்த இரண்டு கேள்விகளுக்கு உரிய விடை தேவையானதால் அவைகளை முதலில் பார்ப்போம்.

5 2. உரையாசிரியர்

1838ஆம் ஆண்டுப்பதிப்பில் 'வீரமாமுனிவர் திருவாய் மலர்ந்தருளிய ஐந்திலக்கணத் தொன்னூல் விளக்கம் மூலமும் உரையும்' என்று கொடுக்கப்பட்டிருப்பதோடு 'வேதகிரி முதலியார்' நூல் பழுதற ஆராய்ந்து, நன்னூல், நேமிநாதம், இலக்கண விளக்கம், அகப் பொருள்... முதலிய இலக்கணச் சூத்திரங்களே, மேற்கோளாகவும் குறள் - நாலடி... முதலிய இலக்கியச் செய்யுளே உதாரணங்களாகவும் சேர்த்து அச்சிற்பதிப்பிக்கப்பட்டது' என்று கூறியிருப்பதன் அர்த்தம் என்ன?

'நூலாசிரியரே உரையும் எழுதிய சிறப்புடைத்து இத் தொன்னூல் விளக்கம். இதனை ஆசிரியர் கூறாவிடினும் அதன் உரையினின்று நாம் ஐயமற உய்த்துணர்ந்து கொள்ள முடிகிறது' என்று சுப்பிரமணியம் (ப. 58) முதலில் குறிப்பிட்டுவிட்டு ஐயப்படுவதற்கான ஆதாரத்தை எடுத்துக்காட்டிய பெருமை அவருக்கு உண்டு என்பது பின்னால் விளக்கப்படும். இன்னாசி (1984 : 21) முனிவரே உரை எழுதியதாக ஐயத்திற்கு இடம் இல்லாததாக நினைக்கிறார் என்பதை அவருடைய வாசகம் காட்டுகிறது.

சுப்பிரமணியத்துக்கு ஐயம் வரக் காரணம் உரைக்குள் படர்க்கைக் கூற்றாக ஒரு தொடர் காணப்படுவது தான். மேலும் சில நூற்பாக்களின் உரை மூலத்தின் கருத்தைத் திரிவுபடுத்தியிருக் கிறதைப் பார்க்கும் போது ஐயம் அதிகமாகிறதே தவிர குறைய வில்லை, இதன் சரியான உண்மையைக் காணத் தொன்னூல் விளக்கக் கையெழுத்துப்படி எங்காவது உள்ளதா என்று கண்டு பிடிக்கும் முயற்சியில் ஈடுபட வேண்டும் இனி ஐயத்துக்கான ஆதாரங்களைப் பார்ப்போம் :

உரையில் பல தொடர்கள் தன்மையில் எழுதப்பட்டுள்ளன : சான்று :

'நாலும்...... வேண்டுவதை மாத்திரம் விரித்துரைப்பேன் (சூ. 1);' பகுப்பும், விகாரமும் எனும் மற்று இரண்டையும் விளக்கிக்

கூறுவதும் '(சூ 2);' திருவள்ளுவர் உரைத்த பலவற்றுள் ஒன்றை நான் தெரிந்துரைப்பத் துணிந்தேன் '(சூ. 149), ஆனால் ஓரிடத்தில் மூல ஆசிரியர் வேறு ஒருவராகப் பிரித்துப் பேசப்பட்டிருக்கிறது.

'சூத்திரத்தில் (326) அனையவும் என்ற மிகையானே இவ் வாசிரியர் சொல்லாதவற்றை இந்நூற்கண்ணே சொல்ல வேண்டிய இடத்தில் பன்னூலும் சிற்சில எடுத்துக் கூறுவதும்' (சூ. 336) என்ற தொடர் சுப்பிரமணியத்தை (ப. 55) ஐயப்படவைத்தது. இங்குத் தெளிவாக நூலாசிரியலிருந்து வேறுபட்டவர் உரையாசிரியர் என்ற கருத்து பெறும்படி இருந்தாலும், தன்மை வினைமுற்று பயன் படுத்தப்பட்டிருப்பது கவனிக்கத்தகுந்தது. அதாவது உரை யாசிரியர் தன்மையில் இங்குத் தன்னைக் குறிப்பிட்டது போலவே பிற இடங்களிலும் உரையில் தன்மையில் குறிப்பிட்டுள்ளாரா என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஆனால் மேலும் மூன்று சான்றுகளைச் சுப்பிரமணியம் எடுத்துக் காட்டி நூலாசிரியரே உரையாசிரியர் என்பது மறுப்புக்கு இடமின்றித் தெளிவாகும். (ப. 56) என்று வலியுறுத்தியுள்ளார். அவர் கூறும் சான்றுகள்.

1, இந்நூற்பாவிலேயே...

'இதனுள் செந்தமிழ் நன்குணர்ந்தோர் முன் தந்தவற்றுள் வேண்டாதன சில ஒழித்து வேண்டிய சிற்சில சுட்டித் தன்மை முதற் கொண்டு உரைத்த அணிகள் ஆறைந்தையும் தனித்தனி விளக்குதும், என்று கூறிந்தானே உரையாசிரியர் என்பதை நிரூபிக்கிறார்.

2. பல நூற்பாக்களின் உரையில் நூற்பாவில் கூறாத வற்றையும் விரிவாக விளக்கமாகத் தருகின்றார். (45, 55, 199 249, 283)

3. தன் கருத்துக்கு ஒவ்வாவிடினும் மரபு வழியைப் பின்பற்றி அதனை அமைத்ததாக விளக்கம் தருகின்றார்: 'நிறுத்த முறையானே சாதியுரிமை ஆமாறு உணர்த்துதும். ஆகையால் அந்தணர், அரசர், வணிகர், சூத்திரர் என இந் நாட்டில் வழங்கும் உயர் சாதியிற் பிறந்த நால்வராகி மற்றவர் இழிந்தோர் எனப்படுவர் என்றுணர்க. இந்நாட்டு வழக்கம் பற்றி அவ்வச் சாதிக்குரிய தொழிலை விளக்குதும்; (152 உரை) என்பவையே அந்த மூன்று சான்றுகள்.

முதல் கருத்தும் மூன்றாம் கருத்தும் மூலத்தைப் பற்றிப் பேசுவதால் 'உரையாசிரியரே மூல ஆசிரியர்' என்ற கருத்துப்

பெறப்படுகிறது என்பது உண்மையே. ஆனால் இரண்டாவது கருத்து அந்தக் கருத்தை வலியுறுத்துவதாகக் கொள்ள முடியாது. ஏனென்றால் நூலில் சொல்லாத கருத்துக்களை அவரே உரையில் விளக்கினார் என்றால், அந்தக் கருத்துக்களைச் சூத்திரமாக்கத் தெரியவில்லை என்று நூலாசிரியர் மேல் குறை ஏற்படும். வேறு ஒருவர் உரை எழுதினார் என்றால் அவருடைய புலமை வெளிப் படுவதாக அமையும். ஆகவே சுப்பிரமணியம் எடுத்துக்காட்டிய மூன்று கருத்தில் இரண்டு உரையாசிரியரே நூலாசிரியர் என்ற உண்மையையும் ஒன்று உரையாசிரியர் நூலாசிரியரிலிருந்து வேறானவர் என்ற உண்மையையும் பெற வைக்கின்றன.

மேலும் இரண்டு சூத்திரங்களின் உரை, மூலத்தின் கருத்தைப் பிரதிபலிக்கவில்லை. நூலாசிரியரே உரையாசிரியராக இருந்தால் இந்த முரண் ஏற்படாது என்றே எண்ண வேண்டியிருக்கிறது. மேலும் ஒரு சூத்திரத்தின் உரை வீரமாமுனிவருக்குத் தமிழ் ஆய்வுலகில் கிடைக்க வேண்டிய பெருமையைக் கேள்விக் குறியாக்கி வரலாற்று பெருமைக்குரிய மூலநாயகன் யார் என்ற கேள்வி யாகவே இன்றும் நின்று கொண்டிருக்க வைத்துவிட்டது' அதாவது தமிழ் வரிவடிவங்களில் உயிரெழுத்திலும், உயிர்மெய் யெழுத்திலும், எகர ஒகரங்களில் குறில் நெடில் வடிவ வேறுபாடு வீரமாமுனிவர் செய்தது என்று கருதப்பட்டாலும், அதற்குரிய நூலாதாரம் இல்லை என்று கருதி அந்தச் சீர்திருத்தத்தைச் செய்தது யார் என்பது ஆய்வுலகில் வினாவாகவே வழக்கில் இருந்து வருகிறது. 'இந்த மாறுதல் யாரால் எப்போது உண்டாக்கப் பட்டது என்று தெரியவில்லை என்று வேங்கடசாமி (1936 : 82) தொன்னூல் விளக்க 'நீட்டல், கழித்தல், குறில் மெய்க்கு இரு புள்ளி' என்ற சூத்திரத்தை எடுத்து வைத்துக் கொண்டே கூறுவது கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுவதைப் போல் ஆகிறது. ஏனென்றால் அந்தச் சூத்திரத்தின் பொருளே அந்த வடிவ மாற்றத்தை விளக்குவது தான். ஆனால் உரை வேறு விதமாக உள்ளதே வேங்கடசாமியின் ஐயத்திற்கு மூல காரணம்.

நீட்டல், சுழித்தல்
குறின் மையக்கிரு புள்ளி (12)

என்ற சூத்திரத்தின் உரை வாசகம் கீழ் வருமாறு :

'எழுத்து வடிவம் ஆமாறு உணர்த்தும். மெய்யின் வடிவும், உயிர் மெய்யின் வடிவம் பல முறை வேறுபடாமையானும்,

எகரம் - ஏகாரம்; ஒகரம் - ஓகாரம் எப்போதும் ஒரு வடிவு ஆகையானும் மயக்க நீப்பது வேண்டி மேற்புள்ளி கொடுத்தார் புலவர். ஆகையால் குற்றெழுத்தின் மேல் நீண்ட புள்ளியும் வரும் என்று உணர்க. (உ-ம்) எரி - எ̄ரி மண் மகள் - மண்கள், தாம் - தா̄ம், கண்மணி - கண்மணி என்று வரும். 'மெய்யின் இயற்கைப் புள்ளியொடு நிலையல்', 'எகரத்து ஒகாரத்து இயற்கையுமற்றே' என்றும் கூறினார்.

இங்கு நான்கு செய்திகள் எடுத்துக்காட்டத்தகுந்தவை.

1. 'வடிவ மயக்கத்தை நீக்க வேண்டி மேற்புள்ளி கொடுத்தார்' என்று திருத்தத்தைப் பொதுமைபடுத்தியதே தவறு. இந்தப் பொதுமை மேற்கோளாக எடுத்துக் காட்டிய தொல்காப்பிய சூத்திரங்களுக்குப் பொருந்துமே தவிர தொன்னூல் விளக்கத்துக்குப் பொருந்தாது. (காரணம் பின்னால் தரப்படுகிறது.)

2. நீட்டல், சுழித்தல் என்று குறிலுக்குத்தனியாகக் கூறியதை' மெய்க்குக் கூறிய 'புள்ளி'யோடு சேர்த்து நீண்ட புள்ளி, சுழித்தப் புள்ளி என்ற உரை விளக்கம் பொருந்தாது.

3. நீண்ட புள்ளி என்பது 'என் தாய் மலடி' என்பது போன்ற பொருள் ஆகும்.

4. சான்றுகளில் இரண்டு தவறுகள் உள்ளன.

அ) குறில் மேல் நீண்ட புள்ளி என்று உரையில் குறிப்பிட்டு விட்டு நெடில் மேல் நீண்ட புள்ளி வைத்திருப்பது.

ஆ) மண்மகள் - மண்கள் என்று இருப்பது. (இது அச்சுப்பிழை யாக இருக்கலாம் என்று புறக்கணித்துவிடலாம்).

எனவே அந்தச் சூத்திரத்துக்குப் புதிய பொழிப்புரையும் விளக்கமும் வேண்டும். குறிலுக்கு நீட்டியும், சுழித்தும் மெய்க்குப் புள்ளி வைத்தும் எழுத வேண்டும் என்பது பொழிப்புரை. விளக்கவுரை : வீரமாமுனிவர் காலத்துக்கு முன் <எ> <ஒ> என்ற வடிவங்கள் நெடில்களாகக் கருதப்பட்டு, குறிலைக் குறிப்பதற்காக <எ̇> <ஒ̇> என்று நெடில் வடிவத்துமேல் புள்ளி வைக்கப்பட்டது. ஏனைய உயிரெழுத்துக்களில் குறில் வடிவத்தை அடிப்படையாகக் கொண்டு, அவைகளில் சிறிது மாற்றம் செய்தே நெடில் வடிவம் உண்டாக்கப்பட்டதால் வீரமாமுனிவர் மரபுபடி நெடிலாகக் கருதப்பட்ட வடிவத்தை அதன் ஒலி மதிப்பு மாற்றிக் குறிலாக அமைத்துக் கொண்டார். இந்த உண்மையை அவரே

கொடுந்தமிழ் இலக்கணத்தில் குறிப்பிட்டிருப்பதால் அறியலாம் (1728 : 2,8).

'குறிலுக்கும் நெடிலுக்கும் ஒரே மாதிரியாக எழுதப்பட்டிருக்கிற கொம்பு என்று சொல்லப்படுகிற (ெ) இந்தக் குறியைக் குற்றெழுத்தைக் குறிப்பிடவும், இக்கொம்பையே மேலே சுழித்து (ே) இவ்விதமாக எழுதினால் நெட்டெழுத்தைக் குறிப்பிடவும் மாற்றி அமைத்தேன்' என்பது அவருடைய கருத்து.

அவர் குற்றெழுத்துக்கும், நெட்டெழுத்துக்கும் ஒரே வடிவம் என்று குறிப்பிடுவது எழுத்து மரபை ஒட்டியது. இலக்கண மரபுபடி <எ> என்பது நெடில் ஏகாரத் துணை எழுத்து. (எ்) என்பதே குறில் எகரத் துணை எழுத்தாகக் கருதப்படும். எனவே இலக்கணப்படி (எ) என்பதற் குரிய ஒலி மதிப்பை மாற்றி நெடிலுக்குப் புதிய வடிவம் கற்பித்தார். அந்த முறையில் பார்க்கும் போது உயிரெழுத்துக்களில் முதலில் <எ> <ஒ> என்பவை நெடிலாகக் கருதப்பட்டவைகளைக் குற்றெழுத்தாக மாற்றி <எ> கரத்தில் நீட்டலும் (அதாவது வலது பக்கக் கோட்டின் கீழே நீட்டுதல்) (ஒ) கரத்தில் சுழித்தலும் (அதாவது வலது பக்க கீழ் வளைவில் சுழிப்பது) செய்தால் இன்று நாம் எழுதும் ஏகார, ஓகார நெட்டெழுத்துகள் கிடைத்துவிடுகின்றன. எனவே நீட்டல், சுழித்தல், குறில் என்ற தொடருக்குச் சரியான விளக்கம் கிடைத்துவிடுகிறது. 'மெய்களு இரு புள்ளி' என்பதற்கு மெய்க்காக - மெய்யெழுத்து உண்டாக்குவதாக அகர உயிர்மெய்யில் புள்ளி வைக்க வேண்டும். இது தொல்காப்பியர் காலத்திலிருந்து சொல்லப்பட்டு வருகிற கருத்து. சுவடியில் ஆணியால் எழுதும்போது புள்ளி இடுவது கடினம் ஆனதால் நடைமுறையில் புள்ளி இடும் வழக்கம் கடைபிடிக்காமல் இருந்து வந்தது. அச்சு இயந்திர நுட்பமும் மை பயன்படுத்திக் காகிதத்தில் எழுதும் தொழில் நுட்பமும் வளர்ந்த போது நடைமுறையில் புள்ளி வைப்பது கட்டாயமாகப் பின்பற்றப்பட்டு வருகிறது.

இளங்குமரன் (1988 : 389) 'ஏகாரக் கீழ்க்கோடும் ஓகாரச் சுழியும் அவர் தந்தது என்னும் வழக்கு இந்நூற்பாவால் மேலாய்வுக்கு உரியதாக அமைகிறது' என்று கூறுவது இந்தக் கருத்தை வலியுறுத்தும். அவருக்கு இருந்த ஐயத்தை (மேலாய்வுக்கு உரியதாகிறது என்பது) நாம் மேலே காட்டிய விளக்கம் தெளிவுபடுத்தும்.

நாம் மேலே கொடுத்த விளக்கம் உயிரெழுத்தில் முனிவரே சீர்திருத்தத்துக்கு வழி காட்டினார் என்பதைப் புலப்படுத்திவிடுகிறது. நூலாசிரியரே உரையாசிரியராக இருந்தால் நாம் மேலே சுட்டிக்காட்டிய குறைகள் ஏற்பட்டிருக்க வாய்ப்பில்லை.

வியங்கோள் பற்றிய சூத்திரத்தில் (116) மூலத்தில் குறிப்பிட்ட விகுதிகள் உரையில் குறிப்பிடவில்லை.

வியங்கோள் இயலும் விகுதிக்கவ்விய
யவ்வொடு ரவ்வொற்றும் (116 : 1, 2)

என்பதே அந்தச் சூத்திர அடிகள்.

'வியங்கோள் விகுதிகளாமாறு உணர்த்தும், க, ய, ர். விகுதி மூவிடத்தை ஐம்பாற் கண்ணும் ஏற்கும் வியங்கோளாம் : (உ-ம்) வாழ்க, வாழிய, வாழியர். இங்கு வாழிய என்பதில் யகரந்தான் வியங்கோள் விகுதி என்றால் இகரம் வந்திருப்பதை விளக்காத குற்றம் ஏற்பட்டுவிடும். மேலும் சூத்திரத்தில் 'கவ்விய' என்று இருப்பதைக் க, ய. என்று விளக்கும் போது 'இ' என்பது விடுபட்டுப் போய் விடுகிறது. எனவே க, இய, என்று பிரிப்பதே பொருத்தமானது. சான்றையும் சரியாக விளக்குவது, அடுத்து 'யவ்வொடு ரவ்வொற்றும்' என்ற தொடருக்கு 'ர்' என்று மட்டும் பொருள் கொள்ளாமல் யகரத்தோடு ரகரம் சேர்ந்து வரும் என்று கொண்டால் 'இயர்' என்பதைக் குறிப்பிட்டதாகவும் கொள்ளலாம். எனவே இன்று காணப்படும் உரை, மூல ஆசிரியர் கருத்தைப் பிரதிபலிக்கவில்லை. எனவே மூல ஆசிரியர் உரையாசிரியராக இருக்க முடியாது என்று எண்ணத் தோன்றுகிறது.

'வினைக்குறிப்பு எஞ்சி ஈற்று அகரம் பொதுவே' என்ற (125) குறிப்பு வினையின் எச்சம் பற்றிய சூத்திரத்தின் நேரடிப் பொருள் : குறிப்பு வினையின் எச்சம் அகர விகுதியைப் பெறும் என்பதே. ஆனால் உரையில் இந்த இயலுக்குத் தொடர்பு இல்லாத பல கருத்துக்கள் கூறப்பட்டிருக்கின்றன.

'வினைக் குறிப்பு எச்சம் ஆமாறு உணர்த்தும். மேற்கூறியபடி பலவின்பால் வினைக்குறிப்புச் சொல் எல்லாம் அகர விகுதியான் முடியும். பாலே தோன்றாது எவ்வகைப் பெயர்க்கும் ஏற்ற வினைக் குறிப்பு எச்சம் ஆகையால் அகர விகுதியான் முடியவும் பெறும். அங்ஙனம் மேற்சொன்ன தன்மையாற் பலவின்பால் முற்று வினையாக நடந்தன, முடிந்தன, பூத்தன என வருதலன்றியே அவை நடந்த, இவை முடிந்த, பல மலர் பூத்த முதலிய முற்று வினையென வழங்கும்.

'சூத்திரம் சுருக்கமாகவும் உரை விளக்கமாகவும் இருப்பதால் உரையினையும் தானே செய்தல் வேண்டும் என்ற எண்ணத் துடனேயே வீரமாமுனிவர் இந்நூலை இயற்றியிருக்க வேண்டும் என்ற எண்ணம் வலுப்பெறுகிறது' என்று சுப்பிரமணியம் இன்னொரு இடத்தில் (ப. 64) கூறுவது இது போன்ற சான்றுகளை மனத்தில் கொண்டு தான். ஆனால் இவையெல்லாம் உரை யாசிரியரின் புலமைக்குச் சான்று ஆகுமே தவிர இருவரும் ஒருவர் என்பதற்குச் சான்றாக அமையாது. எனவே நூலாசிரியரே உரையாசிரியர் என்பதும், உரையாசிரியரே நூலாசிரியர் என்பதும் மறுக்க முடியாத உண்மை இல்லை. இன்றைய நிலையில் ஐயத்திற்கு உரியது என்று தான் கூற வேண்டும்.

## 5.3. ஒத்து, இயல் தலைப்புகள்

முதலில் நூலைப் பற்றிய சில உண்மைகளைப் பார்ப்போம்' நூல் ஐந்து அதிகாரம் கொண்டது என்பது 'நன்னூல் ஆய்ந்தோர் நவின்ற ஐம்பொருள் தொன்னூல் விளக்கம்' (1, 3, 4) என்று கூறுவதால் அறியலாம். அதிகார வாரியாகச் சூத்திரங்களின் எண்ணிக்கை : சிறப்புப் பாயிரம் - எழுத்ததிகாரம் - 1 எழுத்து - 39 சொல் - 102, பொருள் - 58, யாப்பு 100, அணி 70 (370).

ஒவ்வொரு அதிகாரமும் ஒத்துக்களாகவும், சில ஒத்துக்கள் மட்டும் இயல்களாகவும் பகுக்கப்பட்டுள்ளன, எழுத்ததிகாரம் மூன்று ஒத்துக்களாகவும், (எழுத்தியல். எழுத்தின் பகுப்பு· எழுத்தின் விகாரம்) சொல்லதிகாரம் நான்கு ஒத்துகளாகவும் (சொற்பொதுவியல், பெயர். வினை. இடை, உரி) பொருளதிகாரம் ஒரு ஒத்தாகவும் (பதிகம்) யாப்பதிகாரம் மூன்று ஒத்துகளாகவும் (செய்யுள் உறுப்பு, செய்யுளியல், செய்யுள் மரபியல்) அணியதி காரம் இரண்டு ஒத்துகளாகவும், சொல்லணியியல், பொருளணி யியல்) பிரிக்கப்பட்டுள்ளன. சொல்லதிகாரப் பெயர், வினை, ஒத்துக்களே நான்கு நான்கு இயல்களாகப் (பெயர் ஒத்து ; வேற்றுமையியல், பகுபதப் பெயரியல், தொகை நிலைத் தொடர் மொழிப் பெயரியல்; வினை ஒத்து; முக்கால முற்று வினை, ஏவல், வியங்கோள், ஈரெச்சம், வினைக் குறிப்பு) பகுக்கப்பட்டுள்ளன.

பொதுப் பாயிரம் என்று ஒரு சூத்திரம் நூலின் முதலில் உள்ளது. அதற்குத் தனி எண் கொடுக்கப்பட்டுள்ளது. சிறப்புப் பாயிரம் - எழுத்ததிகாரம் என்ற தலைப்பில் கொடுக்கப்பட்ட சூத்திரத்துடனேயே நூல் தொடங்குகிறது. இது எழுத்ததி

காரத்தின் இறைவணக்கமாகவும் கருதத்தகுந்தது. ஏனென்றால் ஏனைய நான்கு அதிகாரங்களிலும் இறைவணக்கம் தனிச் சூத்திரமாக அமைக்கப்பட்டு நூலின் பகுதியாகக் கருதப் பட்டிருக்கிறது.

அதிகாரத்துக்கும், ஒத்துக்கும், நடுவிலும், ஒத்துக்கும் இயலுக்கும் நடுவிலும் சில சூத்திரங்கள் சிலவற்றில் மட்டுமே அமைக்கப்பட்டிருக்கின்றன. பொருளதிகாரத்திலும், அணியதி காரத்திலும் கடவுள் வாழ்த்துக்குப் பிறகு ஒன்று இரண்டு சூத்திரங்களுக்குப் பிறகு இயல் ஆரம்பிக்க, சொல்லதிகாரத்தில், சொற்பொதுவியல் என்ற முதல் இயலின் பகுதியாகக் கடவுள் வாழ்த்து சேர்க்கப்பட்டிருக்கிறது. அப்படியே பெயர் ஒத்தில் பெயரின் பொது இலக்கணம் கூறும் இரண்டு சூத்திரங்களும் வேற்றுமையியலின் பகுதியாக அமைந்திருக்க, வினை ஒத்தில், வினையின் பொது இலக்கணம் கூறும் இரண்டு சூத்திரங்களும் தனியாக அமைந்து, மூன்றாவது சூத்திரத்திலிருந்து முதல் இயலான 'முக்கால முற்று வினை' ஆரம்பிக்கிறது.

எழுத்ததிகாரம் மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அது ஒத்தா அல்லது இயலா என்ற குறிப்பு இல்லை. எழுத்தியல் என்ற பிரிவு முதலில் உள்ளதால் இயல் என்று கருதத் தோன்றுகிறது. இங்கு இன்னொரு முரணும் காணப்படுகிறது, மேலே குறிப்பிட்டபடி எழுத்தியல் என்ற தலைப்பு முதலிலும் 'முதலாவது எழுத்தின் தோற்றம் முற்றிற்று' என்று உரை முடிவிலும் காணப்படுகிறது.

இவையெல்லாம் களத்தூர் வேதகிரிமுதலியார் பதிப்பில் காணப்படுபவை. சுருக்கமாகச் சொன்னால் ஒத்து, இயல் தலைப்பு களும் அமைப்பும் ஒரு ஒழுங்கு முறையைப் பின்பற்றவில்லை. எனவே கிறித்துவத்தமிழ் அறிஞர்கள் புதிய கையெழுத்துப் பிரதி களைத் தேடிச் செம்பதிப்புப் பணியில் ஈடுபட்டுத் தொன்னூல் விளக்கக் கல்வியைப் பரப்ப வேண்டும்.

## 5.4. ஆய்வு வரலாறு

வேங்கடசாமி (1936) தொன்னூல் விளக்க வரிவடிவ சூத்தி ரத்தையும் அதன் உரையையும் எடுத்துக்காட்டி எகர ஏகார உயிரெழுத்துக்களில் யார் திருத்தம் செய்தது என்று தெரியவில்லை என்று குறிப்பிட்டது மேலே எடுத்துக் காட்டப்பட்டது. அவர் தொன்னூலைப் பற்றி வேறொன்றும் குறிப்பிடவில்லை.

இளவரசு (1963) இலக்கண வரலாற்றில் மூன்று செய்திகளைச் சுட்டிக் காட்டியுள்ளார். (ப.207)

1. பெரும்பாலும் நன்னூலைத் தழுவியது; 38 நூற்பாக்கள் நன்னூலிலிருந்து அவ்வாறே எடுத்துக் கொள்ளப்பட்டன.

2. சொல்லதிகாரம் வீரசோழியத்தைப் பின்பற்றியுள்ளது.

3. காலத்துக்கேற்ற மாற்றங்களைத் தழுவியுள்ளது.

சுப்பிரமணியன் 'இலக்கணத் தொகை; எழுத்து' (1967) 'சொல்' (1971) தொகுத்ததன் மூலம் வரலாற்று ஒப்பு இலக்கண வியலுக்கு (Historical study of grammars) அடித்தளம் அமைத்தார். (இது பற்றிய சில விமர்சனத்துக்குச் சண்முகம் 1980-81 பார்க்கவும்) எல்லா இலக்கண நூல்களையும் வரலாற்று நோக்கில் ஆராய வழி வகுத்தார். அவர் (1974) 'தொன்னூல் விளக்க நூல் மதிப்பீடு' என்ற கட்டுரையில் தொன்னூலின் முக்கியமான சூத்திரங்களின் கருத்துக்களைத் தொகுத்துக் கூறி எழுத்து, சொல் அதிகாரங்களில் உள்ள 142 நூற்பாக்களில் தொன்னூல் விளக்கத்துக்கு உரியவை 34 நன்னூல் நூற்பாக்கள் என்று குறிப்பிட்டு அவற்றைப் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார். தொ. வியில் நன்னூல் (38) சூத்திரம் உள்ளது என்று இளவரசு கூறியிருக்க, இவர் 34 என்று கூறி அவர் கருத்தை விமர்சிக்காமலேயே போய் விட்டார், 1978இல் தொன்னூல் விளக்கம்' திறனாய்வு, மூலம், விளக்கம் என்று மலிவு பதிப்பு ஒன்று வெளியிட்டு மேலே குறிப்பிட்டபடி விரிவாக முன்னுரை எழுதியுள்ளார். (இது பற்றி அடுத்த பகுதியில் விமர்சிக்கப்படும்).

தமிழ் எழுத்து இலக்கணங்களில் காணப்படும் ஆய்வு முறையையும், போக்கையும் குறிப்பிட்டு 'எழுத்திலக்கணப் போக்குகள்' என்று கட்டுரை (சண்முகம் 1974) ஆராய்கிறது. 1980 இல் வெளிவந்த 'எழுத்திலக்கணக் கோட்பாடு' வரலாற்று நிலையிலும் கோட்பாட்டு நிலையிலும் தொ.வி.யின் எழுத்ததிகாரத்தை ஆராய்கிறது. தொ. வி.யின் சொல்லதிகார முதல் நூற்பா' (சண்முகம், 1981) என்ற கட்டுரை 'சொல்' என்பதன் விளக்கமும் பிற கருத்துகளும் நன்னூல் சூத்திரங்களைத் தழுவினாலும் சில மாற்றங்கள் செய்து இலக்கணத்தில் வரலாற்று உணர்வை நீக்கும் பண்பைக் கடைப்பிடித்துள்ளது என விளக்குகிறது. 'சொல் விளக்கமும் பாகுபாடும்' என்ற மற்றொரு கட்டுரை (சண்முகம்1987) தமிழ் இலக்கணங்களில் காணப்படும் 'சொல்' பற்றிய விளக்கத்தையும் சொல்லின் வகை

களையும் விளக்கும்போது வெளிப்படும் தொ. வி. யின் தனித்துவத்தையும் விளக்குகிறது.

இன்னாசி (1984) தொ.வி. யின் உரையையும் சில சூத்திரங்களின் கருத்தையும் சில கட்டுரைகளில் விளக்கியுள்ளார்.

'வீரமாமுனிவர்' என்ற தொகுப்பு நூல் (பதிப்பர்கள் வி. மி. ஞானப்பிரகாசம் & க. ப. அறவாணன், 1985) வீரமாமுனிவரின் இலக்கண நூல்களை விளக்கும் போது தொன்னூல் விளக்கம் பற்றியும் (ஞானப் பிரகாசம்) சில கருத்துக்களை எடுத்துக் காட்டியுள்ளது. வீரமாமுனிவரின் எழுத்துச் சீர்திருத்தம் பற்றிய சாலினி இளந்திரையனின் கட்டுரை (1985) தொன்னூல் விளக்கச் சூத்திரம் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. உரையைப் பின்பற்றி இன்று வழங்கும் திருத்தத்தை அவர் கூறவில்லை என்று கருதியே அதைக் குறிப்பிடாமல் விட்டிருக்க வேண்டும்.

இளங்குமரன் (1988) இலக்கண வரலாற்றில் இன்று வழங்கும் எழுத்துச் சீர்திருத்தம் தொன்னூல் விளக்கத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதைச் சுட்டி, இந் நூற்பாவால் 'மேலாய்வுக்குரியதாக அமைகின்றது' என்று ஐயத்துடன் முடித்துள்ளார்.

இதுவரை நடைபெற்ற ஆய்வுகளில் இரண்டு பண்புகள் காணப்படுகின்றன, அவையாவன 1) வரலாற்று நோக்கு (இளவரசு சுப்பிரமணியம்) 2) மொழியியல் நோக்கு, வரலாற்று நோக்கில் நன்னூல் செல்வாக்கு மட்டுமே சுட்டிக் காட்டப் பட்டிருக்கிறதே தவிர நன்னூல் எப்படியெல்லாம் தழுவிக் கொள்ளப்பட்டிருக்கிறது? நேரடிச் செல்வாக்கிலும் தொன்னூல் விளக்கம் ஏதாவது தனித்துவம் காட்டியுள்ளதா போன்ற வேறு பல கேள்விகளையும் கேட்டுப் பதில் காண முயற்சிக்கவில்லை. மொழியியல் நோக்கில் சொல்லதிகாரம் இன்னும் ஆராயப் படவில்லை. எனவே இரண்டு நோக்கிலும் ஆராய்ச்சி தொடர வேண்டிய தேவை இருந்து வருகிறது.

## 5.5. வரலாற்று நோக்கு

வரலாற்று நோக்கைச் சரியான முறையில் நிர்ணயிக்க பாயிரம் உரை முதலியன என்ன கூறுகின்றன என்று முதலில் பார்ப்போம்.

> அரிய ஆசிரியர் அருந்தமிழ்ச் சொல்லிற்
> பிற நூல் முடிந்தது பெயர்த்து உடன் படுத்தியும்
> புற நூல் முடிந்தது பொருத்தியும் தான் ஒரு
> வழி நூல் முடித்தனன்......

மொழி நூலத்தர்......
இரோமை நாட்டின் நின்று எய்திய முனிவருள்......
......வீரமாமுனியே

என்ற பொதுப்பாயிர அடிகள் வீரமாமுனிவர் வெளி நாட்டவராக இருந்தும் தமிழில் பிற ஆசிரியர்களின் நூல்களைப் படித்து அவைகளை ஒத்துக் கொண்டும், தமிழில் இல்லாத பிற நூல்கள் (புற நூல்கள்) கருத்துக்களைச் சேர்த்தும் எழுதியதாகக் குறிப்பிடுகின்றன .

சிறப்புப் பாயிரத்தில் 'நன்னூல் ஆய்ந்தோர் நவின்ற ஐம்பொருள்' என்று பொதுவாகவே குறிப்பிட்டிருந்தாலும் உரை, 'ஈண்டு புது நூலாயினும் தொன்னூலிற்கு ஒரு புது வழியாயினும் காட்டுவது... கருதி; செந்தமிழ் உணர்ந்தோர் வழியே புறனடையால் சில விகற்பம் புற நூல் வழியே சென்று காட்டுதும்' என்று கூறுவதால் தமிழ் நூல் கருத்துகளும், பிற மொழி நூல் கருத்துகளும் சேர்த்து புது நூல் அல்லது பழைய நூல்களுக்குப் புதுவழி காட்டும் படி நூல் எழுதப்பட்டிருக்கிறது என்பது தெளிவாகிறது.

வரலாற்று நோக்கில் இதுவரை ஆராய்ந்தவர்கள் நன்னூல் வீரசோழியம் ஆகியவைகளின் செல்வாக்கு மட்டுமே குறிப்பிட்டுள்ளார்கள். இதற்கு ஒரு காரணம் 'தொன்னூல் விளக்கம், என்பதைக் காரணப் பெயர் என்று கொண்டு தமிழ் நூல் மூலங்களை மட்டும் தேடியதுதான்.

சான்றாகச் சுப்பிரமணியன் (1978 : 24) 'தொன்னூல்களை (இலக்கியங்களை) விளக்குவதற்குரிய விளக்கு போன்றும், தொன்னூல்களாகிய இலக்கண நூல்களைப் புரிந்து கொள்வதற்குத் துணையாக நிற்கின்ற விளக்கு போன்றும் அமைய வேண்டும் என்ற 'கொள்கையின் அடிப்படையில் படைத்து 'தொன்னூல் விளக்கம்' எனக் காரணப் பெயரினையும் சூட்டினார்' என்றும், இன்னாசி (1984 ; 37 ,பழந்தமிழ் இலக்கணங்களைச் சுருங்கச் சொல்லி அனைவரும் உணருமாறு செய்தலே தொன்னூல் விளக்கம் படைத்ததன் தலையாய நோக்கம் என்றும், ஞானப்பிரகாசம், (1985 : 92) (தலைப்பும் சுட்டிக் காட்டுவது போல் இந்நூல் பழைய நூல்களுக்கு விளக்கம் கூறுவதைத்தான் நோக்கமாகக் கொண்டுள்ளது என்றும் விளக்கியுள்ளார்கள். பிற நூல் (பிற மொழி நூல்கள்) தாக்கம் பற்றியோ புது வழிக் காட்டிய முயற்சி பற்றியோ வரலாற்று நோக்கில் ஆராய்ந்தவர்கள் கவலைப்படவில்லை. இருந்தாலும்

நன்னூல், வீர சோழியம் ஆகிய இரண்டையும் எப்படியெல்லாம் தழுவியுள்ளார்? பிற நூல்கள் என்னென்ன? அவை எப்படி தழுவப் பட்டுள்ளன என்று பார்ப்போம்.

### 5,5.1. நன்னூல் செல்வாக்கு

தொன்னூல் விளக்கத்தில் நன்னூல் சூத்திரங்கள் அப்படியே உள்ளன என இளவரசு குறிப்பிட்டாலும் சுப்பிரமணியம் 34 சூத்திரங்கள் அப்படியே உள்ளன என்று கூறிப் பட்டியல் போட்டுக் கூறியது மேலே சுட்டிக் காட்டப்பட்டது. இதை 'முழுத்தழுவல்' என்று பொதுமைப் படுத்தலாம்; இது தொடர்பாக இரண்டு செய்திகள் சுட்டிக் காட்டத் தகுந்தவை. 1. சுப்பிரமணியன் எடுத்துக் காட்டிய எல்லாச் சூத்திரங்களும் 'முழுத்தழுவல்' என்று கூற முடியாது. ஏனென்றால் சில சூத்திரங்களில் சொற்கள் மாற்றம் பெற்றிருக்கின்றன. அவைகளுக்குரிய இலக்கணச் சிறப்பு பின்னால் விளக்கப்படும்.

| நன்னூல் | தொன்னூல் விளக்கம் |
|---|---|
| 309 (ஈற்றின்) | 74 - θ |
| 199 - முன்னதின் | 97 - குறுகிற்று |
| 186 - கவ்வொற்று | 99 - கவ்வொடு |
| 307 - உறல் | 72 - வரல் |
| 347 - இரட்டல் | 68 - இரட்டா. |

இரண்டுக்கு மேற்பட்ட சூத்திரங்களை ஒன்றாக்கியும், ஒரு சூத்திரத்தைப் பகுதியாக்கியும் அமைத்துக் கொண்டது,

2. இன்னும் முழுத் தழுவலாகக் கொண்டு கருதக்கூடிய சூத்திரங்கள்.

| நன் | தொ. வி |
|---|---|
| (67) 350 | 102 . 3 |
| 168 | 116 . 3,4 |
| 174 | 98 . 3 -5 |
| 136 | 92. 2- 5 |
| 300 (4வது சூத் 'ஆ' | 67 (4வது அடி - சேர்ந்த) |
| 305 (2வது சூத் 'இம்முப்) | 70 3வது அடி' எ: உம்) |

3. வேறு பல சூத்திரங்கள் சொல் தழுவலாகக் கருதத் தகுந்தவை.

**சொல் நீக்கம்**

தொ.வி — ரல்வீற்று உயர் பெயர்க்களயும் எழல் ஈற்றயல்
அகரம் இ ஈ யாதல் ஆண்டை
ஆ ஈ ஆதல் அதனோடு எ ஒ உறல்
ஈற்று மிக்கு அயல் யாக்கெட்டு அதனயல்
நீடல் ஈர் உறல் இவையும் ஈண்டுருவே (74)

நன்னூல் : ரவ் வீற்று உயர் பெயர்க்கள் எழல் ஈற்றயல்
அகரம் இஈயாதல் ஆண்டை யா
ஈ ஆதல் அதனோடு த உறல் ஈற்றே
மிக்கு அயல் யாக்கெட்டு அதன் அயல் நீடல்
ஈற்றின் ஈர் உறல் இவையும் ஈண்டுருபே

இங்கு இரண்டு மாற்றங்கள் நடைபெற்றிருக்கின்றன.

1. ஒரு அடியிலுள்ள சொல் அடுத்த அடிக்குக் கொண்டு வந்தது.

2. 'ஈற்றின்' என்ற சொல் கடைசி அடியில் நீக்கி விட்டது ஈற்றின் என்ற சொல்லை நீக்கியதற்குக் காரணம் முதலிலேயே 'ரவ்வீற்று உயர் பெயர்' என்று ரகர ஈற்றுச்சொற்களின் புணர்ச்சி மாற்றம் பற்றிக் குறிப்பிட்டுவிட்டதால் மீண்டும் 'ஈறு' என்ற சொல் பயன்படுத்த தேவையில்லை என்று முனிவர் கருதியிருக்க வேண்டும். அந்தச் சொல்லை நீக்கியதால் எஞ்சியுள்ள அடிகளில் சொல் மாற்றி அடுத்த அடிக்குக்கொண்டு வந்திருக்க வேண்டும். இந்த இரண்டு மாற்றங்களும் இலக்கண கோட்பாட்டுச் சிந்தனை யைப் புலப்படுத்தா விட்டாலும் முனிவர் நன்னூல் சூத்திரத்தை எவ்வளவு தூரம் கவனித்துப் பார்த்து, புரிந்து கொண்டு சிறிய மாற்றங்களைச் செய்து புதிய நூலாக்கியுள்ளார் என்பதைப் புலப்படுத்துகின்றன.

**சொல் மாற்றம்**

தொன்னூல் விளக்க 72 ஆம் சூத்திரம்; நன்னூல் 397ஆம் சூத்திரத்தின் முழுத் தழுவல் ஆனாலும் நன்னூல் நான்காவது அடியில் உள்ள 'உறல்' என்பது தொ.வியில் 'வரல்' என்று மாற்றப் பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் முதலடியில் 'உறல்' என்று வந்திருப்பதால் ஒரே சொல்லைத் திரும்பத் திரும்ப கையாளக் கூடாது என்ற நடையழகு உத்தியை முனிவர் பின்பற்றியிருக்கலாம் என்று நினைக்கத் தோன்றுகிறது.

தொன்னூல் விளக்கம் 70ஆம் சூத்திரமும், நன்னூல் 305ஆம் சூத்திரத்தின் தழுவலாகக் கருதத் தகுந்ததே.

இம் முப் பெயர்க்கண் இயல்பும் ஏயும்
இகர நீட்சியும் உருபா மன்னே (நன்)

எப் பெயர்க் கண்ணும் இயல்பும் ஏயும்
இகர நீட்சியும் உருபா மன்னே (தொ.வி)

இங்கு நன்னூல் முதல் சொல் 'இம் முப்பெயர்' என்பது தொ.வியில் 'எப் பெயர்க் கண்ணும்' என மாற்றப்பட்டிருக்கிறது. காரணம் முனிவர் 'பொதுப் பெயர்' என்று ஒரு பாகுபாட்டை ஒத்துக் கொள்ளாததுதான். எனவே 'இம்மு' என்பதை எ-உம் என்று மாற்றித் தொ,வி. சூத்திரமாக்கி விட்டார்.

தொ.வி. 99ஆம் சூத்திரம் நன்-186 ஆம் சூத்திரத்தின் முழுத் தழுவலாகக் கருதப்படுவது. ஆனாலும் இங்கு - ஒற்று ஒடு; கரம் - கான்; ஆ - ஆய் என மாற்றப்பட்டிருக்கின்றன.

கிசையோடு கிசையும் பிறவும் சேரின்
நிலை ஈற்று உயிர் மெய் கவ்வொடு நீங்கவும்
றஃகான் னல ஆய்த் திரிதலுமாம் பிற (தொ.வி)

கிசையொடு கிசையும் சேரின் பிறவும்
நிலை ஈற்று உயிர்மெய் கவ்வொற்று
றகரம் னலவாத் திரிதலுமாம்பிற. நீங்கலும் (நன்)

நன்னூலில் உள்ள 'றகரம் (னல) வாத் (திரிதல்)' என்பவை 'றஃகான்...ஆய்' என்று திருத்தப்பட்டிருப்பதால் சிறப்பு ஏதும் இல்லை. இன்னொரு நூலின் பகுதியாய் அமையும் போது ஆசிரியருக்கு உள்ள சுதந்திர உணர்வை அவை காட்டுகின்றன. ஆனால் 'கவ் வொற்று' என்பது 'கவ்வொடு' என்று ஒரு பெயர்ச் சொல்லை வேற்றுமை உருபாக மாற்றியது ஓரளவு சிறப்புடையது. முன்னுள்ள உயிர் மெய்யும் ககர ஒற்றும் கெடுவதும் அங்கு விளக்கப்படுவதை உம்மைத் தொகையாக நன்னூலார் பயன் படுத்தியுள்ளார். 'க' என்பதே இலக்கணத்தில் ககர ஒற்றைக் குறிக்கும். அந்தக் கருத்தின் அடிப்படையில் 'க' என்று கொண்டு கருத்துத் தெளிவுக்காக மூன்றாம் வேற்றுமை உருபைக் கையாண்டு சூத்திரக் கருத்தைத் தெளிவுபடுத்தி விட்டார். இந்த மாற்றம் முனிவரின் நன்னூல் சூத்திரம் வாசிப்பையும், புரிதலையும் புலப்

படுத்துவதோடு புதுநூலின் பகுதியாக அமைக்கும்போது எளிமைப் படுத்த வேண்டும் என்ற நோக்கத்தையும் காட்டிவிடுகிறது.

தொ.வி. 97ஆம் சூத்திரமும் நன்னூல் 199ஆம் சூத்திரத்தின் தழுவலாக கருதப்படும் சூத்திரங்களில் ஒன்று. ஆனால் இங்கு நன்னூலின், முன்னதின் முன்னல (32) என்ற தொடர் முன்னது குறுகி மற்று (32) என்று மாற்றப்பட்டுள்ளது இலக்கணச் சிறப்பு வாய்ந்தது.

> ஒன்ப தொழித்த எண் ஒன்பதும் இரட்டின்
> முன்னதின் முன்னல ஓட உயிர்வரின்
> வவ்வு மெய்வரின் வந்தது மிகல்நெறி (நன். 199)

> ஒன்பது ஒழித்த எண் ஒன்பதும் இரட்டின்
> முன்னது குறுகி மற்று ஓட உயிர் வரின்
> வவ்வும் மெய்வரின் வந்தது மிகல் நெறி (தொ.வி. 97)

இந்தச் சூத்திரம் ஒன்று முதல் எட்டு வரையுள்ள எண்ணுப் பெயர்கள் இரட்டித்து வரும் போது ஏற்படும் புணர்ச்சி மாற்றங்களை விளக்குகிறது. நன்னூல் சூத்திரக் கருத்துப்படி முன்னெழுத்து தவிர ஏனைய எழுத்துகள் கெட்டு (ஒன்று+ஒன்று; ஒ+ஒன்று; மூன்று+மூன்று; மூ+மூன்று) நிலைமொழியில் உயிரெழுத்து இருந்தால் வகர மெய்யும் (ஒ+ஒன்று, ஒவ்வொன்று) மெய்யும் இருந்தால் அந்த மெய்யும் மூ+மூன்று, மும்மூன்று மிகுந்து வரும், அப்படியானால் நெட்டெழுத்து முதலாக எண்ணுப் பெயர்களில் வருமொழி முதலெழுத்து குறுகுவதற்குச் சூத்திரத்தில் இடம் இல்லை. எனவேதான் மயிலை நாதர் "நெறி என்ற மிகையானே மூன்றும், நான்கும், ஆறும், ஏழும் (அதாவது நெட்டெழுத்தை முதலாக உடைய எண்ணுப் பெயர்கள்) என்பவற்றிற்குக் குறுக்கமும் கொள்க'' என்று ஒரு விதி அமைக்க வேண்டியதாகி விட்டது. நன்னூல் சூத்திரத்தில் இருந்த 'குன்றக் கூறல்' என்ற இந்தக் குறையை உணர்த்த முனிவர் 'முதலெழுத்து (முன்னது) குறுகி மற்ற எழுத்துக்கள் ஓட' என்று சூத்திரம் அமைத்தார். நெட்டெழுத்துக்களை முதலாக உடைய எண்ணுப் பெயர்கள் குறுகி வருவதற்கும் சூத்திரத்திலேயே இடம் கொடுத்தது சிறப்பானது; பாராட்டுவதற்கும் உரியது. இது பெஸ்கி நன்னூல் சூத்திரத்தையும் உரையையும் படித்து புரிந்து கொண்டு குறை நீக்கிச் சூத்திரம் செய்த நுட்பத்தைப் புலப்படுத்துகிறது.

பொதுவாக வேறு பல சூத்திரங்களில் சொற்களை முன் பின் மாற்றி, வேறு சில சொற்களைப் பெய்து, பிற நிலையில் ஒற்றுமை

இல்லாதது போல் செய்து விடுகிறார். ஆனால் கொஞ்சம் கவனமாகப் பார்த்தால் நன்னூலைத் தழுவியதைக் கண்டு பிடிக்க முடியும்.

எழுவாய் பற்றிய தொன்னூல் சூத்திரமும் நன்னூல் சூத்திரமும் ஒற்றுமையும் வேற்றுமையும் உடையவை.

எழுவாய் உருபாம் இயல்பின் பெயரே
மீண்டதன் பொருளாம் வினைபெயர் வினாவே
(தொ.வி56)

எழுவாய் உருபு திரிபில் பெயரே
வினை பெயர் வினாக்கொளல் அதன் பயனிலையே
(நன். 6. 295)

இங்குத் 'திரிபில்' என்பது எதிர் மறையாகக் கூறப்பட்டிருப்பதே 'இயல்பின்' என்று உடன்பாட்டுநிலையில் மாற்றப் பட்டிருக்கிறது. இரண்டாவது அடி கொஞ்சம் வேறுபாடானது. ஆனாலும் 'பயனிலை' என்பது 'பொருள்' என்று சொல் மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது என்பது கவனிக்கத் தகுந்தது. பிற வேற்றுமை சூத்திரங்களைப் பார்த்தால் இந்த மாற்றத்துக்குக் காரணம் புரிந்து விடும். நன்னூலிலும், தொ.வி. யிலும் இரண்டாம் மூன்றாம் வேற்றுமையில் 'அதன் பொருள்' என்று தொடர் இருக்கிறது. ஆகவே அடுத்த இரண்டு சூத்திரத் தோடும் ஒற்றுமை ஏற்படும் படியே முதல் வேற்றுமையிலும் 'அதன் பொருள்' என்ற தொடரைச் சேர்த்திருக்க வேண்டும் என்று ஊகிப்பது தவறு ஆகாது. இன்னொரு சூத்திரத்தில் உடன்பாட்டுச் சொல், எதிர் மறைக்குறிப்புவினை என்று நன்னூலார் பயன்படுத்தியதைத் ('தொகை பெறும்...அஃது இன்றியும் இயலும்' நன். 428,2,3) தொ.வி, (136) உடன் பாட்டுச் சொல், அதன் எதிர் மறைச் சொல் (தொகை பெறும்...தொகாமை நடக்கவும் பெறும்) என்று மாற்றி அமைத்தது குறிப்பிடத்தகுந்தது.

ஆறாம் வேற்றுமை பற்றிய தொ.வி, சூத்திரமும் (61) நன்னூல் சூத்திரமும் (300) முழுத்தழுவல் என்று கருதக் கூடியவை. தொ.வி.யில் நான்காம் அடியில் 'சேர்ந்த' என்ற சொல் நன்னூல் 'ஆம்' என்ற போன்ற சொல்லுக்குப் பதிலாகப் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.

சில சொற்களை மாற்றுவதோடு சில தொடர்களை நீக்கியே தொ.வி. சூத்திரம் உருவாக்கப் பட்டிருக்கிறது என்றும் அது

இலக்கணப் பொருள் மட்டுமல்லாமல் மொழிபற்றிய அவருடைய கோட்பாட்டைப் புலப்படுத்துவதாகவும் அமைந்திருக்கிறது என்றும் எடுத்துக்காட்டத் தகுந்தது.

பகாப்பதம் பற்றிய வரைவு இலக்கணத் தொ.வி. சூத்திரம் (46) நன்னூலைத் (131) தழுவியதுதான். இதைக் குறைத்தழுவல் என்று வேண்டுமானால் பொதுமைப் படுத்தலாம்.

பகாப் பதம் என்ப பயனால் குறியால்
பகாது ஒன்றாகிப் பகுப்பின் பயனிலா
நிகழ்ந்து இயல்கின்ற நால்வகைச்சொல்லே (தொ.வி)

நன்னூலில் 'பயனற்று' என்பது தொ. வியில் 'பயனிலா' என்று கூறினாலும், அதற்கு விளக்கம் போலவே 'பயனால் குறியால் பகாது ஒன்றாகி' என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது பொருளாலும் வடிவத்தாலும் பகுக்க முடியாத என்று பொருள். நன்னூலார் பொருளுக்கும் வடிவத்துக்கும் எந்தவித உறவும் இல்லை என்பதை உணர்த்த 'இடு குறி' என்று கூறினார். அது எல்லாச் சொல்லுக்கும் பொருந்தும். எனவே 'குறி' வடிவம் என்று கொண்டு 'பயன்' - (பொருள்) என்பதைச் சேர்த்து எந்த நிலையிலும் பகுக்க முடியாதது என்று கூறவே 'பயனால் குறியால் பகாது ஒன்றாகி' என்று பெஸ்கி குறிப்பிட்டார். பெயர், வினை, இடை, உரி நான்கையும், என்பதை முனிவர், 'நால்வகைச் சொல்லே' என்று பொதுமைப்படுத்திக் கூறிவிட்டார். ஏனென்றால் எச் சொல்லும் பெயர், வினை, இடை, உரி என்று நான்கு' (42.1) 'என்று முன்னரே சொல் வகையை விளக்கியுள்ளார்.

நன்னூலில் உள்ள 'முன்னே ஒன்றாய்' என்ற தொடருக்கு இணையாகத் தொ.வி. யில் எதுவும் இல்லாததே சிறப்பு வாய்ந்தது. 'முன்னே ஒன்றாய்' என்பதை மயிலைநாதர் 'தொன்று தொட்டு ஒரு பிண்டமாய் நடப்பவை' என்றும், சங்கர நமச்சிவாயர், 'படைப்புக் காலந்தொட்டு ஒன்றாய் முடிபவை' என்றும் உரை எழுதுவதால் சொற்கள் ஆதிக்காலம் தொட்டு வரும் என்ற வரலாற்றுக் கட்டுப்பாடு ஒரு நியதியாய் அமைந்து விடுகிறது. ஆனால் மொழியில் காலந்தோறும் பல சொற்கள் உண்டாகின்றன. இந்த உண்மையை உணர்ந்ததாலேயே முனிவர் அந்தத் தொடரை நீக்கியிருக்க வேண்டும். மொழி வளர்ச்சியைப் பழமையின் பெயரால் கட்டுப்படுத்தக் கூடாது என்றும், இலக்கணம் பழங்கால மொழிக்குமல்லாமல் மொழி வளர்ச்சிக்கும் இடம் கொடுக்க

வேண்டும் என்றும் இலக்கணம் பற்றிய பெஸ்கியின் கோட்பாடும் இங்குப் புதைந்துள்ளதாகக் கருதலாம். ஆகு பெயர் பற்றிய சூத்திரமும் இந்தக் கருத்தை உறுதிப்படுத்துகிறது.

பொருள் முதலாறோ டளவை சொல் தானி
கருவி காரியம் கருத்தன் ஆகியுள்
ஒன்றன் பெயரால் அதற்கியைப் பிறிதிற்
தொன்முறை உரைப்பன ஆகு பெயரே -

என்ற நன்னூல் சூத்திரத்தின் (290) தழுவலாகத் தொ. வி சூத்திரம் (49) அமைந்துள்ளதாகக் கருதலாம்.

ஆகு பெயர் என்பது அவ் அவ முதல் சினை
கருவி காரியம் பண்பு இவற்று ஒன்றன் பெயர்
பிறிது ஒன்றற்கு உரைக்கும் பெற்றி தானே

என்பதே அந்தச் சூத்திரம். இங்குக் கருத்தளவில் தொ. வியில் இரண்டு மாற்றம் செய்யப்பட்டுள்ளன.

1. 'ஒன்றன் பெயரான் அதற்கு இயைபிறிதில்' என்ற தொடரை 'ஒன்றன் பெயர் பிறிது ஒன்றிற்கு' என்று மாற்றியதன் மூலம் முக்கியமாக 'இயைபு' (தொடர்புடைய கருத்து) என்பது விடப்பட்டுள்ளது. பொதுவாகப் பேசுபவர் தொடர்பு இல்லாத சொற்களைப் பயன்படுத்தமாட்டார். எனவே அதைக் குறிப்பிட வேண்டிய தேவை இல்லை என்று முனிவர் கருதியிருக்க வேண்டும்.

2. 'தொன்முறை' என்ற தொடரை நீக்கியது சிறப்பானது. இதற்கு மயிலைநாதர் 'வரலாற்று முறை' என்றும், சங்கர நமச்சிவாயர் 'தொன்று தொட்டு வருமுறை' என்றும் விளக்கி யுள்ளதால் ஆகு பெயரும் பழங்காலம் தொட்டே வர வேண்டும் என்ற கட்டுப்பாடு உடையதாகி விடுகிறது. இது பொருந்தாது. ஏனென்றால் ஒருகை குறைகிறது என்றால் ஒரு ஆள் குறைகிறது என்று பொருள், இது சினையாகு பெயர், 'பஸ்ஸில் 40 டிக்கெட் உள்ளது' என்றால் டிக்கெட் வாங்கிய மனிதர்கள் 40 பேர் இருக்கிறார்கள் என்று பொருள். இதை உடைமை ஆகு பெயர் என்று கூறலாமா? எப்படியானாலும் காலந்தோறும் புதுப் புது ஆகு பெயர்கள் உண்டாகும் என்ற மொழி வளர்ச்சி உண்மையை உணர்ந்ததாலேயே நன்னூலார் வகுத்த கட்டுப்பாட்டை முனிவர் நீக்கியிருக்க வேண்டும். எனவே பகுபதம், ஆகுபெயர் என்பதன் விளக்கங்களில் மொழி வளர்ச்சியை உணர்ந்த முனிவர்

இலக்கணத்தில் வரலாற்றுக் கட்டுப்பாடு விதிக்கக் கூடாது என்று கருதியது புலப்படுகிறது.

உரிச் சொல்லின் பொது இலக்கணமும், நன்னூலைத் தழுவிய தாகக் கருத இடம் இருக்கிறது. அதே சமயத்தில் சில கருத்துக் களை நீக்கியதன் மூலம் கோட்பாட்டு நிலையில் தொ. வி. சிறந்து விளங்குகிறது.

பல்வகைப் பண்பும் பகர் பெயராகி
ஒரு குணம் பல குணம் தழுவிப் பெயர் வினை
ஒருவா செய்யுட்கு உரியன உரிச் சொல்

என்ற நன்னூல் சூத்திரம் (442) நான்கு கருத்துகளை உரிச் சொல்லின் இலக்கணமாகக் குறிப்பிடுகிறது. அவையாவன :

1. பண்புப் பெயராக இருக்கும்.

2. ஒரு பொருள் பல சொல்லாகவும் பல பொருள் ஒரு சொல்லாகவும் இருக்கும்,

3. பெயர், வினைகளைத் தழுவி வரும்,

4. செய்யுளுக்குரியனவாக வரும். ஆனால்,

உரிச் சொல் என்பது உரிய பற்குண சொல்
ஆகிப் பெயர் வினை அணைந்து வருமே

என்ற தொ. வி. (138) சூத்திரம் இரண்டு பண்புகளையே குறிப்பிடுகிறது.

1. பல பண்புகளைக் குறிப்பது.

2. பெயர், வினைகளைத் தழுவிவரும். பண்பைக் குறிக்கும் சொல் என்ற கருத்தில் முனிவருக்கு உடன்பாடு என்றாலும், அவைகளைப் பெயராகக் கருதுவதில் உடன்பாடு இல்லை. ஏனென்றால் அவைகளைப் பெயராகக் கருதினால் உரிச் சொல் என்பதைத் தனி வகைச் சொல் வகைப்பாடாகக் கருத முடியாது. இது முன்னர் 'நால்வகைச் சொல்' என்ற கருத்துக்கு முரணாகி விடும். எனவே பெயர்ச் சொல் என்ற கருத்தை நீக்கி விட்டார். பல பொருள் ஒரு சொல், ஒரு பொருள் பல சொல் என்பது பெயர், வினை, இடை ஆகிய மூன்றுக்கும் கூட உண்டு. எனவே அதை உரிச்சொல்லின் பண்பாகக் கருதக் கூடாது என்றே அந்தக் கருத்தையும் நீக்கி விட்டார். எனவே பெயர், வினைகளைத் தழுவி வரும் என்பது அடையாக வரும் என்று பொருள். எனவே செய்யுளில்தான் உரிச் சொல் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற

கட்டாயம் இல்லை. பேச்சு மொழியிலும் உரிச்சொல் பயன் படலாம் என்ற கருத்திலேயே 'செய்யுளுக்குரியது' என்ற கருத்தையும் நீக்கி விட்டார். திரிசொல் விளக்கத்திலும் நன்னூலில் காணப்படும் 'அரிதுணர் பொருள்' என்ற தொடரைத் தொ. வியில் நீக்கியதன் சிறப்பு பின்னால் விளக்கப்படும்.

ஒரே கருத்தை வேறு பொழிப்பு மாற்றம் செய்து (paraphrase) கூறுவதால் முன்னதை மாற்றி எளிமைப்படுத்தலாம். இந்த முறை குறிப்பு பற்றிய சூத்திரங்களில் காணப்படுகிறது. வினைக் குறிப்பு பற்றிய வரைவு இலக்கணம் பற்றிய நன்னூல் சூத்திரம் தத்துவார்த்தமானது; தொ. வி. சூத்திரம் இலக்கண முறையில் ஆனது. எனவே முன்னதைவிடப் பின்னது எளிமையானது'

வினைக் குறிப்பு என்ப வினை போல விகுதி
பெற்று இடம் பாற்கும் பெயர்ப் பகுபதமே

என்ற தொ. வி. சூத்திரம் (123) இணையான நன்னூல் சூத்திரம் (321)

பொருள் முதல் ஆறினும் தோற்றி முன் ஆறனுள்
வினை முதல் மாத்திரை விளக்கல் வினைக் குறிப்பே.

என்பது. இவை ஒன்றுக்கொன்று மாறுபட்டது போலக் காணப் பட்டாலும், அடிப்படைக் கருத்து ஒன்றுதான். ஆனால் மேலே குறிப்பிட்டபடி தொ. வி. சூத்திரம் இலக்கண முறைமையானது என்பது எப்படி என்று பார்ப்போம்.

தொ, வி. சூத்திரம் தெரிநிலை வினைச் சொல் போல இடம் - பால் விகுதி பெற்று பெயர்ப் பகுபதமாகக் குறிப்பு வினை அமையும் என்று கூறியுள்ளது. மொழி அமைப்பு ரீதியான - இலக்கண ரீதியான விளக்கம் என்பது தெளிவு. ஆனால் பொருள், இடம்' காலம், சினை, குணம், தொழில் ஆகிய பொருள் அடியாகத் தோன்றும் சொற்கள் செய்பவன், கருவி முதலிய வினைச் சொல்லுக்குக் கூறிய ஆறு பண்புகளில், செய்பவன் - கருத்தாவை விளக்கும் என்று நன்னூல் குறிப்பிடுவது தத்துவார்த்த நிலையிலான - கருத்து நிலையிலான விளக்கம். பொருள் முதல் ஆறும் பெயர்ச் சொல்லின் பண்பு என்பதால் முனிவர் நேரடி யாகவே 'பெயர்ப் பகுபதம்' என்று இலக்கண முறையில் குறிப்பிட்டு விட்டார். செய்பவனை விளக்கும் பொழுது இடம் - பால், விகுதி ஏற்பதையே குறிக்கும். எனவே நன்னூல் சூத்திரமும், தொன்னூல் சூத்திரமும் ஒரே திரண்ட கருத்தைத் தான் கூறுகிறது : கூறும் முறைதான் - முன் சொன்னது போல மாறுபட்டது.

அப்படியே இன்னொரு தொ. வி, சூத்திரமும் அமைத்துள்ளது. இங்கு நன்னூலும், தொ. வியும் இலக்கண வழியில் சூத்திரத்தை அமைத்திருந்தாலும் பொதுமையும் சிறப்பும் என்ற முறையில் நன்னூலும், சிறப்பு (அதாவது சிறப்பு, சிறப்பு) என்ற முறையில் தொ. வியும் சூத்திரத்தை அமைத்துள்ளன.

தரல் வரல் கொடை செலல் சாரும் படர்க்கை
எழுவாய் இரண்டும் எஞ்சிய ஏற்கும்

என்ற நன்னூல் சூத்திரம் (381) தா, வா, கொடு, செல் ஆகிய சொற்களும் படர்க்கையிலும்; அவைகளில் முதல் இரண்டு சொற்களான தரல், வரல் ஆகிய தன்மை, முன்னிலையிலும் வரும் என்பதை உறவு நிலையில் வைத்துக் கூறியுள்ளது. எனவே படித்தவுடனேயே கருத்தைப் புரிந்து கொள்ள முடியாது,

வரல், தரல் மூவிடம் மருவுதற்கு உரிய
செலல், கொடை சேரும் படர்க்கை அன்றே

என்ற தொ. வி. சூத்திரம் (122) வா, தா, ஆகிய இரண்டு சொற்கள் தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்று இடத்திலும் செல், கொடு ஆகிய இரண்டும் படர்க்கையிலும் வரும் என நேரடியாகக் கருத்தைத் தெளிவுபடுத்துகின்றன. நன்னூல் சூத்திரம் சொற்களிடையே காணப்படும் பொதுமைக்கும், தொ.வி. சூத்திரம் சொற்களின் பகிர்வில் காணப்படும் பொதுமைக்கும் முக்கியத்துவம் கொடுத்துள்ளன. நன்னூல் தரல், வரல் என்பதைத் தொ. வி, வரல், தரல் என்றும், கொடை, செலல் என்பதைச் செலல், கொடை என்றும் முறை மாற்றிக் கூறியுள்ளது.

தொ. வி.யில் ஒரு சூத்திரம் நன்னூலின் தழுவல் என்று கூற முடியாதபடி அமைந்தாலும், கருத்து ஒற்றுமை எளிமை ஆகியவற்றால் தொ. வி. நன்னூலுக்குப்பட்ட கடனை எளிதாக உணர்ந்து கொள்ளலாம். ஆனாலும் நன்னூல் சூத்திரத்தில் ஒரு வினைச்சொல் இல்லாமல் மயக்கமாக இருப்பது, உரிய வினைச் சொல்லைச் சேர்த்து தொ. வி. சூத்திரமாக அமைத்து பொருள் மயக்கம் தீர்க்கப்பட்டிருக்கிறது.

தொழிலும் காலமும் தோன்றிப் பால் வினை
ஒழிய நிற்பது வினையெச்சம்மே

என்பது வினையெச்சம் பற்றிய நன்னூல். சூத்திரம் (342)

இங்குப் 'பால் வினை ஒழிய நிற்பது' என்பது பால், வினை என்ற இரண்டு பெயர்களும் ஒழிய நிற்பது என்ற வினையை ஏற்று வருவது போலக் காணப்பட்டாலும் அதன் சரியான பொருள் பால் தோன்றாது வினையைத் தழுவி வரும் என்பதே. எனவே நன்னூல் சூத்திரம் பொருள் மயக்கம் தருவது. ஆனால் தொ. வி. பெயரெச்சம், வினையெச்சம் ஆகிய இரண்டுக்கும் பொதுவாக்கி,

எச்சமே தொழில் பொழுது என்று இவை தோன்றி
இடம் பால் தோன்றாது எஞ்சிய வினை......

என்று (117 : 42) கூறியிருப்பதால் எச்சச் சொற்களில் தொழில் (வினைப் பகுதி) பொழுது (கால விகுதி) அமைந்து, இடம் பாலுக்குரியவை அமையாது (தோன்றாது) வினைச் சொல்லாக இருக்கும் என்பது தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. '(பால்) தோன்றாது' என்ற வினைச் சொல்லைச் சேர்த்ததன் மூலம் சூத்திரத்தின் கருத்தை எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளும்படி பெஸ்கி செய்துவிட்டார். 'தோன்றாது' என்ற வினை மயிலைநாதர் சங்கர நமச்சிவாயர் உரைகளில் தெளிவுபடுத்தப்பட்டிருப்பதால் இந்தக் கருத்தை நன்னூல் உரைகளிலிருந்து பெற்றுச் சூத்திரத்தில் சேர்த்திருக்கலாம் என்று கருதத் தோன்றுகிறது.

இயற் சொல் விளக்கத்தில் 'யார்க்கும் தம் பொருள் விளக்கம்' என்ற நன்னூல் கருத்தை (271) தொ. வி. 'எவர்க்கும் தன் பொருள் விளக்கல்' என்று (43.2) தழுவிக் கொண்டதோடு 'எளிது' என்ற வினையடையைத் தொ. வி. கூடுதலாகச் சேர்த்தது அதன் மொழி பற்றிய கோட்பாட்டைப் புலப்படுத்தும். திரி சொல் 'அரிதுணர் பொருள்' என்ற நன்னூலார் கருத்தில் (272 : 3) முனிவருக்கு உடன்பாடு இல்லை என்பதாலேயே அந்தத் தொடரையே நீக்கி விட்டார். அதே சமயத்தில் 'இயற் சொல்' என்பது திரி சொல்லுக்கு மாறுபட்டது என்பதை வலியுறுத்தவே' 'எளிது' என்ற வினையடையை இயற் சொல்லின் விளக்கத்தில் சேர்த்திருக்க வேண்டும்.

## 5.5.2. நன்னூல் உரைகள்

நன்னூல் உரையின் செல்வாக்கினால் தொ. வி. சூத்திரம் மாற்றம் பெற்றதற்கும் சில சான்றுகள் காணப்படுகின்றன.

தொ. வி. சூத்திரம் (68) நன்னூல் சூத்திரத்தின் (247) முழுத் தழுவலாகவே கருதப்படுகிறது. ஆனால் நன்னூல் சூத்திரத்தில்

கடைசிச் சொல் 'இரட்டல' என்று இருக்கத் தொ. வி. சூத்திரத்தின் கடைசிச் சொல் 'இரட்டா' என்று காணப்படுகிறது. மயிலைநாதரும், சங்கர நமச்சிவாயரும் 'இரட்டாவாம்' என்று உரை எழுதியிருப்பதைப் பார்க்கும் போது அந்த உரைகளின் செல்வாக்காலேயே தொ. வி. சூத்திரத்தில் சொல் மாற்றம் பெற்றிருக்கலாம் என்று நினைக்கத் தோன்றுகிறது.

தொ. வி. 135 ஆம் சூத்திரம், நன்னூல் 399, 427 ஆகிய இரண்டு சூத்திரங்களின் தழுவலாகக் கருதலாம். நன்னூலில் (399) 'இனைத்து என்று அறி பொருள்' என்று இருக்க, தொ. வியில் 'வரைப்படும் எண்' என்று உள்ளது. மயிலைநாதரும் உரையில் 'இனைத்து என்று வரையறுத்து உணர்த்தப்படும் பொருள் என்று உரை எழுதியதை ஒட்டி, முனிவர் தொ, வி. சூத்திரத்தைத் திருத்தி அமைத்திருக்கலாம். இவை இரண்டும் 'சொல் தழுவல்' என்று கூறலாம். வேறு சில இடங்களில் ஒரு புது சூத்திரம் அமைப்ப தற்கும், ஒரு சூத்திரத்தில் புதிய கருத்தைச் சேர்ப்பதற்கும் நன்னூல் உரைகள் வழிகாட்டியிருக்கலாமோ என்று கருதத் தோன்றுகிறது.

பெயரிலும், வினையிலும் இடைநிலை வரலாம் என்று பொதுவாகக் குறிப்பிட்டு (141) வினையில் வரும் இடைநிலைகளை மட்டும் நன்னூல் (142 : 4) விளக்கியுள்ளது. எனவே நூலமைப்பு ஒழுங்கின்மை அமைந்து விடுகிறது. எனவே பகுபதப் பெயர்களை விளக்கும் போது பெயரில் வரும் இடை நிலைகளுக்கும் தனியே (சூ 85) முனிவர் ஒரு சூத்திரம் அமைத்துள்ளார். அதற்கு நன்னூல் உரையே மூல காரணமாக இருக்கலாம். ஏனென்றால் பெயரில் இடைநிலை வரலாம் என்ற நன்னூல் சூத்திரத்தில் (141) சங்கர நமச்சிவாயரே 'அறிஞன்' என்பது ஞகர இடைநிலை பெற்றது; ஓதுவான், பாடுவான் என்பன வகர இடைநிலை பெற்றன. வலைச்சி, புலைச்சி என்பன சகர நிலை பெற்றன'...... என்று உரையில் குறிப்பிட்டுள்ளார். இருந்தாலும் இரண்டு செய்திகள் சுட்டிக்காட்டத் தகுந்தவை.

1. நன்னூலில் நூலமைப்பு குறை இருக்கிறது என்று முனிவர் உணர்ந்ததாலேயே புதிய சூத்திரம் அமைத்தார்.

2. சங்கர நமச்சிவாயர் கருத்தை முழுவதும் ஏற்றுக் கொள்ளாமல் ஞ, ந. ஆகிய இரண்டை மட்டுமே (அறிநர், அறிஞன்)

இடைநிலைகளாகக் கூறினார்; அதாவது தன்னுடைய சொந்த கருத்துக்கு ஏற்பதை மட்டும் தழுவிக் கொண்டார்.

பல, சில, என்ற பெயர்கள் இரட்டித்து வரும்போது ஏற்படும் பல வகை மாற்றங்களை நன்னூல் (170) விவரித்துள்ளது. அவை களில் பல்ல பல, சில்ல சில: பலாம் சிலாம் என்று மாறும் இரண்டு மாற்றங்களை நன்னூல் சூத்திரம் குறிப்பிடவில்லை. மயிலை நாதர் 'பிற' என்ற மிகையானே பல்ல பல, சில்ல சில என்ற மிகையும், பலாம், சிலாம் என அகரம் ஆகாரமாய் ஒற்றுமிகலும்... கொள்க; என்று எடுத்துக்காட்டியுள்ளார். இந்தக் கருத்தை மனதில் வாங்கிக்கொண்டு முனிவர் சூத்திரம் அமைத்த முறை பாராட்டுவதற்குரியது. நன்னூலார் 'இயல்பும்' என்று கூறியது வருமொழியை ஒட்டிய மாற்றம்; பல+பல; பல பல. ஆனால் பல்ல பல என்பது நிலை மொழியில் ஏற்படும் மாற்றம். எனவே 'கடை மெய்' மிகலும்' (தொ. வி. 31.2) என்று பொதுமைப்படுத்தி யுள்ளார். கடை மெய் என்பது வருமொழி மெய் என்று பொருள் படும். நன்னூலார் 'அகரம் ஏக லகரம் றகர மாகலும்' என்று கூறியதை முனிவர் ஈறு போலறவ் ஆதலும் லா ஆதலுமாம்' என்று நிலை மொழியில் புதிய மாற்றம் ஒன்றைச் சேர்த்து விட்டார். இங்கு மொழி அமைப்பு பற்றிய கருத்தை உரையாசிரியர்களிட மிருந்து பெற்றாலும் சூத்திரமாகச் சிறப்பாகச் செய்த பெருமை முனிவருக்கே உரியது. நன்னூலார் பெயர்ச் சொல்லின் வரை விலக்கணத்தில் (275) 'ஆக்கம்' என்று குறிப்பிட்டதை 'ஆகு பெயர்' என்று முனிவர் விளக்கியது (54) மயிலை நாதர் செல்வாக்கால் இருக்கலாம். ஏனெனில் அங்கே 'மரபு பெயரே ஆகுபெயரும் காரணப் பெயருள் அடங்குமேனும் முதலது இடுகுறியாய மரபு காரணமாகவும் ஆகு பெயர் பகுதி விகுதியாய் காரணம் விளக்காததாவும் வரும்' என்று விளக்கியுள்ளார்.

தொ. வி.யில் பிற இலக்கணச் செல்வாக்கும் உள்ளது என்று அறிஞர்களால் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. தொ.வி. சொல்லதி காரத்தில் வீர சோழியக்காரரைப் பின்பற்றுகிறது' என்ற இளவரசு (1963; 207) கருத்து மிகையானதாகவே கருதவேண்டும். சுப்பிரமணியன் (1978 : 28) தொ. வி. 39 ஆம் சூத்திரம் வீர சோழியம் 29 ஆம சூத்திரக் கருத்து என்று மட்டுமே கூறியுள்ளார். தொ. வி. 86, 87 ஆகிய இரண்டு சூத்திரங்களும் முறையே வீர சோழியம் 11, 12 ஆகிய சூத்திரக் கருத்துக்களைத் தழுவியது என்று கூறலாம். எண்ணுப் பெயர், மூவிடப் பெயர் மாற்றங்களை

ஒலியனியல் மாற்றமாக விளக்காது மாற்றுருபுகளாகத் தொகுத்துக் கூறியது (தொ. வி. 94, 68) வீர சோழியம் 23 ஆம் சூத்திரத்தின் சாயல் உடையது. அப்படியே வினையெச்ச சூத்திரங்களைப் பகுத்துக் கூறியதற்கும் (தொ. வி. 19, 12) வீர சோழியம் (67, 68) வழி காட்டியிருக்கலாம். பொதுவாக வீர சோழியக் கருத்தைத் தழுவி வீரசோழியம் சொல்லாத கருத்துகளையும் தொ. வி. கூறியுள்ளது.

வீர சோழியம் 25 ஆம் சூத்திரத்தில் மெய் ஈற்றுச் சொல் முன் உயிர் முதன் மொழியோ, மெய் முதன் மொழியாக வந்து புணர்ந்தால்

1. நிலை மொழி ஈற்றயலில் உள்ள அகரம் ஆகாரமாகி ஈற்றெழுத்து கெடும்.

2, சில சொற்களில் வருமொழி உயிரெழுத்து கெடும் என்று இரண்டு மாற்றங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்தச் சூத்திரம் மரம்+அடி> மராடி, கோணம்+கோணம்> கோணா கோணம் என்ற சொற்களில் ஏற்படும் மாற்றங்களை விளக்குகிறது' 'ஆனால் முனிவர் 'வருமொழி இரட்டிய சொல். (தொ. வி, 39-2) என்று வரையறுத்தே புணர்ச்சி மாற்றங்களைக் கூறியுள்ளார். இதனால் கோடா கோடி, காலா காலம், கோணா கோணம் போன்று இரட்டித்து வரும்பல சொற்களின் புணர்ச்சியை முனிவர் குறிப்பிட்டு விட்டார்.

தொ. வி. யின் 86ஆம் சூத்திரம் தத்திநாந்த நாமங்களைப் பற்றிப் பேசுவதால் வீர சோழியக் கருத்தை அப்படியே (12) பின் பற்றியுள்ளது. ஆனால் பெயர்ச் சொற்களில் வரும் எதிர்மறையை விளக்கும் அடுத்த சூத்திரத்தில் வீர சொழியம் குறிப்பிடாத 'நிரு' என்ற முன்னொட்டையும் தொ, வி. குறிப்பிட்டுள்ளது, (நிருமயம்) வீர சோழியம் கூறிய அ/,அன் என்ற இரண்டு மாற்றுருபுகளைக் குறிப்பிட்டாலும் வீர சோழியம் அவைகளை ஒலியன் மாற்றமாகக் கூற தொ. வி. மாற்றுருபுகளாக விளக்கியுள்ளது,

தொ. வி. வினையெச்ச விகுதிகளாக வீர சோழியம் குறிப் பிடாத பலவற்றைக் குறிப்பிட்டுள்ளது. எனவே வீர சோழியத் தைச் சில சூத்திரங்களில் தழுவினாலும் அங்கும் தனது தனித்துவ முத்திரையைத் தொ. வி. பதிக்கத் தவறவில்லை.

உரையில் (83) இலக்கண விளக்கம் மேற்கோளாகக் காட்டப் பட்டிருக்கிறது. எனவே முனிவர் இலக்கண விளக்கத்தையும் படித்துள்ளார் என்று கொள்ளலாமா என்பது முடிவு செய்ய வேண்டும். தொ. வி. சூத்திரங்களின் இரண்டு இடங்களில் இலக்கண விளக்கத்தின் சாயல் காணப்படுகிறது,

ஒன்று முதல் எட்டு வரை எண்ணுப் பெயர்கள் ஒருமொழியாய் இருந்து பத்து நிலைமொழியாய் இருக்கும்போது ஏற்படும் மாற்றங் களை விளக்கும் போது நன்னூல் 'முதல் இரு நான்காம் எண்முனர் பத்தின்' என்றும் (195 : 1) இலக்கண விளக்கம் 'ஒன்று முதல் எட்டு ஈற்று எண்முனர் பத்தின், என்றும் (113, 1) கூற, தொ, வி. ஒன்று முதல் எட்டு அளவு பத்து' என்று விளக்கியுள்ளது. இங்கு இலக்கண விளக்க அடியோடு தொடர் ஒற்றுமை காணப்படுகிறது.

மகரக் குறுக்கத்தை விளக்கும் போதும் இலக்கண விளக்கத் தின் சாயல் தென்படுகிறது,

'ணன முன்னும் வ ஃகான் மிசையும் மக்குறுகும்' என்பது நன்னூல் நூற்பா (96). ல,ள மெய் திரிந்து ண, ன முனும் வரு மொழி; வகார மிசையும் மகாரங் குறுகும் என்பது இலக்கண விளக்க நூற்பா - (22), 'மகரம் லளக்கீழ்; வம்மேற்குறுகும்' என்பது தொ.வி. நூற்பா (17). இங்கும் இலக்கண விளக்கத்தோடு ஒற்றுமை காணப்படுகிறது,

### 5.5.3. பிற நூல்கள்

வீரமா முனிவர்க்கு என்னென்ன இலக்கண நூல்கள் கிடைத்தன என்பதை ஆராய்ந்து அறிந்த பிறகே பிற இலக்கணச் செல்வாக்குப் பற்றித் திட்ட வட்டமாகக் கூற முடியும்.

தொ. வி. யின் வினைமுற்றின் வரைவிலக்கணத்தில் இலக் கண விளக்கத்தின் செல்வாக்கே தென்படுகிறது.

> பொது இயல்பு ஆறையும் தோற்றிப் பொருட்பெயர்
> முதல் அறு பெயரலது ஏற்பது முற்றே.

என்ற நன்னூல் சூத்திரம் (323) செயப்படு பொருள், கருத்தா முதலியவைகளை ஏற்று வினைமுற்று பெயர்ப் பயனிலையாகக் கொண்டு முடியும் என்று விளக்குகிறது.

மற்ற சொல் நோக்கா மரபினை அனைத்து
முற்றி நிற்பன முற்றியன் மொழிபவை
எத்திறத்தானும் பெயர் முடிபினவே

என்ற இலக்கண விளக்கச் சூத்திரமே (230)

பெயரே ஏற்று மற்று ஒன்றனை வேண்டாது
ஏற்பது வினை வினைக் குறிப்பு முற்றே (104)

என்ற தொ. வி. சூத்திரத்துக்கு நெருக்கமாக உள்ளது.

### 5.6 எழுத்ததிகார வருணனையும் கோட்பாடும்

தோற்றமும் வகுப்பும் தோன்றும் விகாரமும்
சாற்றுளித் தோன்றும் தான் எழுத்து இயல்பே

என்ற இரண்டாம் சூத்திரம் எழுத்ததிகாரம் தோற்றம், வகுப்பு, விகாரம் என்ற மூன்று பகுதிகளைக் கொண்டது என்பதைத் தெளிவுபடுத்துகிறது. மூன்றாவது சூத்திரம் பிறப்பியலைப் பற்றிப் பேசுவதால் தோற்றம் என்பதைப் பிறப்பியலைக் குறிப்ப தாகக் கொள்ளலாம். வகுப்பு என்பது எழுத்துக்களின் பலவகை யான பாகுபாடுகளைக் குறிக்கும். அவைகளில் முதல், சார்பு என்ற பாகுபாட்டை முதலில் கூறுவதால் (4:1) அது பயன்பாட்டு அடிப்படை என்று கொள்ளலாம், அப்படியானால் அது வருணனை மொழியியலின் 'ஒலியியனியலை' ஒத்ததாகக் கொள்ளலாம், எழுத்துகளை உயிர்/மெய் என்றும், மெய்களை வல்லினம், மெல் லினம், இடையினம் என்றும் பிரிப்பது ஒலியியல் அடிப்படையிலும், ஒலியியனியல் அடிப்படையிலும் விளக்கலாம். எனவே வகுப்பு என்பது ஒருவகை ஒலியனியல் அடிப்படை என்று கொள்வதில் தவறில்லை. விகாரம் என்பது சொல்லில் வரும் எழுத்துக்களின் மாற்றந்தான். அது 'புணரியல்' என்ற இலக்கண மரபோடும் 'உரு பொலியன்' என்றவருணனை மொழியியல் மரபோடும் தொடர்புடையது.

முனிவரின் விகாரக் கோட்பாடு மரபு இலக்கணக் கோட்பாட்டு முறையிலிருந்து மாறுபட்டு வருணனை மொழியியல் கோட்பாட்டு டன் அதிக அளவில் ஒற்றுமை உடையது என்பது பின்னால் விளக்கப்படும்.

எனவே முனிவரின் எழுத்ததிகாரக் கோட்பாடு, வருணனை மொழியியலாரின் எழுத்தியல் என்ற பகுதியில் அடங்கும்; அது ஒலி யியல், ஒலியனியல், உருபொலியனியல் என்ற மூன்று பிரிவுகளோடு ஒத்து அமைந்திருக்கிறது. மேலும் புதிதாக ஒரு மொழியை ஆராய்பவர் மேற்கொள்ளும் முறை என்பதும் (சண்முகம்,1980 -38)

முன்னரே கையாளப் பட்டுள்ளது. இங்குத் தனிச் சூத்திரங்கள் நன்னூலைப் பெரும்பான்மையும் தழுவி இருந்தாலும் அவருடைய எழுத்ததிகார அமைப்பு நன்னூலினை ஒத்துமுற்றிலும் மாறுபட்டது என்பதுமேலே காட்டியஇயல் விளக்கத்தால் மட்டுமல்லாமல் இரண்டுக்கும் உள்ள இன்னும் சில வேறுபாடுகளாலும் உறுதியாகிறது. நன்னூலார் பதவியலை எழுத்ததிகாரத்தின் பகுதியாய் - புணரியலுக்கு முன் வைத்தது எழுத்திலக்கண ஆராய்ச்சி மேற்கொள்ளும் செயல் முறையோடு என்பதும் முன்னரே விளக்கப்பட்டுள்ளது. வீரமாமுனிவர் பதவியல் கருத்துக்களைச் சொல்லதிகாரத்தின் பகுதியாய் விளக்கியது மொழியின் கட்டமைப்பை ஒலி, ஒலியன், உருபொலியன், உருபன், வார்த்தை, தொடர் என்று கீழ் அலகிலிருந்து மேல் அலகிற்குச் செல்லும் முறை விளக்குவது. எனவே முனிவரின் எழுத்ததிகார அமைப்பு மொழியியல் கோட்பாட்டு நிலையில் தனித்துவம் வாய்ந்தது. இன்றைய வருணனை மொழியியல் பிறப்பதற்குக் கட்டியம் கூறுவது போல் அமைந்தது.

### 5.6.1 தோற்றம்

எழுத்துகளின் பிறப்பை ஒரு சூத்திரத்தில் மட்டுமே விளக்கியுள்ளார். கொடுந்தமிழ் இலக்கணத்தில் எழுத்துகளின் உச்சரிப்பு முறையை நன்கு விளக்கியிருந்தும், அந்த முறையில் இங்கு எழுத்துக்களின் பிறப்பை வருணிக்க முயற்சி கொள்ளாதது மட்டுமல்லாமல் வருணனையில் தவறு எப்படி ஏற்பட்டது என்று தெரியவில்லை பிறப்பியல் சூத்திரத்தில் ஒலியூக்கி (Resonatons), ஒலிப்பான் (Articulation), ஒலிப்பிடம் (Point of articulation) ஆகியவைகளைச் சூத்திரம் விளக்குகிறது, இங்கு ஒலியூக்கி வருணனையில் ஒரு சில தவறு ஏற்பட்டு விட்டது. உயிரும் இடையினமும் மிடறு ஒலியூக்கியாகப் பெறும் என்று எல்லாத் தமிழ் இலக்கணங்களும் குறிப்பிட்டுள்ளன, வல்லெழுத்துக்குரிய ஒலியூக்கி உரம் (நெஞ்சு) என்பது நன்னூலைத் தழுவியது அது இன்று ஒலியியலாளரால் ஒத்துக் கொள்ளப்படுவதில்லை. மெல்லெழுத்துக்குத் தொல்காப்பியம், நன்னூல், இலக்கண விளக்கம், ஆகியவை மூக்கை ஒலியூக்கியாகக் குறிப்பிட்டுள்ளதே ஒலியியல் படி சரியான கருத்து ஆகும். ஆனால் முனிவர் ‘உச்சி’ என்பது புதுமையானது; அதே சமயத்தில் தவறானது (பட்டியலுக்கு இலக்கணத்தொகை எழுத்து ப, 52). ஆனால் முனிவர் மூக்கை ஒலிப்பிடமாகக் கூறியுள்ளார். இதழ், மூக்கு, அணம், பல்’ என்ற வரிசையில் மூக்கைச் சேர்த்துள்ளார்,

## 5.6.2. வகுப்பு

முன்னரே குறிப்பிட்டபடி எழுத்துக்கள் முதல், சார்பு என முதலில் பகுக்கப் பட்டுள்ளன; முதல் எழுத்து உயிர் பன்னிரண்டு, மெய் பதினெட்டு என்றும், சார்பெழுத்துகள் உயிர்மெய், ஆய்தம், குற்றியலுகரம், குற்றியலிகரம், ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக் குறுக்கம், உயிரளபெடை, ஒற்றளபெடை, ஆகிய பத்து என்றும் குறிப்பிட்டு,.உயிர்மெய் 216 என்று கூறி ஏனையவைகளை வருமிடங்களை விளக்கியுள்ளாரே தவிர ஒவ்வொரு சார்பெழுத்துக்கும் தனி எண்ணிக்கை தரவில்லை. குற்றியலுகரம் 36, குற்றியலிகரம் 37, போன்று சார் பெழுத்துக்களுக்கு நன்னூலார் எண்ணிக்கை கொடுத்தது முனிதருக்குச் சரியாகப் படவில்லை என்று கொள்ளலாம். இலக்கணத் தொகை - எழுத்தில் (ப. 22) தொ. வி. இல் நன்னூல் போல எல்லாச் சார்பெழுத்துகளுக்கும் எண்ணிக்கைக் குறிப்பிட்டிருப்பது மூல நூல் கருத்துக்கு மாறுபட்டது. இலக்கண விளக்கம், நன்னூலிலிருந்து மாறுபட்ட எண்ணிக்கை கொடுத்தது கூட முனிவருக்குச் சரியாகப் படவில்லை என்று கொள்ளலாம். ஆனாலும் இலக்கண விளக்கம், நன்னூலிலிருந்து மாறுபட்ட, எண்ணிக்கை கொடுத்தது ஏற்றுக் கொள்ளத் தகுந்ததே. 'உயிர் நெடில் இனக்குறில் கூற்று அளபெடுக்கும் (தொகை, 18. 1) என்றாலே உயிரளபெடை ஏழு என்ற கருத்து பெறப்பட்டு விடுகிறது. ரகர, ழகர ஒழிந்த இடையினம், மெல்லினம், ஆய்தம் ஆகிய ஒற்றளபெடையாய் வரும் என்று கூறும்போது ஒற்றள பெடை 11 என்று எண்ணிக்கை பெறப்பட்டு விடுகிறது. அதனதன் வருணனையிலேயே எண்ணிக்கை பெறப்படுவதால் தனியே எண்ணிக்கை குறிப்பிட வேண்டாம் என்று முனிவர் கருதியிருக்க வேண்டும். இது சிறப்பானது தான்.

மொழி முதல் எழுத்து, மொழி ஈற்று எழுத்து என்று இன்னொரு பாகுபாடு செய்திருப்பது சிறப்பாகக் கருத முடியாது. ஏனென்றால் மொழிக்கு முதலில் வரும் சில எழுத்துக்கள் மொழிக்கு இறுதியிலும் வரும்.

மாத்திரையை ஒரு பாகுபாட்டுக்குரிய அடிப்படையாகக் குறிப்பிட்டுள்ளார். எழுத்துக்களின் உச்சரிப்புக்குரிய நேர அடிப்

படை தான் மாத்திரை. இது எழுத்திலக்கணத்தில் குறிப்பிடப் பட வேண்டிய ஒன்று. ஆனால் அதை எழுத்துகளைப் பாகுபடுத்துவதற்குரிய அடிப்படையாகக் கொள்ளக் கூடாது. ஏனென்றால் அப்படி செய்யப்படும் பாகுபாடுகளுக்கிடையே (மகரக் குறுக்கம், ஆய்தக் குறுக்கம், ¼ மாத்திரை குற்றியலிகரம், குற்றியலுகரம். மெய், ஆய்தம் ½ மாத்திரை) வேறு வழியிலும் ஒற்றுமை காணப் பட வேண்டும்.

'புணர்பு' என்று ஒன்றைக் குறிப்பிட்டு (4. 5) உடம்படுமெய்கள் வருமிடத்தைத் தனிச் சூத்திரத்தில் (20) விளக்கியுள்ளார், இங்கு வெறும் புணர்ச்சியை விளக்குவதாகக் கொள்ளாமல் உயிரீற்றுப் புணர்ச்சியில் வரும் யகர; வகரம் ஏனைய இடையின எழுத்துக்களின் பண்பிலிருந்து மாறுபட்ட தன்மை உடையது என்பதைக் குறிப்பதாகக் கொண்டால் இது ஒரு வகையான பாகுபாடாகக் கொள்ள முடியும்.

### 5. 6. 3 விகாரம்

விகாரம் நான்கு வகைப்படும் என்று முனிவர் குறிப்பிட்டுள்ளாரே தவிர பிற தமிழ் இலக்கணங்கள் கூறுவது போல நிலைமொழி ஈற்றெழுத்தும், வருமொழி முதல் எழுத்தும் சேரும் போது ஏற்படும் மாற்றந்தான் விகாரம் என்று குறிப்பிடவில்லை. அதே சமயத்தில் ஒலிக் கட்டுப்பாடு (30) அசைக் கட்டுப்பாடு 'தனிக்குறில் ஈறு' (33) சொல் கட்டுப்பாடு ('தம்மோடு தாம் சேருதல்'31) தொடரியல் கட்டுப்பாடு('அல்வழி வேற்றுமை' 23,24) என்ற புணர்ச்சி மாற்றங்களுக்குரிய கட்டுப்பாடுகளை ஏற்றுக் கொண்டுள்ளார். இங்கு இரண்டு சூத்திரத்தில் மட்டும் (30.28) அல்வழி,வேற்றுமை, அடை என்ற மூன்றுவித தொடரியல் கூற்று குறிப்பிட்டுள்ளது புதுமையானது. விரித்தாலும் வேற்றுமை உருபு ஏற்காது. அல்வழி என்பது அவருடைய விளக்கம் (22). 30 ஆம் சூத்திரத்து உரையில் அல்வழிக்கு நாய் சிறிது, தேர் சிறிது, வீழ் சிறிது என்ற காட்டுகளையும், அடைக்கு 'நிலைமொழிப் பதம் தொகைப்பட்டு அடைமொழியாக நிற்றல்' என்ற விளக்கம் கொடுத்துப் பொய்ச்செல்வம், கார்ப்பருவம், பாழ்க் கொல்லை என்ற காட்டுகளும் கொடுத்துள்ளார். அவை பிற இலக்கண மரபுப்படி அல்வழி உறவில் பண்புத் தொகையாகக் கொள்ளப்படும். இன்னொரு சூத்திரத்தில் (28) அடைமொழி என்பதற்குப் பண்டு - பண்டைச் செய்தி, இன்று - இற்றைக் கூலி போன்ற சான்றுகளைத் தந்துள்ளார், இவர்

கருத்துப் படி பண்புச் சொற்கள் அடையாக வருவது தான் உரிச் சொல் ஆகும். உரிச் சொற்களைக் குறிக்க 'அடை' என்று பயன் படுத்தினார் என்றால் அற்றை பண்டை, ஆகியவைகளை உரிச் சொல்லாகக் கருத முடியாதே என்ற ஐயம் எழுகிறது. எனவே அவருடைய உரிச்சொல் கோட்பாடு வேறுபட்டது.

புணர்ச்சியை நான்கு விதமாக விளக்கும்போது இயல்பு புணர்ச் சியைக் குறிப்பிடாமல் அதற்குப் பதிலாக 'திரட்டு' என்ற ஒன்றைக் குறிப்பிட்டுள்ளார். இயல்பு என்பது மாற்றம் இல்லாததால் அதைத் தனியாகக் கூற வேண்டிய தேவை இல்லை என்பது உண் மைதான். ஆனால் சில சொற்களின் புணர்ச்சி ஒன்றுக்கு மேற் பட்ட மாற்றம் பெறும். அதாவது மாற்றம் பெற்றும் பெறாமலும் உறழ்ச்சியாக இருக்கும். 'என். தன், வலிவரின் இயல்பும்' என்று அவரே குறிப்பிட்டிருப்பதால் (255) புணர்ச்சி மாற்றத்தில் இயல் பையும் ஒரு வகையாகக் குறிப்பிட வேண்டும். எனவே அவருடைய புணர்ச்சிவருணனையும் புணர்ச்சிகோட்பாடும் முரண்பட்டு விடுகிறது.

திரட்டு என்பது 'மூவிகாரம் இன்றியுஞ் சில முறை இரு பதம் ஒரு பதமாகத் திரண்டு கலப்புளிச் சில எழுத்து அவ்வழி விகாரப் படும் எனக் கொள்க' என்று பொழிப்புரையில் விளக்கப் பட்டுள்ளது. 36 ஆம் சூத்திரம் இதற்குத் தனி விளக்கம் தருகிறது. இங்கு இரண்டு மொழி ஒரு மொழியாகப் புணர்ச்சியால் மாறுவது என்றும் உரையில் வட மொழிகளில் 'மிகவும் வழங்கும்' என்றும் குறிப்பிடப் பட்டுள்ளன. பொதுவாகத் தமிழ் ஒட்டு நிலைமொழி என்றும், வட மொழி திரி நிலை மொழி என்றும் சொல்லியல் அமைப்பை ஒட்டி வகைப்படுத்துவார்கள். இதன்படி புணர்ச்சி மாற்றத்திற்குப் பிறகும் ஒட்டு நிலைமொழிகளில் வருமொழி, நிலை மொழி பிரித்து அறியும் நிலையில் தெளிவாக அமைந்திருக்கும். திரி நிலை மொழியில் அப்படி பிரித்து அறியாத படி திரிந்து போய் விடும். தமிழ் பெரும்பாலும் ஒட்டு நிலை மொழி ஆனாலும் சில சொற்கள் திரிநிலை மாற்றம் பெறுவதுண்டு. அப்படிப்பட்ட மாற்றத்தைக் குறிக்கவே முனிவர் 'திரட்டு' என்றும், அதற்கு வட மொழிப் பெயராகச் 'சங்கீர்தம்' என்றும், குறிப்பிட்டிருக்க வேண்டும். உரையில் குளம் + ஆம்பல் குளாம்பால்; மரம் + அடி > மராடி, என்ற தமிழ்ச் சான்றுகளும், பஞ்ச + அங்கம் > பஞ்சாங்கம், கிரி + ஈசன் > கிரீசன் போன்ற வடமொழிச் சான்றுகளும் கொடுக் கப்பட்டுள்ளன. இதற்கேற்ப சில புணர்ச்சி மாற்றங்களும் இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளன.

இந்த இயலில் சில உயிரீற்றுச் சொற்களின் மாற்றங்களும் மெய் யீற்றுச் சொற்களின் மாற்றங்களும் விளக்கப் பட்டுள்ளன. பிற தமிழ் இலக்கணங்களை நோக்க தொ. வி. யில் விகார இயலில் காணப்படும் புதுமைகள்: 1. சாரியைப் பற்றியோ, சாரியைகளின் பகிர்வு பற்றியோ இங்குக் குறிப்பிடாமல் சொல்லதிகாரத்தில் விளக்கியிருப்பது. 2. சில புணர்ச்சி மாற்றங்களை ஒலியனியல் எழுத்து மாற்றத்துக்காகக் கொள்ளாமல் மாற்றுருபுகளாகச் (ஒன்று - ஒரு; இரண்டு - இரு; நான் - என்) சொல்லதிகாரத்தில் கூறியுள்ளது (68, 94) 3. எழுத்து மாற்றமாகப் புணர்ச்சி விளக்கப் பட்டாலும் சில பொருட்புலம் - அதாவது திசைப் பெயர், அளவுப் பெயர், எண்ணுப் பெயர், சுட்டுப் பெயர் ஆகியவற்றின் மாற்று வடிவங்களைச் சொல்லதிகாரத்தில் கூறியிருப்பது.

பொதுவாக மொழியியல் ஒலிக்கட்டுப்பாடு உடைய மாற்றங் கள் உருபொலியனிலும் அதாவது சந்தியலிலும் சொல் கட்டுப் பாடுடைய மாற்றங்கள் சொல்லதிகாரத்தில் அந்தந்த சொல் வகைப்பாட்டின் கீழும் விளக்கப்படும். (உ.ம்) சுப்பிரமணியன் (1965) அகத்தியலிங்கம் & சண்முகம் (1970). தொ. வி. அந்த முறையை முழுவதும் பின்பற்றா விட்டாலும் ஓரளவு காணப்படு வதாகக் கொள்ளலாம். மேலும் முனிவர் பதவியலை எழுத்ததி காரத்தின் பிரிவாய்க் கருதாததும் அவருடைய புணரியல் கோட் பாடு மற்ற தமிழ் இலக்கணங்களிலிருந்து மாறுபட்டது என்பதைக் காட்டுகிறது. இதுவும் வருணனை மொழியியல் கோட்பாட்டை ஒட்டியது.

## 5. 7, சொல்லதிகார வருணனையும் கோட்பாடும்

சொல்லதிகாரம் ஐந்து இயல்களாக வகுக்கப்பட்டு 'சொற் பொதுவியல்' முதலில் வைக்கப் பட்டிருப்பது முன்னரே குறிப்பிடப் பட்டது. சொற் பொதுவியலின் முதல் சூத்திரம் சொல்லதிகாரப் பாகுபாட்டையும் சொற்களின் பல வகையான பாகுபாட்டையும் விளக்குவதால் சொல் என்பதற்குப் புதிய வரைவிலக்கணம் அமைந்து விடுவது பின்னால் விளக்கப்படும். சொல்லதிகார அமைப்பைப் பொறுத்த வரையில் வரலாற்று நோக்கில் இரண்டு செய்திகள் குறிப்பிடத் தகுந்தவை. 1. நன்னூல் சொல்லதிகாரமும் ஐந்து இயலாக அமைக்கப் பட்டிருந்தாலும் நன்னூலின் பொது வியல் என்பது பெயருக்கும் வினைக்கும் பொதுவான செய்திகள் என்ற கருத்தில் மூன்றாவதாக வைக்கப் பட்டிருப்பது. தொ. வி.

பெயர்ச் சொற்களின் பொது இலக்கணம் விளக்குகிறது என்பதால் சொல்லதிகாரத்தில் முதலில் வைத்திருப்பது இயல் ஒப்பு பொதுவாக இருந்தாலும் அந்தத் தலைப்புகளில் விளக்கும் அடிப்படை கருத்துக்களுக்கு ஏற்ப இயலின் இடத்தை மாற்றித் தன்னுடைய தனித்துவத்தை முனிவர் வெளிப்படுத்தியது. 2. பதவியல் கருத்துக்களைச் சொல்லதிகாரத்தின் பகுதியாக்கிச் சொற் பொதுவியலிலும் பகுபத பெயரியல் என்ற தனி இயலிலும் விளக்குவது. இது சொல்லியல் ஆய்வின் ஆரம்ப நிலையான உருபு பகுப்பு தொகுப்பு, உருபன்களின் பாகுபாடு என்ற முறையில் சில கருத்துக்களே இங்குக் காணப்படுவது. ஒலியின் வகுப்பு, விகாரம் சொற் பொதுவியல் முறையை ஒத்தது.

### 5.7.1. சொற் பொதுவியல்

> எச் சொல்லும் பெயர், வினை, இடை, உரி என நான்கு
> இவற்றுள் பொதுவென இயற்சொல், திரிசொல்
> ஒரு மொழி தொடர் மொழி பொது மொழி
> பகாப் பதம் என்றா பகுபதம் என்றா
> ஆகுபெயர், இருதிணை, ஐம்பால் மூவிடம்
> சாரியை எனப் பொதுத் தகுதி ஈறாரே.

என்ற முதல் சூத்திரத்தில் முனிவர் சொற் பொதுவியலில் பன்னிரண்டு கருத்துகள் குறிப்பிட்டாலும் நாம் அவைகளை 1. சொல் வகைப் பாடு (பெயர், வினை), 2. பயன் பாட்டுப் பாகுபாடு (இயற்சொல், திரிசொல்), 3. தொடரியல் பாகுபாடு (வருமொழி, தொடர் மொழி) 4. சொல்லியல் பாகுபாடு' 5. அ. கட்டமைப்பு பாகுபாடு (பகுபதம், பகாபதம், சாரியை), ஆ. இலக்கணக் கூறுபாடு (இரு திணை, ஐம்பால் மூவிடம்) இ. பொருள் பாகுபாடு (ஆகு பெயர்); 6. எழுத்துக்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் பாகு பாடு என்று ஆறு பகுப்பாகக் கொள்வது அவருடைய இலக்கணக் கோட்பாட்டைப் புரிந்து கொள்ள உதவியாக இருக்கும்.

#### 5.7.1.1 சொல்வகைப் பாகுபாடு

'பெயர்' வினை, இடை, உரி நான்கு, என்ற தொடர் (42:1) என்பது சொல்லதிகார இயல் பாகுபாட்டையும் சொல் பாகுபாட்டையும் குறிப்பதாகக் கொள்ளலாம். இது எல்லாத் தமிழ் இலக்கணங்களும் குறிப்பிடும் பாகுபாடு தான் என்றாலும் அவைகளை மொழி அமைப்பு நோக்கில் சொல்வகைப் பாடாகக் கொள்ளலாமா என்று இலக்கண அறிஞர்களிடையேயும், மொழியியலறிஞர்

களிடையேயும் கருத்து வேறுபாடு இருந்து வருகிறது. அதற்கு முக்கிய காரணம் இடை உரிச் சொற்களின் தன்மை தான். எனவே அந்த இரண்டு வகை பற்றி முனிவரின் கருத்தைப் பார்ப்போம்.

தொ,வி. யின் இடையியலின் முதல் சூத்திரம் (150) நன்னூலின் கருத்தைத் தழுவியது தான். நன்னூலார் சொன்ன 'ஓரிடத்து ஒன்றும் பலவும் வந்து ஒன்றும்' என்ற கருத்து (420,4.5) தொ. வி. யில் விடப்பட்டுள்ளது. இதுவே இடைச் சொல்லிலிருந்து உரிச்சொல்லிலிருந்து வேறுபடுத்துவது. எனவே அந்தக் கருத்தை நீக்கியது சிறப்பாகக் கருத முடியாது. மேலும் இடைச் சொல் பெயருக்கும் முன்னும் பின்னும் வரும் என்று குறிப்பிட்டு அவை களுக்கு முன்னால் வரும் மற்று, மற்றை போன்ற சொற்களை இடைச் சொற்களாகக் குறிப்பிடாததும் தொ. வி,யைக் குன்றக் கூறல் என்ற குற்றத்துக்கு ஆளாக்கியிருக்கிறது. சுருங்கச் சொன்னல்ா இடைச் சொல்லை மொழி அமைப்பு நோக்கில் சொல் வகையாகக் கருதுவதற்கான ஆதாரம் தொ வி. யில் இல்லை

உரிச் சொல்லைப் பொறுத்த வரையில் தொ. வி.யின் உரிச் சொல் இலக்கணம் இரண்டு பண்புகளை (1. பல குணங்களுக்கு உரிய சொல், 2, பெயர், வினைகளுக்கு அடையாய் வரும்) குறிப்பிட நன்னூல் இன்னும் இரண்டு பண்புகளை (ஒரு குணம், பல குணம் தழுவுதல்) செய்யுட்கு உரியவை எனக் கூறியுள்ளது. (442) பின்னிரண்டும் சிறப்புப் பண்புகளாகக் கருத முடியாது என்றே முன்னர் அவைகளை விலக்கியிருக்க வேண்டும். ஆனாலும் பண்படைச் சொற்கள் மட்டும் உரிச் சொற்களாகக் கருதியது மொழி அமைப்பு நோக்கில் சிறப்பாகக் கருத முடியாது. ஏனென்றால் அவை அடையாக வருவதோடு பயனிலையாகக் குறிப்பு வினை முற்றாக வரும். ஆகவே தொ. வி.யின் உரிச் சொல் இலக்கணம் அமைப்பியல் நோக்கில் தனிச் சொல் வகையாகக் கருதும்படியாக அமையவில்லை.

### 5.7.1.2. பயன்பாட்டுவழிப் பாகுபாடு

இயற்சொல், திரிசொல் என்ற பாகுபாடு மொழியிலுள்ள சொற்களைப் பயன்படுத்தும் முறையை ஒட்டிய பாகுபாடு. முனி வரும் திரி சொல்லைப் 'பயன் படற்கு உரியன' (44 : 2) என்று குறிப்பிட்டுள்ளார். இதில் அடங்கும் சொற்களைப் பற்றி இரண்டு செய்திகள் அறியத் தகுந்தவை.

1. எல்லா இலக்கணங்களும் இயற்சொல், திரிசொல், திசைச் சொல், வடசொல் என்று நான்கு வகையை குறிப்பிட முனிவர் மட்டும் இயற்சொல், திரிசொல் என்ற இரண்டு வகையைக் குறிப்பிட்டுப் பொருளதிகாரத்தில் (193) அவர் காலத்து வழங்கிய தாகக் கருதப்பட்ட பிற மொழிகள் செந்தமிழ் நிலன், செந்தமிழ் சூழ்ந்த நாடுகள் ஆகியவை குறிப்பிட்டிருப்பது.

2. சொற்களின் புணர்ச்சி மாற்றத்தையும் வடமொழி எதிர் மறையையும் (86, 87) 'வடநடைப்பதம்' என்று சொல்லதி காரத்தில் பகுபதப் பெயரியலிலும்; வடமொழியை நோக்கத் தமிழின் பொது எழுத்துகள் பற்றி எழுத்ததிகாரத்திலும் குறிப்பிட்டு அதைச் சொல்வகைக் கூறும் போது இலக்கணப்படுத் தாமல் இருப்பது. இயற்சொல்லையும் திரிசொல்லையும் மட்டும் கூறியதற்கு நன்னூல் சூத்திர அமைப்பில் குறிப்பு இருக்கிறது என்பது சுட்டிக்காட்டத்தகுந்தது.

இயற்சொல் திரிசொல் இயற்பில் பெயர் வினை
என இரண்டாகும் இடைஉரி அடுத்து
நான்குமாம் திசை வடசொல் அணுகாவழி

என்ற நன்னூல் சூத்திரமும் (270) இதற்கு உரையாசிரியர்களின் விளக்கமும் ஓரளவு காரணமாக இருக்கலாம். இருந்தாலும் வடசொல், திசைச்சொல் ஆகிய இரண்டையும் இங்குச் சேர்க் காதது சிறப்பாகக் கருத முடியாது,

இயற்சொல் என்பதற்கு 1. திரிபு இல்லாமல் 2. எல்லோ ருக்கும் எளிதாக விளங்கும் இயல்புடைய சொல் என்று விளக்கம் கொடுத்துள்ளார் (தொ. வி. 43).

இயற்சொல் என்பது இயற்பில் திரிவிலா
தான் எளிது எவர்க்கும் தற்பொருள் விளக்கிய—

அதாவது அந்த மொழி பேசும் எல்லோருக்கும் விளங்கக் கூடிய சொல், பொதுமையான சொல் என்று பொருள் கொள்ளலாம். மொழியியல் நோக்கில் இயற்சொல் என்பதைத் தருமொழி என்றும், அது முனிவர் கருத்துப்படி எல்லாக் கிளை மொழி யாருக்கும் பொதுவான கூறு என்றும் விளக்கலாம். ஆனால் பொருளதிகாரத்தில்.

மருவூரின் மேற்கும் கருவூரின் கிழக்கும்
மருதை ஆற்றின் தெற்கும் வைகை
ஆற்றின் வடக்கும் செந்தமிழ் நிலனே (193.6-8)

என்று கூறுவது தமிழ் இலக்கண உரைகளில் கூறப்படும் இயற்சொல் நிலப்பரப்பு தான். அப்படியானால் 'இயற்சொல்' என்பது ஒரு கிளை மொழி வழக்கு. அதாவது சோழ நாட்டை ஒட்டிய வழக்கு என்று ஆகிறது. இந்த முரணின் அர்த்தம் என்ன? பழைய இலக்கண ஆசிரியர்கள் எல்லாரும், இயற்சொல் வழக்கும் செந்தமிழ் நில வழக்கும் ஒன்று என்ற கருத்துடையவர்கள். பெஸ்கி இரண்டும் வேறு வேறானது என்று நினைக்கிறார் போலும். ஏனென்றால் நன்னூலார் 'வழக்கு' என்பதற்குக் கொடுத்த விளக்கத்தையே (267) 'செந்தமிழ் வழக்கு'க்குரிய இலக்கணமாக (794) முனிவர் கொடுத்துள்ளார், அப்படியானால் 'இயற்சொல்' என்பது தகு வழக்கு என்பதும் பொருந்தாது போய் விடுகிறது. இது மேலும் ஆய்வுக்குரியது.

திரிசொல்லின் விளக்கம் எல்லாத் தமிழ் இலக்கணங்களும் கொடுத்த விளக்கத்தை அடியொற்றியதுதான். முன்னரே குறிப்பிட்டபடி நன்னூலார் புதிதாகச் சேர்த்த 'அரிதுணர் பொருள்' என்ற தொடரை நீக்கி விட்டுப் 'பயன்படற்கு உரியன்' என்ற தொடரைச் சேர்த்துள்ளார்.

### 5.7.1.3. தொடரியல் வழிப் பாகுபாடு

வருமொழி, தொடர்மொழி, பொதுமொழி என்ற பாகுபாடும் விளக்கமும் நன்னூலை ஒட்டியது. அத்தோடு தொடர் மொழியைத் தொகை நிலைத் தொடர்மொழி, தொகா நிலைத் தொடர்மொழி என்ற கருத்தே புதுமையானது. ஆனால் அதுவும் நன்னூலில் 'தொகை நிலைத் தொடர்ச் சொல்' என்பதும் (361) 'தொகா நிலை' (374) என்பதும் காணப்பட்டாலும் அங்குத் தனித்தனியே கூறப்பட்டவைகளை இங்குத் தொடர்பு கருதி சேர்த்துக் கூறி, இலக்கணக் கோட்பாடு ஆழம் உடையதாகச் செய்து விட்டார். அப்படியே நன்னூலார் பதவியலில் பகுபதம், பகாபதம் என்று (128) கூறியதை இங்குச் சேர்த்ததன் மூலம் சொல்லில் புதிய அலகைச் சேர்த்தது பின்னால் விளக்கப்படும்.

### 5.7.1.4. சொல்லியல் பாகுபாடு

பகாப்பதம் பற்றிய விளக்கமும் (தொ. வி. 46) நன்னூலைத் தழுவியதே. இங்கும் 'முன்னே ஒன்றாய் முடிவது' (131) என்ற நன்னூலின் தொடர் நீக்கியது மேலே சுட்டிக் காட்டப்பட்டது. 'பகுபதம்' பற்றிய விளக்கத்தில் (தொ. வி. 47) நன்னூலின் சாயல்

(132) அப்படியே இருந்தாலும் பகுபதத்துக்கு ஒரு பொது விளக்கத்தை முனிவர் சேர்த்தது புதுமையே, 'பகுபதம் ஒன்றாய் பல ஒருங்கு உணர்த்தி, என்பதே அவர் சேர்த்த தொடர் (47.1). உரையில் 'ஒரு மொழியாக நின்று ஒருப்பட பல பொருளை உணர்த்துவன' என்று காணப்படும் விளக்கம் பதத்தையும் மொழியையும் இணைத்துக் காட்டிவிடுகிறது. பகுபத உறுப்புகள் பற்றிய நன்னூலார் கருத்தை முனிவர் அங்கீகரிக்க வில்லை என்பதாலயே அவைகளைக் குறிப்பிடாமல் பல உறுப்புகள் இருக்கின்றன என்று பொதுவாகக் கூறியுள்ளார் என்று கருதலாம்.

சாரியையைச் சொல்லதிகாரத்தில் கூறியதற்கு முனிவர் மொழிப் பயிற்சி நோக்கில் - புதிதாக மொழியைக் கற்றுக்கொண்டு ஆராய்வோர் நோக்கில் இலக்கணம் எழுதியது ஒரு காரணமாக இருக்கலாம்.

தமிழ் இலக்கண நூல்களில் காணப்படும் ஒரு வளர்ச்சி சுட்டிக் காட்டத் தகுந்தது. சாரியைகள் தொல்காப்பியத்தில் நேரடியாக எழுத்ததிகாரத்திலும், நேமிநாதம், நன்னூல், இலக்கண விளக்கம் ஆகியவைகளில் எழுத்ததிகாரத்திலும், சொல்லதிகாரத்திலும் தொ. வியில் சொல்லதிகாரத்திலும் விளக்கப்படுகிறது. தொல் காப்பியர் சாரியைகளைப் பகுத்தும் தொகுத்தும் கற்பித்த அடி நிலைக்கிளவி அமைந்திருந்தாலும் (சண்முகம் 1980) சொல்லியல் புதை நிலையில் சாரியை அமைக்காமல் - அதாவது சொல்லியல் கட்டமைப்பில் சாரியைக்கு இடம் கொடுக்காமல், பெயரும் வேற்றுமையும் புணரும் போது மிகுதிப் புணர்ச்சியாகச் சாரியை தோன்றி அது சில மாற்றங்களைப் பெறும் என்று விளக்கியுள்ளார். முனிவர் கருத்துப்படி சொல்லியல் கட்டமைப்பில் சாரியைக்கு இடம் உண்டு.

முனிவர் வேற்றுமையியலின் இறுதியில் (52) பதமும் உருபும் விகுதியும் புணரும் போது இடையில் சாரியை தோன்றும் என்பதால், பெயர்ச்சொற்கள் வேற்றுமை உருபு ஏற்கும் போதும், வினைச் சொற்கள் விகுதி ஏற்கும் போதும் சாரியை வரும் என்று குறிப்பிட்டுள்ளார். இந்தக் கருத்தும் நன்னூலைத் தழுவியது தான் (241).

### 5.7.1.5. இலக்கணக் கூறுகள்

இருதிணை, ஐம்பால், மூவிடம் என்பவை பெயரிலும் வினையிலும் காணப்படும் இலக்கணக் கூறுகள். ஆனால் பால்

பாகுபாடு பெயரில் அடிக்கூறாகவும், வினையில் திரிபொட்டா கவும் - விகுதியாகவும் உணர்த்தப்படும். இந்த வேறுபாடு தொல் காப்பியம் குறிப்பிட்டுள்ளதே தவிர (சண்முகம், 1984) பிற இலக்கணங்களில் குறிப்பிடப்படவில்லை.

## 5.7.1.6. எழுத்துவழிப் பாகுபாடு

மொழியில் எழுத்தைக் கீழ்நிலை அலகாகவும், சொல்லை மேல்நிலை அலகாகவும் கொண்டு விளக்கும் போது எழுத்திலிருந்து பதம், பதத்திலிருந்து மொழி, மொழியிலிருந்து சொல் எப்படி உண்டாகின்றன; அவை என்ன உறவு உடையன என்று விளக்க வேண்டும். மொழி நோக்கில் 'பொது மொழி' என்பதே எழுத்து நோக்கிலிருந்து சொல்லைப் பார்ப்பதுதான். பதத்துக்குக் கீழ் அலகு ஓரெழுத்து என்றும், மேலலகு ஏழு என்றும் பகுபதச் சொல்லில் ஒன்பது எழுத்து மேல் அலகு என்றும் முனிவர் கூறியுள்ளார் (4.8). ஓரெழுத்து மொழியில் 82 சொற்கள், அவைகளில் 2 சொற்கள் குறில் ஏனைய நெடில் என்றும் கூறியது நன்னூல் கருத்தின் (129, 130) முழுத்தழுவலே ஆகும். இது பற்றிய விமர்சனம் முன்னரே செய்யப்பட்டுள்ளது. (சண்முகம் 1980 : 189, 167)

## 5 7.1,7. பொருள்வழிப் பாகுபாடு

ஒரு சொல்லுக்குப் பொதுவாக ஒரு பொருள் இருக்கும். ஆனால் சில சமயத்தில் அதோடு தொடர்புடைய வேறு பொருளும் குறிக்கலாம். எனவே ஒரு சொல் இன்னொரு பொருளுக்கு ஆகி வருகிறது என்ற முறையில் 'ஆகு பெயர்' என்று ஒரு வகை குறிப்பிடப்பட்டிருக்கிறது, இது பற்றி வரலாற்றுக் கட்டுப்பாடு கூடாது என்ற முனிவருடைய கருத்து மேலே விளக்கப்பட்டது.

## 57.1.8. 'சொல்' பொது விளக்கம்

சொல் என்பது மொழியாகவும், மொழி பதமாகவும், பதம் எழுத்தாகவும் அமையும் என்று இங்குக் குறிப்பிட்டு, 'சொல்' என்பது பல அடுக்குகளை உடையது என்பதைத் தெளிவுபடுத்தி யுள்ளார். (தொ. வி. 42) நன்னூலார் சொல்லின் பொது இலக்கணமாகச் சொல் - மொழி என்று ஒரு அலகு உடையதாகச் சொல்லதிகார இரண்டாவது சூத்திரத்தில் (258) குறிப்பிட்டுப் பதம், எழுத்து என்பவைகளைப் பதவியியலிலேயே குறிப்பிட் டுள்ளார் (188). எனவே முனிவர் மொழியின் கூறுகள் பற்றிய முழுப் பரிமாணத்தையும் இங்கு ஓரிடத்தில் குறிப்பிட்டது, அவருடைய மொழியியல் அறிவின் ஆழத்தைக் காட்டுவதாகக்

கொள்ளலாம். ஆகவே மொழியியல் நோக்கில் சொல் என்பது கிளவியையும் (utterance), மொழி என்பது வார்த்தையையும் (word), பதம் என்பது உருபனையும் (Morphone) குறிப்பதாகக் கொள்ளலாம். மொழி நோக்கில் சொல் ஒரு மொழி, தொடர் மொழி என்று இருவகைப்படும் என்பது ஒரு வார்த்தை உடைய சொல், ஒன்றுக்கு மேற்பட்ட வார்த்தை உடைய சொல் என்று பொருள்படும்.

நீர், வந்தான் - ஒரு மொழி உடைய சொல்
சாத்தன் வந்தான், ஊருக்கு நேற்று சென்றான்—

தொடர் மொழி உடைய சொல் 'தாமரை' என்பது ஒரு பொருளைக் குறிக்கும் போது ஒரு மொழிச் சொல், தாவும் மரை என்ற பொருளில் வரும் போது இரண்டு மொழியை உடைய சொல். ஒரு மொழிச் சொல் ஒரு பதம் உடையதாகவும் (கல், வீடு) பல பதம் உடையதாகவும், (மாணவர்கள் படித்தார்கள்) இருக்கலாம். ஒரு பதம் உடைய பகாப்பத மொழி என்றும் பல பதம் உடைய பகுபத மொழி என்றும் அழைக்கப்படும்.

பதம் ஒரு எழுத்து உடையதாகவும் (ஆ, பூ) பல எழுத்து உடையதாகவும் (நூல், பகல்) இருக்கலாம். எனவே சொல் என்பது மொழி, பதம், எழுத்து என்று மூன்று அலகுகளை உடையது.

5.7.2. பெயர்

பெயர் ஒத்தை நான்கு இயல்களாகப் பிரித்ததற்கு நூலுக்குள் குறிப்பு இல்லை. முதல் இயலான வேற்றுமையியலே பெயரின் பொது இலக்கணத்தையும், முதல் ஏழு வேற்றுமை விகுதிகளையும், அவற்றின் பொருள்களையும் விளக்கி விட்டு, வேற்றுமை உருபுகளின் மாற்று வடிவங்கள், சாரியைகள், வேற்றுமை உருபு ஏற்கும் போது மூவிடப் பெயர்கள் பெறுகிற வடிவங்கள், எட்டாம் வேற்றுமை, பன்மை விகுதிகள், சில மரபுகள் ஆகியவைகளையும் வருணிக்கிறது. இங்கு வேற்றுமை பற்றிய சூத்திரங்கள் பெரும் பாலும் நன்னூலைத் தழுவியவையே; ஆனாலும் சாரியைகளை ஏழாம் எட்டாம் வேற்றுமைகளுக்கு நடுவில் வைத்ததன் மூலம் புலப்படுத்திய நுட்பமும் பெயருக்குக் கொடுத்த வரை விலக்கணத்தின் நுட்பமும் சுட்டிக் காட்டத் தகுந்தவை.

## 5.7.2.1. பெயரின் வரைவிலக்கணம்

பெயரின் பொதுவிலக்கணம் நன்னூலைத் தழுவியதாக இருந்தாலும் சில சொற்களை மாற்றியதன் மூலம் முனிவர் புலப் படுத்தும் நுட்பம் இங்குக் குறிப்பிடப்படுகிறது.

இடுகுறி காரண மரபோடாக்கம்
தொடர்ந்து தொழில் அல காலம் தோற்றா
வேற்றுமைக் கிடனாய்த் திணைபால் இடத்தொன்று
ஏற்பவும் பொதுவும் ஆவன பெயரே

என்ற நன்னூல் சூத்திரமே (275)

பெயரே வேற்றுமை பெற்று இடம், பால், திணை
காட்டித் தொழில் அலக் காலம் காட்டா
மரபு காரணம் ஆக்கம் குறி என்று
அவை நால் தகுதி ஆகும் என்ப—

என்ற தொ. வி. சூத்திரமாக (53) உருப்பெற்றுள்ளதில் நான்கு மாறுபாடுகளும் அவைகளில் அமைந்துள்ள நுட்பமும் அறியத் தகுந்தவை.

1. நன்னூலார் பெயர்ச் சொற்களை இடுகுறிப்பெயர், காரணப் பெயர், மரபுப் பெயர், ஆக்கப் பெயர் என்று நான்கு வகையாகப் பாகுபடுத்திய பிறகே அதன் பொது இலக்கணக்கூறு களை வரிசைப்படுத்திக் கூறியுள்ளார். பெயர்ச் சொல்லின் பொது இலக்கணத்தை முதலில் குறிப்பிட்டால் பெயர்ச் சொற்கள் எவை என்று வரையறுத்ததாகிவிடும். பின்னரே அவைகளைப் பாகுபடுத்துவது என்பது ஓரளவு சுலபம். எனவேதான் சொற்களில் பெயர்ச் சொற்களை வரையறுத்துவிட்டு அவைகளைப் பாகுபடுத்துவது சிறப்பு என்று முனிவர் கருதியிருக்க வேண்டும். இதுவே தருக்க ரீதியானதும் ஆகும்.

2. பெயர்ச் சொற்களின் வரைவிலக்கணக் கூறுகளை வரிசைப் படுத்தியதிலும் முனிவர் கவனம் செலுத்தியுள்ளார். உடன் பாட்டுக் கூறுகளை முதலிலும், எதிர்மறைக்கூறுகளை அடுத்தும் கூறியிருப்பது, நன்னூலிருந்து மாறுபட்டதும் முனிவரின் உடன் பாட்டு எண்ணத்தைக் காட்டுவதும் வாசகருக்கு எளிமையானது.

3. நான்கு வகையைக் கூறிப் பின்னர் 'தொடர்ந்து' என்ற வினையைக் கொண்டு நன்னூலார் முடித்திருப்பது பொருள் பொருத்தம் இல்லாதது. அதனாலாயே முனிவர் 'தகுதி' ஆகும் (பண்புகளை உடையன) வினைமுற்றை மாற்றியுள்ளார்.

4. 'திணை, பால் - இடம்' என்ற நன்னூல் வரிசையை 'இடம் - பால், திணை' என மாற்றியதும் பொருள் புகுந்தது தான். ஏனென்றால் எல்லாச் சொற்களையும் இட அடிப்படையில் பாகுபடுத்திய பிறகே படர்க்கைச் சொற்களை மட்டும் திணை - பால் அடிப்படையில் பாகுபடுத்த முடியும். எனவே முனிவர் 'இடம்' என்பதை முதலில் வைத்தது இடப்பாகுபாட்டு முறையைக் குறிப்பாக விளக்கிவிடுகிறது. அதே பொழுதில் பால் - திணை என்ற வரிசை முறை சிறப்பானதாக அமையவில்லை. முதலில் 'திணை' அடிப்படையிலும் பிறகே 'பால்' அடிப்படையிலும் சொற்களைப் பகுக்க வேண்டும். இங்கு நன்னூலார் முறை (திணை - பால்) சிறந்தது. இந்த மூன்று இலக்கணக் கூறுகளும் பெயர்ச் சொற்களை நன்னூலார் கூறியதைப் போல 'ஏற்று' வருவதில்லை. அதாவது அவைகளுக்குப் பெயர்ச் சொற்களில் விகுதி இல்லை. எனவே தான் 'ஏற்றல்' என்ற நன்னூலில் உள்ள வினையைக் 'காட்டு' என்ற வினையாக முனிவர் மாற்றி விட்டார். இவையெல்லாம் முனிவர் நன்னூல் கருத்தையும், சொல்லைத் தழுவினாலும் கூடியவரையில் கவனமாக இருந்து மொழி அமைப்பு உண்மைக்கு ஏற்ப சூத்திரத்தை உருவாக்கி யிருக்கிறார் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன.

பெயர்ச் சொற்களின் நான்கு வகையான பாகுபாட்டையும் விளக்கியுள்ளது தொ. வியின் புதுமைகளில் ஒன்று ஆகும். இதற்கு வரலாற்று மூலம் இல்லை என்பதை இலக்கணத் தொகை - சொல் (சுப்பிரமணியம் (1971 - 170) காட்டுகிறது. காரணம் இல்லாதவை மரபுப் பெயர்கள்; ஏதாவது ஒரு காரணத்தால் வருவது காரணப் பெயர்கள்; காரணத்தை நேரடியாகச் சுட்டாமல் காரணப் பெயராகக் கருதத்தகுந்தவை ஆகு பெயர். காரணம் இருந்தாலும் அதன் பயனைக் கொள்ளாதது இடுகுறி.

| காரணம் காட்டாதது | காரணப் பயன் கொள்வது | |
|---|---|---|
| + | + | காரணப் பெயர் |
| — | + | ஆகுபெயர் |
| + | — | இடுகுறி |
| — | — | மரபுப்பெயர் |

இடுகுறி என்பதற்கு உரை அறுமுகன், கறுப்பன் போன்ற சொற்களைச் சான்றாகத் தந்துள்ளது. இது ஒரு வழியில் சங்கர நமச்சிவாயர் குறிப்பிடும் காரண இடுகுறிப்பெயர், இன்னொரு

வகையில் இதுவும் இடுகுறி. முனிவரின் விளக்கம் முன்னதற்கே ஒத்து வருகிறது, ஆக்கப் பெயரை ஆகுபெயராக மயிலைநாதர் கருதியது முன்னரே எடுத்துக் காட்டப்பட்டது. சங்கர நமச்சிவாயருக்கு 'ஆகுபெயர்' என்ற கருத்தில் உடன்பாடு இல்லை.

வேற்றுமை வருணனையில் நன்னூலாரை முழுமையும் தழுவச் செய்கிறார். ஏழாம் வேற்றுமைக்குப் பிறகு வேற்றுமை உருபுகளுக் குரிய மாற்று வடிவங்களை ஒரு சூத்திரத்தில் (64) விளக்கி அடுத்து நான்கு சூத்திரங்களில் சாரியை பற்றி மூன்று சூத்திரங்களும், (65 : 7) கூறி வேற்றுமை ஏற்கும் பெயர்ச் சொற்கள் - குறிப்பாக மூவிடப் பெயர்கள் அடையும் மாற்று வடிவம் பற்றி ஒரு சூத்திரமும் (68) விளக்கிவிட்டே. அடுத்த பத்து சூத்திரங்களில் விளி வேற்றுமையை விளக்கியுள்ளார். சாரியை இடைப் பிறவரலாகக் கூறியது, இலக்கணப் பொருள் உடையது. முதல் ஏழு வேற்றுமை உருபுகள் வரும் போது மட்டுமே சாரியை பெறும் விளி வேற்றுமைக்கு முன்னால் சாரியை வராது என்ற தமிழ் மொழியின் கட்டமைப்பைப் புலப்படுத்தும், இந்த உண்மையை அவரே கொடுந்தமிழ் இலக்கணத்தில் (40 : 47) குறிப்பிட்டுள்ளார். மரம் என்ற சொல் மரத்தை, மரத்தால் என்று முதல் வேற்றுமை உருபு ஏற்கும் போது அத்து சாரியை பெறும். மரமே என்ற விளி வேற்றுமை உருபு ஏற்கும் போது சாரியை ஏற்காது. எனவே ஏழு வேற்றுமை உருபு ஏற்கும்போது மாற்று வடிவம் (நான் - என்னை; நீ - உன்னை) பெறும். எனவே இந்த மொழி அமைப்பு உண்மையைச் சூத்திரங்களின் வைப்பு முறை மூலம் குறிப்பாக உணர்த்தியது சிறப்பு உடையது.

### 5.7.2.2. பகுபதப் பெயரியல்

பெயர் இலக்கணத்தையும் வேற்றுமைகளையும் விளக்கிவிட்டுப் 'பகுபதப் பெயரியல்' என்று பகுபத உறுப்புகளை விளக்குவது சிறப்பாகக் கொள்ள முடியாது, இது சொற் பொதுவியலுக்குப் பிறகு வைத்திருக்க வேண்டியது. இந்த இயல் வைப்பு முறையைப் பற்றி முனிவர் ஏன் கவனம் செலுத்தாமல் விட்டு விட்டார் என்று தெரியவில்லை.

இந்த இயலின் முதல் சூத்திரம் (83 : 1) சொற்பொதுவியலில் (47.1) காணப்படும் ஒரு சூத்திரத்தின் அடியைத் தழுவியது.

பகுபதம் ஒன்றாய்ப் பல ஒருங்கு உணர்த்தி (47.1)

பகுபதம் ஒன்றாய்ப் பல ஒருங்கு உணர்த்தின் (83.1)

பகுபதத்துக்கு இவர் தரும் பொது விளக்கம் என்று மேலே குறிப்பிட்டதால், 'தன் குறி வழக்கம் மிக எடுத்துரைத்தல்' என்னும் உத்தி என்று கருதத் தோன்றுகிறது. மேலும் இந்த இயல் சொற்பொதுவியலோடு தொடர்புடையது என்பதையும் வலியுறுத்துகிறது.

அடுத்த சூத்திரங்களில் விகுதிகள், இடைநிலைகள், பல மொழிச் சொற்கள் 'தத்திநாந்தநாமமாக வரும் பெயர்ச் சொற்களின் மாற்றங்கள்' வடமொழிப் பெயர்களில் வரும் எதிர் மறை விகுதிகள் ஆகியவை விளக்கப்படுகின்றன. இலக்கணக் கோட்பாட்டு நிலையில் சிறப்பாகக் குறிப்பிடும்படிச் செய்தி ஒன்றும் அங்கு இல்லை.

### 5.7.2.3. தொகை நிலைத் தொடர் மொழிப் பெயரியல்

இந்த இயல் தொகைகளாக வருகிற பெயர்களின் விளக்கம், தொகைகளின் வகை. தொகைச் சொற்களில் ஏற்படும் புணர்ச்சி மாற்றங்களின் பொது வகைகள் (இயல்பு, திரிபு, அழிவு, ஆக்கம்) பல்வேறு தொகைச் சொற்களின் புணர்ச்சி மாற்றங்கள் ஆகியவை இங்கு விளக்கப்பட்டுள்ளன. இங்குக் கோட்பாட்டு அளவில் சிறப்பாகக் குறிக்கத்தகுந்த செய்தி ஒன்றும் காணப்படவில்லை.

### 5.7.2.4. பெயர், சுட்டு, வினா

சுட்டுகளின் விளக்கமும், சுட்டுகளிலிருந்து ஒன்றன் பால், பலவின்பால் பெயர்கள் உண்டாகும் விதமும் குறிப்பிட்டுள்ளார். இங்குப் பலவின்பால் விகுதியாக - வ் என்பதைக் குறிப்பிட்டு (அவ், இவ், உவ்), அது அடையும் புணர்ச்சி மாற்றங்களையும், வினாச் சொற்களையும் விளக்கியுள்ளார். 'எவன்' என்பது அஃறிணையில் இரண்டு பாலுக்கும் உரியது (102 ! 3) என்று கூறியவர். 'யார்' என்பது உயர்திணை மூன்று பாலுக்கும் உரியது என்று கூறாமல் ஏன் விட்டு விட்டார் என்று தெரியவில்லை.

### 5.7.3. வினை

இங்குப் பொதுவாக இரண்டு சூத்திரங்கள் உள்ளன. மூன்று வினை முற்று, இரண்டு எச்சம், வினைக் குறிப்பு என்று மூன்று

வரிசையாக வினைகளைப் பகுக்கலாம் என்பதே முதல் சூத்திரம். 'வினைமுற்று ஒரு மூன்று' என்று ஒன்றாகக் குறிப்பிட்டிருப்பதால்

1. முக்கால வினைமுற்று,

2. ஏவல் - வியங்கோள் என்று இரண்டு இயலாகப் பிரித்து இருப்பது சிறப்பானதாகக் கருத முடியுமா? என்று செம்பதிப்பு ஆய்வாளர் யோசிப்பது நல்லது.

வினைமுற்றுக்குக் கொடுத்த விளக்கம் முழுமையாக இல்லை என்று சிந்திக்கத் தோன்றுகிறது.

> பெயரே ஏற்றி மற்று ஒன்றனை வேண்டாது
> ஏற்பது வினை வினைக்குறிப்பு முற்றே—

என்பது தொ. வி. சூத்திரம் (104). 'மற்று ஒன்றனை வேண்டாது' என்று எதிர்மறையாகவும் 'பெயரை ஏற்பது' என்று உடன்பாடாகவும், வினைமுற்றை விளக்கியிருப்பதன் சிறப்பு புரியவில்லை.

முக்கால வினைமுற்று என்ற இயலில் விகுதிகளை விளக்கும் போது எதிர்மறையைத் தனியே விளக்கியிருப்பது (112) சொல்லியல் நிலையில் புதுமையானது. ஏவல் வியங்கோள் இயலில் எதிர்மறைத் தனி சூத்திரம் கொடுத்து அதன் சொல்லியல் முக்கியம் தெளிவுபடுத்தப் பட்டுள்ளது. அப்படியே 'ஈரெச்சம்' என்ற அடுத்த இயலில் வினையெச்சங்களைப் பகுத்திருப்பது சொல்லியல் ஆய்வில் அவர் ஏற்படுத்திய முன்னேற்றமாகக் கொள்ளலாம்.

வினைக் குறிப்பு பற்றிய வரைவிலக்கணச் சூத்திரத்தில் வினைக்குறிப்பைப் பெயர்ப் பகுபதம் என்று குறிப்பிட்டது பொருந்தாது. அரிது, கரிது, மேலது, கீழது, அனையர் போன்ற குறிப்பு வினைகளைப் பெயர்ப் பகுபதமாகக் கருத முடியாது. அரிது, கரிது போன்றவைகளைப் பண்புப் பெயர்களிலிருந்து உண்டானதாகக் கொண்டாலும் மேலது, கீழது, அனையர் என்பவைகளை மேல், கீழ், அனை என்ற பெயர்களிலிருந்து உண்டானதாகக் கொள்ள முடியாது. ஏனெனில் அவை பெயரல்ல; இடைச்சொற்கள். சங்க இலக்கியத்தில் இடைச் சொற்களிலிருந்து குறிப்பு வினை உண்டாக்கியுள்ளதாக விளக்கப்பட்டுள்ளது, (சண்முகம், 1992)

குறிப்பு வினைகள். தெரி நிலை வினை போல இடம் - பால் விகுதி ஏற்கும் என்றும் (124) எச்ச விகுதி ஏற்கும் (125) என்றும்

தனித்தனிச் சூத்திரத்தில் குறிப்பிட்டாலும் அவை சிறப்பு மிகுந்த வை. தெரிநிலை வினையும், குறிப்பு வினையும் காலவிகுதி, இடம் - பால் விகுதி ஏற்கும் என்று தொல்காப்பியர் குறிப்பிட, நன்னூலார் இடம் - பால் விகுதி மட்டும் ஏற்கும் என்றும் குறிப்பிட்டுள்ளார். முனிவர் இடம் - பால் விகுதியும் எச்ச விகுதி யும் ஏற்கும் என்பது சரியான விளக்கம் ஆகும். (முழு விளக்கத் திற்குச் சண்முகம் 1992,102 பார்க்கவும்) சில மாற்று வடிவங் களைப் பற்றியும் இங்குச் சில விளக்கியுள்ளார், (126)

### 5,7.4 இடை

இடைச் சொற்களின் இலக்கணத்தை நன்னூல் வழியே தான் விளக்கியுள்ளார். இருந்தாலும் இங்கு நன்னூலைப் போல இடைச் சொல் வகைகளை முன்னால் குறிப்பிட்டு (420) அதன் இலக்கணத் தைக் கூறாமல் முனிவர் (130) வரிசை முறை மாற்றிக் குறிப்பிட் டுள்ளார். இடைச் சொற்கள் 'முன்னும்' (கால முன்) வரும் என்றதன் இலக்கணச் சிறப்பும், தொல் காப்பியர் 'தத்தம் குறிப்பிற் பொருள் செய்குவ' என்று கூறியதை (இடை 27) நன்னூலார் 'தத்தம் பொருள்' குறிப்பு, (420) என்று இரண்டாகப் பிரித்துக் கூறியதன் சிறப்பும் அண்மையில் விளக்கப் பட்டுள்ளன, (சண்முகம் 1992:194) முனிவர் நன்னூலை ஒட்டியே 'விளங்கு தம் பொருள்' 'குறிப்பு' என்று இரண்டாகக் குறிப்பிட்டுள்ளார். கோட்பாட்டு நிலையில் இடையியலில் வேறு சிறப்பு இல்லை.

### 5.7.5 உரி

உரியியலும் நன்னூலைத் தழுவியதே. ஆனால் இங்கு நன்னூலைப் போல உரிச்சொல், மொழி அமைப்பு நிலையிலே அடையாக வருவது என்று மட்டும் விளக்கி விட்டு அதுபற்றிப் பின்னால் குறிப்பிடாதது பெரிய குறையே. மாறாக உயிர்ப்பண்பு உயிரில்லாத பொருள் பண்பு, இரண்டுக்கும் பொதுவான பண்பு ஆகிய மூன்றை மட்டும் நன்னூலை ஒட்டிப் பேசி உரியியலை முடித்து விட்டது பொது இலக்கணத்துக்கும் விளக்கத்துக்கும் தொடர்பு இல்லாமல் ஆகி விட்டது.

### 5.7.6 தொ. வி, காட்டும் மொழி அமைப்பு

தொ. வி. பெரும்பான்மையும் நன்னூலைத் தழுவியது என்ப தால் ஓரளவு இடைக் காலத் தமிழைப் பிரதிபலிப்பதாகக் கொள்ள லாம். ஆனாலும் நன்னூலில் குறிப்பிடாத 1. மொழிப் பழமைச் செய்திகள் சிலவும் 2. மொழி புதுமை செய்திகள் சிலவும் இருப்பது

குறிப்பிடத் தகுந்தது. அதே சமயத்தில் நன்னூலையும் பிற தமிழ் இலக்கணங்களையும் தழுவிச் சில மொழி மாற்றங்கள் புறக் கணிக்கப்பட்டுள்ளன. அவைகளை, 1. பழமையைப் போற்றுதல், அதாவது பிற்காலத்தில் மறைந்து விட்ட இலக்கணக் கூறுகளையும் இலக்கணத்தில் குறிப்பிடுவது. 2. புதுமையைப் புறக்கணித்தல், அதாவது பிற்காலத்தில் தோன்றிய இலக்கண வடிவங்களைக் குறிப்பிடாதது என்று இரண்டு வகைப் படுத்தலாம்.

### 5.7.6:1 நன்னூலை விடப் பழமை

சுட்டு, வினா ஆகியவை அடியாகப் பிறந்த ஒன்றன்பால் பெயர்கள், எண்ணுப் பெயர்கள் (198, 200) ஆகியவை அன் சாரியை பெறும் என்றும் தொல் காப்பியர்கூற நன்னூலார் சுட்டு அடியாகப் பிறந்த ஒன்றன்பால் பெயர் மட்டுமே அன் சாரியை பெறும் என்று குறிப்பிட்டுள்ளார் (251). வீரமாமுனிவர் தொல்காப்பியரைப் பின்பற்றிச் சுட்டு, வினா ஆகியவை அடியாக ஒன்றன்பால் பெயர்களும், எண்ணுப் பெயர்களும் அன் சாரியை பெறும் என்று (65) குறிப்பிட்டுள்ளார். இடைக் காலத்தில் எண்ணுப் பெயரோடு அன் சாரியை வரவில்லை. (2ம்) அப்பர் தேவாரம். எட்டினால் (1619) எழினொடு (466).

பல; சில என்ற இரண்டு பெயர்களும். பலாம், சிலாம் என்ற மாற்று வடிவங்கள் பெறுவதைத் தொல்காப்பியர் மட்டும் கூறியதை (213) முனிவரும் பின்பற்றியுள்ளார். (31; 3) இந்த வடிவம் நன்னூ லாரால் குறிப்பிடப் படவில்லை.

### 5,7.6.2 நன்னூலை விடப் புதுமை

அதே சமயத்தில் நன்னூலில் கூறாத மொழிப் புதுமைகளை வரலாற்று மாற்றங்களைத் தொ, வி. குறிப்பிட்டுள்ளது. பன்மை வினை முற்று, படர்க்கையில் பலர் பால் வினை முற்று ஆகிய இரண்டிலும் கள் விகுதியும் (பிறவும் கள் என பல ஒழி பன்மையின் மிகலுமாம் - 105.7) ஏற்கும். இடைக்காலத் தமிழில் ஏற்பட்ட மாற்றத்தைக் காட்டும்.

ஈர்கள் — கழிக்கின்றீனீர்கள். அ. தே. 412.1
ஆர்கள் — பிறந்தார்கள். அ. தே. 361.4

2. மன்னோ, மாதோ, ஆல், இன்று ஆகிய புதிய அசை நிலைகளை இடையியலில் (137) குறிப்பிட்டுள்ளார்கள்.

மன்னோ. மாதோ (நா. தி, 3303, 2) ஆன் இன்று 3. பெயர்ச் சொல்லில் எதிர்மறைப் பொருளை உணர்த்த 'நிரு என்பது வட மொழிச் சொற்களில் வரும் (87) என்று குறிப்பிட்டுள்ளார்.

நில் - (நிர்மலர் நா. தி. பி, 829; 2). நின்>நிர்

4. பலவின் பால் விகுதியாக ஐ (84) குறிப்பிட்டிருப்பது

பெரியவை, நடந்தவை

### 5.7. 6.3 பழமையைப் போற்றல்

உகரச் சுட்டு சங்கக் காலத்துக்கு பிறகு மறைந்து விட்டது ஆனால் பிற தமிழ் இலக்கணங்களும் அ. இ. உ, ஆகிய மூன்றும் சுட்டு என்று கூறியுள்ளதைப் பின்பற்றித் தொ. வி. யும் (106) குறிப்பிட்டுள்ளது.

### 5.7.6.4 புதுமையைப் புறக்கணித்தல்

சங்க காலத்தில் சிறுபான்மை வழக்குகளாய் இடைக்காலத்தில் பெரு வழக்காகி விட்டவைகளைத் தொல் காப்பியம் முதலிய தமிழ் இலக்கணங்கள் புறக்கணித்தே வந்துள்ளன.

நியதி வினையெச்சமாக, செயின் என்பதோடு செய்தால் என்ற வாய்ப்பாட்டு வடிவங்கள் சங்க காலத்தில் சிறுபான்மையாக வும். பிற்காலத்தில் பெரும்பான்மையாகவும் வழங்கி வந்தாலும் செய்தால் வினையெச்ச வாய்பாட்டைத் தமிழ் இலக்கணங்கள் ஏற்றுக் கொள்ள வில்லை. அப்படியே செய்யும் என்னும் வாய்பாடு ஏவல் பன்மை வினை முற்றாகத் தமிழில் பயின்று வந்தாலும் தமிழ் இலக்கணங்கள் அதை ஏவல் பன்மை வடிவமாகக் குறிப்பிட வில்லை.

நீம்/நீங்கள் என்ற வடிவம் பல்லவர் காலத்திலிருந்து இலக்கிய வழக்குக்கு வந்து விட்ட வடிவம். எல்லா மரபுத் தமிழ் இலக்கணங் களும் முன்னிலைப் பன்மை வடிவமாகக் குறிப்பிடாமல் போய் விட்டன.

### 5.7.6.5 மொழியியல் புதுமை

வீரமாமுனிவர் இதுவரை தமிழ் இலக்கண நூல்கள் கூறாத சில கோட்பாட்டுப் புதுமைகள் ஆங்காங்கே சுட்டிக் காட்டப் பட்டன, ஆராய்ச்சி நிலையில் 1, வினையெச்ச விகுதிகளை உடன்பாட்டு விகுதிகள், எதிர்மறை விகுதிகள் ஆகிய இரண்டிற்குரிய விகுதிகளைப்

பகுத்துக் காட்டியது மொழியியல் புதுமையாகக் கருதலாம் (119 (121). 2. எஞ்சிய விகுதியை நேரடியாக ஓரிடத்தில் குறிப்பிட்டுள்ளார். எதிர் மறை வினை முற்றுகளை (செய்யேன், செய்யாய் செய்யான்) பகுக்கும் போது பகுதி+இட, பால் விகுதி என்ற உறுப்புகளே உள்ளன. எனவே எதிர் மறை உணர்த்த எதிர் மறைக்கு 'இடை நிலை இன்றி ஒன் ஓம்' (112) என்று விளக்கியுள்ளதால் பகுதி+θ+விகுதி என்று மூன்று உறுப்பு இருப்பதாகப் படைத்துக் காட்டியுள்ளார்.

3. குறிப்பு வினை எச்ச விகுதி ஏற்கும் (125) என்பதும் மொழியியல் புதுமையே ஆகும்.

4. பெயர்ச் சொற்களில் இடை நிலை உண்டு என்று குறிப்பிட்டது (85) மற்றொரு புதுமையாகும்.

# துணை நூல்கள்


அகத்தியலிங்கம், ச. 1979, மொழியியல் பெயரியல் அண்ணாமலை நகர்.

" 1982 மொழியியல் சொல்லியல் II வினையியல், அண்ணாமலை நகர்.

அகத்தியலிங்கம், ச. & சண்முகம், செ. வை. 1970 The language of Tamil inscriptions. 1250-1350 A.D அண்ணாமலை நகர்.

அண்ணாமலை, இ. 1980 Simplification as a process of modernization' pp 1-12 in Sociolinguistics and Dialectology (semaster papers (Ed Agesthiyalingam & Karunakaran), Annamalai nagar.

இளங்குமரன், இரா. 1988 இலக்கண வரலாறு, சென்னை,

இளவரசு, சோம. 1963 இலக்கண வரலாறு, சிதம்பரம்.

இன்னாசி, சூ (பதிப்பு) 1979 வீரமாமுனிவர் அருளிய சதுரகராதி தூத்துக்குடி. இரண்டாம் பதிப்பு, 1989. சென்னை.

" 1984 இலக்கணச் சிந்தனைகள், சென்னை.

" & விக்டோரியா. ஜே பி (பதிப்பர்) 1990 தமிழியல், சென்னை.

சண்முகம், செ.வை. 1971 The pronunciation of Tamil in the 19th Century Āyvukkōvai, pp-270-74 Annamalainagar

1973, 'The pronunciation of Tamil Consonanta in the 19th century' Prof. Narayanasamy Naidu Commemmoration Volume, Kovilpatti.

" 1978 எழுத்துச் சீர்திருத்தம், அண்ணாமலை நகர்

" 1980 எழுத்திலக்கணக் கோட்பாடு, அண்ணாமலை நகர்

" 1981 'தொன்னூல் விளக்கச் சொல்லதிகார முதல் நூற்பா' ஆய்வுக் கோவை 13.2.314-8

" 1984 சொல்லிலக்கணக் கோட்பாடு-I அண்ணாமலைநகர்

1986 சொல்லிலக்கணக்கோட்பாடு -II அண்ணாமலை நகர்

,, 1987 'சொல் விளக்கமும் பாகுபாடும் இலக்கண வரலாற்று நோக்கு' —தமிழாய்வு புதிய அணுகு முறைகள் (பதிப்பர் கருணாகரன் மற்றும் பிறரும்), 33-52 கோயம்புத்தூர்

,, 1991 'Tr. Beschi's Contribution to Tamil linguistics' **Journal of the Annamalai University**, Humanities. vol. 35 & 36 pp. 137-46

,, 1992 'இலக்கண சமூகவியல்' புலமை, 18.19-3

,, 1993 'தற்காலத்தமிழின் இலக்கண மரபு' பிராந்திய மொழியியல் கருத்து, கொழும்பு.

சாலினி இளந்திரையன், 1985 'இத்தாலியத் தமிழரின் எழுத்துச் சீர்மைப்பணி' வீரமாமுனிவம் ப. 40-7

சுப்பிரமணியன், ச.வே. 1965 **Descriptive grammar of Cilappatik aram**, Madras

,, 1667 இலக்கணத் தொகை எழுத்து, நாகர்கோயில்

,, 1971 இலக்கணத் தொகை சொல், திருவனந்தபுரம்

,, 1978 தொன்னூல் விளக்கம் திறனாய்வு. மூலம், விளக்கம், சென்னை

ஞானப்பிரகாசம், வி மு & அறவாணன், க.ப (பதிப்பர்) 1985. வீரமாமுனிவம், சென்னை

ஞானசேகரன், ஆ. 1981 தமிழகமும் ஜெர்மானியரும், காரைக்குடி

மோகனவேலு, செ.சு. 1992 '300 ஆண்டுகளுக்கு முன் ஜெர் மானியை வியக்கவைத்த, தமிழ்புதையல்' —ஆனந்தவிகடன்

வீரமாமுனிவர், 1838 தொன்னூல் விளக்கம் மூலமும் உரையும் (பதிப்பர் வேதகிரி முதலியார்), புதுவை

வேங்கடசாமி, மயிலை சீனி, இ.ப. 1936 கிறிஸ்துவமும் தமிழும் சென்னை 1938

,, 1962 பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், சென்னை

ஆங்கிலம்

Beschi, C.J. 1728 **A Grammar of the Common Dialect of the Tamil language Called Koduntamil.** Eng. T.G.W. Mahon, Oxford, Reprint Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Thanjavur. 1971

" 1730 A Grammar of the High dialect of the Tamil language termed Shentamil to which is added to An introduction to Tamil poetry. Eng Tr. B.G. Babington 2nded Thiruchy. 1917.

Caldwell, R. (IIed) 1856 A Comparative grammer of the Dravidian or South Indian family of languages 3rd ed. Reprint, Madras. 1956.

Chatterji, S-K. 1956 'Old Tamil Ancient Tamil Primitive Dravidian' Tamil Culture 5. 148-74.

Dictionarium Latino—Gallico—Tamlicum. Pondicherry. 1846.

Lehman, A. 1961. 'The German contribution to, Tamil Studies' Tamil Culture. IX 109-16.

Meenakshisundaram, K. 1974. The Contribution of European Scholars to Tamil, Madras.

Meenakshisundaram, T.P. 1961 Collected Papers of Prof, T.P. Meenakshisundaram, Annamalainagar.

" 1965. A history of Tamil language, Poona.

Penzl. H. 1951 'The evidance for phonemic Change Studies Presented to On his 60th birthday, PP. 193-288.

Subrahmaniyam, P.S. 1983, Dravidian Comparative Phonology Annamalai nagar.

Thaninayakam, Xavier, S. 1953 'Tamil manuscripts in European libraries' Tamil Culture III 219

" 1958 'The first books printed in Tamil' Tamil Culture VII 288-308.

" 1964 'Antuode Proenca's Tamil - Portuguese Dictionary, 1679' Tamil Culture. XI. 117-26.

Trudgill, P 1974, Sociolinguistics : An Introduction, Harmondsworth.

Ziegenbalg, B. 1716 Grammatica Damulica, Halle.

Zvelebil, K. 1955 'A Czech missionary of the 18th Century as author of a Tamil grammar 'Tamil Culture' IV. 337-40,

# சிறப்புச் சொல்லகராதி

(எண்—பக்க எண்)



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை-600113
தொலைபேசி : 2350992

## கிறித்துவமும் தமிழும் அறக்கட்டளை வெளியீடுகள்

**விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் (ஒப்பாய்வு)**

டாக்டர் மு. தெய்வநாயகம்
நவம்பர் 1985, XVI + 334, ரூ 20

சமயங்கள் பலவாக இருந்தாலும் அவற்றின் குறிக்கோள் ஒன்றே என்பதைப் புலப்படுத்து முகத்தான் விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்தம் இவற்றிடையே உள்ள ஒருமைப்பாடுகளை இந்நூல் விளக்குகிறது.

**கிறித்துவமும் தமிழகமும்**

டாக்டர் சூ. இன்னாசி
ஏப்ரல் 1990, VIII + 128, ரூ 15

குறிப்பிட்ட சமயத்தால் குறிப்பிட்ட இனம் பெற்ற பயனைத் தெளிவுறுத்தும் இந்நூல், கிறித்துவத்திற்கும் தமிழுக்கும் இருந்து வருகின்ற தொடர்பினை மதிப்பீடு செய்வதற்கான ஒரு கால்கோள் முயற்சி.